4

உ

கணபதி துணை.

இஃது

# திருத்தவஸயூர்த்தலபுராணம்

மூலமும் உரையும்.



அத்தலத்தில் வசித்தவரும் எஜுர் வேதியருமாகிய ப்ரம்ஹஸ்ரீ

ஸ்ரீ திவாசபாரதி சுவாமிகளால்

இயற்றியருளியது.



அஃதை

சிக்கத்தம்பூர்பாளையத்திலிருக்கும் மகா-ள-ள-ஸ்ரீ வித்துவான்

முத்துவீரமரெட்டியாரவர்கள் முன்னிலையில்

பரிசோதிக்கப்பட்டு



முசிறி தாலுக்கா தண்டலை கிராமத்திலிருக்கும்

மகா-ள-ள-ஸ்ரீ போஜரெட்டியார் என்கிற

குப்புரெட்டியாரவர்களால்



திரிசிரபுரம்

“ஸதரான் ஸ்டார் அச்சுக்கூடத்தில்”

பதிப்பிக்கப்பட்டது.

சோபகிருது-௵ வைகாசி௴.

1903.

 இப்புத்தகம் வேண்டியவர்கள் முசிரிதாலூகா தண்டலையூர் கிராமத்திலிருக்கும் குப்புரெட்டியாரவர்களிடம் பெற்றுக் கொள்ளலாம்.

சிவமயம்.

# முகவுரை

---

திருத்தலூரென்று உலகில் வழங்குகின்ற ஸ்ரீசிர்ஷபுரியென்னும் திருத்தலையூர்த்தலபுராணம. இத்தலம் மூவர்களுமருளிச்செய்த திருப்பதிகந் தற்காலமிறந்திருக்கினும் வைப்பு ஸ்தலமென்பதற்கு ஸ்ரீருத்ரபசுபதி நாயனார் முத்தியடைந்திருப்பதாளு[illegible] இவ்வடிகளே சுந்தரமூர்த்திகள் திருத்தொண்டத்தொகையில் "மும்மையாலுலகாண்ட மூர்த்திக்குமடியேன் முருகனுக்கு முருத்திரபசுபதிக்குமடியேன், என அடியார் பெயருமசேக்கிழார் சுவாமிகள் பெரியபுராணம உருத்திரபசுபதிநாயனா புராணத்தில்" நிலந்திளோங்கிய சிவந்தெழுபெரும் புனற்சித்த மலர்க்கடப்பணை வயல்பரு பொன்னிநன்னாட்டுக் குலத்தினோங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித் தலத்தின் மேம்படு நலத்தது பெருந்திருத்தலையூர், என வூரையுங் குறித்தலின் முக்குற்றத்தினின்றுந் தேறறபாலதே எனவுரை ஆன்றோர் சேக்கிழார் சுவாமிகள் வாக்கினும் நெற்றெனவுள்ளங்கொள்வார் இத்தலம் வைப்புத்தலங்களிலும ஒப்புநலமாதல் காண்க.

இந்தப்புராணஞ் செய்தவர் கலி ௪௯௪௨-ல் அந்தலத்தின்கண்ணிகழ்ந்தவரும் எஜுர் வேதியருமாகிய பிரமஹஸ்ரீ ஸ்ரீநிவாஸபாரதிஸ்வாமியாலியற்றியருளியதை அந்தலத்திற்கடுத்த தண்டலையென்னும் ஊரில் வஸிக்கின்ற மிராசுதாரராகிய மகா-ள-ள-ஸ்ரீ குப்புரெட்டியாரென்கிற போஜரெட்டியாரவர்கள் வேண்டுகோடலின்படி. சிக்கத்தம்பூர்ப்பாளையத்திலிருக்கும்வித்வான் மகா-ள-ள-ஸ்ரீ முத்துவீரமரெட்டியாரவர்கள் முன்னிலையில் ஸ்ரீகுங்குமாடபிகை ஸப்தரிஷீசுரருட்டுணைகொண்டு பரிசிலனை செய்ததில் யான் அவ்வவ்விடங்களிலாண்டதற்கடையாளஞ்செய்யப்படவில்லை. இரண்டு பாடல் சந்திந்திருப்பதற்கு O இப்புள்ளி செய்யப்பட்டிருக்கிறது. இந்நூலாசிரியா முனிவர் பூசித்தலான். இருடீசனென்றும சத்திருடீசனென்றும் ஸப்தரிஷிகள் பூசித்தலான் சப்தரிஷீசனென்றும் செய்யுட்களில் வழங்குவார்போலும் முதலத்தியாயத்தில் நாடுவளம் நகர்வளங்களுந் தொகுத்துளார்போலும் சிவமே பொருளென்பதும் சத்தியேயதனருள் என்பதும் இதில் தெருள் செய்கின்றார். இப்புராணத்திலென்கருத்தெட்டிய வளவுகுற்றந் தோன்றுவாறு ஞற்றினனிதன் வழுஉக்களைந்து யாங்காங்குணர்ந்த வான்றோர் பொறைகொண்டமைத்துக் கொள்வரென்றூராயத்துணிந்ததன்றி வேறின்றென் றுணர்க தமிழ்க்கல்விக்கடற்குக் கழியன்னவனுயினன்.

இங்ஙனம்

தி. பிரம்ஹஸ்ரீ. அ. நரஸிம்ம பாரதி.

சிவமயம்.

# திருத்தலையூர்ப்புராணம்-மூலமும் பொழிப்புரையும்.

---

## கடவுள்வாழ்த்து.

### விநாயகக்கடவுள்.

கங்கைதங்கிய வேணிக்கடவுளார்
தங்குசீர்த்தலையூர் தனைசாற்றுமெய்
பொங்குமாரியரு செந்தமிழ் போற்றிட
வைங்கரன் றிருத்தாளகத் தேத்தியே.

### வழிபடுகடவுள்-வேறு.

சுத்திகரன்யாதுவர பங்கமுறை சொல்வான்
முத்திகருதுந்தரும முப்பதோடிரண்டுஞ்
சித்திகரி யீன்றருள்செய சேயன்முன் னுதித்த
வத்திமுகன் மாமலரடிக்கடி நினைப்பாம்.

### பொழிப்புரை.

பாஞ்சஜென்யத்தைக் கையிற்கொண்ட மஹாவிஷ்ணுவினால் இராட்சதனாகிய விராவணன் வரத்தைப்பெற்றுக்கொண்டு போகையில் அந்த வரத்தைப்பங்கஞ்செய்த சரித்திரமாகிய திருத்தலையூர் ஸ்தலபுராணஞ்சொல்வதற்கு முத்திக்குவித்தாகிய முப்பத்திரண்டு தர்மங்களையுஞ்சித்திசெய்கின்ற பார்வதிதேவியாராற் பெற்றருளிய சிவசுப்பிரமணியக்கடவுளுக்கு ஜ்யேஷ்டராக அவதரித்தருளிய ஆனைமுகவிநாயகக்கடவுளின் வீரகண்டையணிந்த தாமரைமலர்போலுந் திருவடிகளை சதாகாலமும் தியானிப்போம் - என்றவாறு. (யாம்) தோன்றாவெழுவாய். (உ)

### நிட்களசிவம்-வேறு.

ஆதியாயண்டமாகி யண்டத்துட்புவனமாகி
யோதிநீர்கடலுமாகி யொளியழலுயிர்களாகி
நீதியாகாயமாகி நிட்களவடிவமாகிச்
சோதியாய்நின்றஞானச் சுடர்தனைப்போற்றல்செய்வாம்.

பொழி + ரை.

ஆதியாகியும் அண்டமாகியும் அந்த அண்டகோடிகளுக்குள் தோன்றிய வேறான பிருதிவிமுதலான பொருள்களாகியும் மகாமேரு முதலாகிய மலைகளாகியும் அப்புரூபமாகியும் இலவணம்-இட்சுச்சாறு-சுரா-தயிர்-பாற்கடல் சுத்தோதகம் என்னும் ஏழு கடல்களாகியும் தேஜோரூபமாகியும், அக்கினியாகியும், பிராணனாகியும், வாயுவாகியும், வழியாகிய ஆகாசமாகியும், அத்வைதரூபமாகியும், தீபவடிவாகி நின்றறருளிய ஞானவொளியாகிய நிட்கள சிவத்தைத்தோத்திரஞ் செய்கின்றேன்-என்றவாறு. (௩)

சகளசிவம்.

எவ்வுயிர்க்குயிராய்நின்று மேகமாயில்லாதாகி
யொவ்வுமோவார்க்கொளியாய்த்தோன்றி யுவமையில்வடிவமா
துவ்வுவார்க்கணைதலாகிச் சுடர்மதியரியாகி [கிந்
யிவ்வுருவெல்லாந்தானா யிருக்குமக்கடவுள்போற்றி.

பொ + ரை.

எவ்விதமான வுயிர்களுள்ளும் பிராணனாக நிலைபெற்றிருந்தும் ஏகமாகியும் சூன்யமாகியும் புலாதிகளையடக்கிய தவமுனிவோர்களுக்கு உள்ளொளியாகியும் நாமரூபமில்லாத லிங்கவடிவாகியும் சுவானுபூதியடைந்தவர்கண் சேர்ந்ததாகியும் சூரியசந்திராக்கினிகளாகியும் இந்த ரூபங்களுடனே சகலமுந் தானேதானாயிருக்கின்ற அந்த சகளசிவத்தைத் தோத்திரஞ்செய்கின்றேன். (௪)

வேதபுருடன்.

அனையபல்கோடியண்டமானவண் டத்தின்வேறாய்ச்
சுனைபுனல்போலத்தோன்றுஞ் சுரர்முதலெழுபேதங்க
ளினையளித்தாண்டங்கங்கே யிருந்தருள்தானே தானாய்த்
தனியினின்றோங்குகின்ற சதுமறைமுடியையுள்வாம்.

பொ + ரை.

விளங்கிய அத்தன்மையாகிய அநேககோடி யண்டங்களாகியும் அந்தவண்டங்களினின்றும் அநேகபேதமாகிய மலையருவியைப்போலே யுற்பவிக்கின்ற தேவர்கள், நரர், மிருகம், செந்து, பட்சி, சிலை, மரம் என இந்த ஏழு பேதங்களையும் பெற்றருளி அவ்வவ்வவைகளிருக்குமிடங்களிற் காத்தும் அருள்வடிவேதானாகி யொப்பில்லாமலிருந்துயர்ந்த வுபநிடதப்பொருளைத் தியானஞ்செய்வோம். (௫)

நடேசர்.

மரையயன்கஞ்சந்தட்ட மகதியாழ்முனிவன்மீட்ட
வரியுந்தண்ணுமைமுழக்க வமரர்பல்லாண்டிசைப்ப
வரிப்புலிப்பாதன்பாம்பும் வணங்கவம்பலத்துணட்டம்
புரிசிலம்பொலித்தாளிணைத்தம் போற்றிநேர்தொழுதல்செய்

பொ + ரை.

தாமரைப்பூவையுடைய பிரமதேவன் தாளம்போடவும் நாரதமுனி வர் மகதிவீணையை வாசிக்கவும் விஷ்ணுமூர்த்தி மத்தளமடிக்கவும் தேவர் கள் வாழ்த்தித் துதிக்கவும் வியாக்கிரபாதமுனி பதஞ்சலிமுனிவரும் வணங் கிநிற்கவும் சிற்சபையின்கண் நடித்தருள்கின்ற நூபுரநாதத்தையுடைய திரு வடியை நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்வோம்.என்றவாறு. (சு)

மகேசுவரர் - வேறு.

திருத்தலையூர்த்தலமாண்பு சேடன்பன்னாவாலு
முரைத்திடவடங்காத வுண்மைதிகழ்புராணத்தின்
பொருட்களையான்சிலதெரிந்து புன்மொழியினாற்புகல
வரிக்குமனத்தெட்டாத வரனடியைத்தொழுதேய்வாம்.

பொழி + ரை.

திருத்தலையூரின் பெருமையை ஆதிசேஷன் ஆயிரம் நாவினாலும் சொ ல்லிமுடியாத மெய்ம்மை விளங்கிய புராணத்தினுள்ளிருக்கும் பொருள்க ளிற்சிலதை யான் தெரிந்துகொண்ட அற்பமாகிய தமிழ் மொழியினாற்சொ ல்வதற்கு விஷ்ணுமூர்த்தி மனத்திற்குமெட்டாத பரஞ்சோதியின் திருவடி களை வணங்கியிருப்போம்-என்றவாறு. (எ)

சிற்சத்தி - வேறு.

அண்டமகிலம்புவனமனையசரா சரங்கள்வயின்
முண்டகத்திலமைத்தீன்ற முக்கணுமைதிருமுன்னர்
அண்டரயனரிகுலிச னணிமகுடமோடிழையத்
தெண்டனிடுமலர்ப்பதங்க டேடிமனத்தினிற்சேர்ப்பாம்.

(அ) பாயிரம்.

பொ + உரை.

அண்டங்களையும் அகிலங்களையும் புவனங்களையும அதுவாகிய சராசரங்களோடும் திருவயிருகிய தாமரைப்பூவின்கண் வைத்தும் பெற்றுமருளிய மூன்று கண்களையுடைய பரமேசுவரியின் சந்நிதானத்தில் தேவர்களும் பிரமதேவனும் விஷ்ணுமூர்த்தியும் இந்திரனும் தங்கள் அழகிய மகுடங்களுடனே கிரீடங்கள் தாக்கும்படி நெருங்கி வணங்குகின்ற தாமரைமலர்போலுந் திருவடிகளை யாராய்ந்து எம்மனத்தின்கண் தரித்துக்கொள்வோம். (அ)

தக்ஷிணாமூர்த்தி-கலைமகள்-நவக்ரசம்-துர்ச்கை-வேறு.

சிகரவடவானிழலிருந்து செப்புங்குருவின்றாள்போற்றி
யகரமுதலாமக்கரத்தாலாயுங்கலைக ளெட்டெட்டும்
பகரும்பனுவலாட்டியையும் போற்றிப்பருதிமுதற்கோளைப்
புகழ்வான் மயிடன்றனைத்தொலைத்தாள் பொன்னங்கழல்க
டோத்தரிப்பாம்.

பொ + உரை.

கைலையங்கிரியினுச்சியின்கண் கல்லாலநிழலிலிருந்து ஸநகர் முதலாகிய நான்குமுனிவருக்குபதேசிக்கின்ற தட்சிணாமூர்த்தியைத்துதித்து அகாரமுதலாகிய அக்ஷரங்களாலாராய்ச்சி செய்கின்ற அறுபத்துநாலுகலை ஞானங்களையுஞ் சொல்கின்ற கலைமகளைத்துதித்து சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, ராகு, கேது என்னும் நவக்ரங்களைத்துதித்து மகிடாசுரனை நிக்ரகித்த துர்க்காதேவியினது பொன்போலும் அழகிய திருவடிகளையுந் துதிசெய்கின்றோம். (க)

ஸப்தரிஷீசர் - வேறு.

கங்கைவார்சடைக்கரந்து கரத்தின்மான்மழுவையேந்தி
மங்கைபாகத்தான்கைலை வரனெழுமுனிவர்க்காக
அங்கையாமலகத்தேழிருடீசனைத் தலையூர்வர்தோன்
பங்கையாங்கிரியிரண்டும் பரிவொடும்மனத்திற்சேர்ப்பாம்.

பொ + ரை.

கங்காநதியை நீண்டசடையில் மறைத்துத் திருக்கைகளில் மான்மழுப்படையையும் ஏந்திக்கொண்டு பார்வதியையும் வாமபாகத்தில் வைத்தருளிய ஸ்ரீகைலாசபதியானவர் ஸப்தரிஷிகளுக்காக உள்ளங்கை நெல்லிக்கனி

போலச் சத்தரிஷீசனென்று திருத்தலையூரின்க ணெழுந்தருளிய இலிங்கமூர்த்தியினது தாமரைமலர்போலுந் திருவடி யிரண்டையும் அன்புடனே எம்மனத்தின்கண் வைத்துக்கொள்வோம். (௰)

## குங்குமாம்பிகை.

பற்பமுற்பலமுநெய்தல் படிமடுமருதஞ்சூழ்ந்து
கற்புகோபுரவிமானங் காட்டிடுங்கோயின்மேய
சற்பபூடணனுர்வாமஞ் சார்திருத் தலையூர்ஞானக்
கற்பகக்குங்குமாம்பி கையினடி முடிமேறக்கொள்வாம்.

## பொ + ரை.

தாமரையும், செங்கழுநீரும், கருநெய்தலுமுண்டாகின்ற சரசுகளும் நன்செய்வயல்களுஞ் சூழப்பெற்று மதிளும் கோபுரமும் மேடையுந் தெரிவிக்கின்ற ஆலயத்தின்கணெழுந்தருளிய நாகபூஷணராகிய ஸப்தரிஷீசரிடப்பாகத்திலிருக்குந் திருத்தலையூர் ஞானகற்பகத்தருவாகிய ஸ்ரீகுங்குமாம்பிகையினது திருவடிகளை யெமது சிரசிலணிந்துகொள்வோம். எ + று. (௰௧)

## தலவிநாயகர்-வேறு.

இமையவரும்விஞ்சையரும் எண்டிசையிலுள்ளவரு
மமுதமதியிரவிகளு மட்டவசுக்களும்மருத்தேக்
கமலமல ரயனெடுமே காதசருத் திரர்மாலு
முமையவடந்திடுங்களிற்றை யோதிடயா னேதினமே.

## பொ + ரை.

முப்பத்துமுக்கோடிதெவர்களும் வித்தியாதரர்களும் அஷ்டதிக்பாலர்களும் சந்திரசூரியர்களும் அஷ்டவசுக்களும் வாசனையுந் தேனையுமுடைய தாமரைப்பூவில் வசிக்கின்ற பிர்மதேவனுடனே ஏகாதசருத்திரர்களும் விஷ்ணுமூர்த்தியும் காரியாரம்பத்தின்முன் பார்வதியார் பெற்றருளிய யானைமுகக்கடவுளை தோத்திரஞ்செய்வது தெரிந்து நானுந்தோத்திரஞ் செய்வேன். எ + று. (௰௨)

## சண்முகக்கடவுள்-வேறு.

கமலசன்வினையைச்செய்துங் கானகன்னியைப்புணர்ந்துஞ்
சிமிலத்துளவுணர்சேனை சிதறவீராறுகையி
லுமையவளளித்தகூர்வே லொள்ளியபடையுந்தாங்கி
யமரர்க்குயரந்தீர்த்த வறுமுகக்கடவுள்காப்பாம்.

போ + ரை.

தாமரைப்பூவிலுண்டாகிய பிரமதேவன் சிருட்டிக்குந்தொழிலைத் தான் செய்தும் தினைப்புனத்தில் வாசஞ்செய்யும் வள்ளிநாச்சியாரை மணஞ்செய்தும் க்ரௌஞ்சமலைக்குள்ளே ஆசுரசேனைகளைத் தோல்வியடையும்படி பார்வதிதேவியாரால் தரப்பட்ட கூர்மையுங் காந்தியையுமுடைய வேலாயுதத்தைக்கைக்கொண்டு தேவர்துன்பங்களை நீக்கியருள்கின்ற ஷண்முகக்கடவுளே எனக்கு ரட்சணையாகும். எ + று. (யரு)

## வீரபத்திரக்கடவுள்.

அம்பிகைவேள்விநோக்க வரனுதறனிலுதித்துத்
தும்பியேரம்பற்காக்கி சூட்டிமைத் தலைதக்கற்கு
மம்பிறைதேய்த்துமாலு மலைகடலொளிப்பப்பானு
வெம்பிடவெயிறுவீழ்த்த வீரபத்திரற்றுதிப்பாம்.

போ + ரை.

தாட்சாயணியானவள் தட்சப்ரஜாபதி யாகம்செய்யவும் அதைப்பார்க்கச்சென்றஅவள் மனஞ்சலித்துக்கொள்வதுதெரிந்த பரமசிவன் கோபாக்கினியினின்றுண்டாகி அந்தயாகத்தில் வந்தவர்களாகிய அநேகந்தேவர்களில் பிள்ளையாருக்கு யானைத்தலையை வைத்தும் தட்சனுக்காட்டுத்தலையை வைத்தும் அழகிய சந்திரனைக்காலினாற்றேய்த்தும் விஷ்ணுமூர்த்தி யிது தெரிந்து அலையினையுடைய சமுத்திரத்தில் ஒளிந்துகொள்ளவும் சூரியன் மனங்கொதிக்கும்படி பற்களையுதிர்த்தருளிய வீரபத்திரக்கடவுளைத் தோத்திரஞ்செய்வோம். (யச)

## தண்டீசர்-சுந்தரமூர்த்தி-ஞானசம்பந்தர்-அப்பர்-மாணிக்கவாசகர்

தந்தைகாறடியச்செய்த சண்டியின்பாதம்போற்றி
யெந்தையைப்பரவைதூதுக் கேவினனிணைத்தாள்போற்றி
விந்தைசெய்யமணர்கூட்ட மெலிவுதீர்த்தாரைப்போற்றிக்
கந்தையில்வெந்தைவாங்கக் கண்டவனடிகள்போற்றி.

போ + ரை.

தகப்பன்காலைவெட்டிப் பதவிபெற்ற சண்டேசுரர் பாதங்களைத் துதித்து என்னப்பனாகிய ஈசனைப் பரவைநாச்சியாருடல் தணியத்தூதனுப்பிய சுந்தரமூர்த்திகளிரண்டு பாதங்களையுந்துதித்து ஜாலஞ்செய்து மயக்குகின்ற சமணர் கூட்டங்களினாலாகிய வருத்தத்தை நீக்கிய ஞானசம்பந்த

மூர்த்தியையும் அந்தச்சமணர் கூட்டத்திற்கூடும் வருத்தம் நீக்கிய அப்பர்சுவாமிகளையும் துதித்து சோமசுந்தரக்கடவுளைக் கந்தைத்துணியிலே பிட்டைவாங்கும்படிச் செய்தருளிய மாணிக்கவாசக சுவாமி திருவடிகளையும் தோத்திரஞ்செய்கின்றேன். எ+று. மூன்றுமடிக்கண் சம்பந்தர் அப்பரிருவரையுங்குறித்து னின்றன. (௰௫)

நந்தீசர்-வேறு.

சோதிவெண்கயி லைப்பதி தனைத்தொழுஞ் சுரர்பொன்
னாதியானிழைத் திடுமணி முடிகளைச்சிதறிப்
போதி போதியாய்க்குவாலிடப் புடைத்திடுங்கரத்திற்
சாதிநீதியிற் றரித்தரு ணந்திதாடொழுவாம்.

பொ + ரை.

பிரகாசமாகிய வெள்ளியங்கிரியில் எழுந்தருளிய பரமேசுவரனை வணங்கவருகின்ற தேவர்களது பொன் முதலியதுகளாற்பதித்த ரத்நகிரீடங்களை உதிர்த்து மலை மலையாக்குவியும்படியடிக்கின்ற திருக்கையிற் பிரம்பைமுறைப்படி வைத்திருக்கின்ற நந்தீசர் திருவடிகளை நமஸ்கரிப்போம். (௰௬)

கடவுள் வாழத்து முற்றும்.

அவையடக்கம்-வேறு.

அலைகடலி னமுத மடங்கலுங்
குலவு நாவிற் குறைத்திடுவேனென
வுலவுஞானியங் குற்றதொப்பாகுமா
னலமிலேனிப்பனுவனவில்வதே.

பொ + ரை.

அலையை வீசுகின்ற பாற்சமுத்திரத்தை முழுவதும் ஒரு திரிகின்ற சுவாவானது தன் வளைந்த நாக்கினாலுண்டுவரளச் செய்வேனென்று அந்தச் சமுத்திரத்துக்குச் சென்றிருந்ததையொப்பாகும் - அஞ்சிலக்கணப்பயிர்ச்சியினுயர்வில்லாத நான் இந்தப்புராணத்தைச் சொல்லப்புகுவது. எ+று. (௰௭)

தளர்வில்காத்தலையூர்த் தலத்தென்சொலைக்
குளவி யோர்புழுக் கொண்டுதன்னுக்கலின்
வளமிகுந்த விலக்கணநூல்வலோ
ருளமகிழ்ந்துகொண் டொப்புவரின்றரோ.

பொ + உரை.

செழித்திருக்கின்ற திருத்தலையூர் தலபுராணத்தில் எனதுரையாகிய சொல்லையும் குளவியானது ஒரு புழுவைக்கொணர்ந்துவைத்து அதை தனதுருவாகச் செய்வதுபோலவே மாட்சிமை மிகுந்த ஐந்திலக்கணங்களில் தெளிந்த மேலோர்கள் மனது மகிழ்ச்சியடைந்து ஒப்புக்கொள்வார்கள் இந்நாள். எ + று. அரோ-அசை. (யஅ)

சிறப்புப்பாயிரம்-வேறு.

ஆயிரநாவீற்சேட னமரர்கட் குரைத்தகாதை
தூயதாற் பியரைவர்க்குஞ் சொல்வடமொழியையாய்ந்து
வாயிருமறைவை தீகம்வளர்சீநிவாசன்றென்சொல்
பாயிர முடன்பன்னொன்று பகுதியும் பகர்ந்தானன்றே.

பொழி + ரை.

ஆதிசேடனாயிரநாவினாலுந் தேவர்களுக்குச் சொல்லிய கதையை நின்மலராகிய தால்ப்யமுனிவர் பஞ்சபாண்டவருக்குச் சொன்ன அந்தவடசொற்புராணத்தின் பொருளை யாராய்ச்சிசெய்து சிறந்த இரண்டாவது எஜுர்வேதியும் வைதீகச்செல்வமும்நிறைந்த ஸ்ரீநிவாச பாரதிகளால் தமிழ் மொழிகளினாலே பாயிரம் முதலாகவே பதினொரு பிரிவாகிய அத்தியாயத்தையும் சொல்லினன். எ + று. (யகூ)

பதிகம்.

பலபதிதலையூர்லிங்கம் பரிவுடனிருடிபூசை
பெலமிகுமரக்கன்வேள்வி பெற்றதும்வேடன்முத்தி
உலகமோர்சொடைக்குளாண்டோ னுருத்திரமறையோன்
முத்தி
நலமிகும்வேள்விக்குண்ட நதியுமையொடும்பன்னொன்றே.

பொழி + ரை.

பலதலப்பெருமையும் திருத்தலையூர்த் தலப்பெருமையும் ஸப்தரிஷீசலிங்கோற்பத்தியும் இருடிகள்பூசையும் இராவணன் வேள்வியும் வேடன் முத்தியும் சக்ரவர்த்தி குற்றநிவர்த்தியும் உருத்திரபசுபதியார்முத்தியும் யாகுண்டத்தின் பெருமையும் ஐயாற்றின் பெருமையும் உமையாம்பை பெருமையும் இவைமுதலான பதினொரு அத்தியாயமாகும். எ + று. (உய)

முற்றும்.

## பாயிரம் முற்றுப்பெற்றது.

---

துதி-வேறு.

முலைத்தழும்புந்தடமார்பின் முதுகிலடிவளைத்தழும்பு
மொலிக்கழலின் மாமணிஞ்சேர் முடித்தழும்புமுளத்திருத்தித்
தலைப்பதியோன் றலப்பெருமை சாற்றிடவே நறுங்கடுக்கைக்
குலைப்புனற்செஞ்சடைநாதன் குரைகழலைவாழ்த்திடுவாம்.

பொழி + ரை.

மார்பிலே உமயவள் தனத்தினது தழும்பும் முதுகிலேசைவளைத்தழும்பும் பிரம்படித்தழும்பும் சப்திக்கின்ற வீரகண்டையணிந்த திருவடிகளிலே தேவர்களது பரிமளிக்கின்ற தலைகளால் விழுந்து வணங்குங்கிரீடத்தழும்பும் சொண்டஸப்தரிஷீசரை என்னுள்ளத்திலிருத்தி திருத்தலையூரென்னுந் தலத்திலெழுந்தருளிய அவரது மான்மியத்தைச்சொல்லும் பொருட்டு வாசனையுடைய கொன்றைப்பூமாலையையும் கங்காநதியையுஞ் செவ்விய சடைமுடியிற்றரித்தருளிய வுருத்திர மூர்த்தியினது ஒலிக்கின்ற வீரகண்டாமணிதரித்த பாதங்களைத் தோத்திரஞ்செய்குவோம். எ + று. (௧)

வேறு.

கார்பொழியத் தாமரைவாவிகணிரம்பிக் கன்னலொடுங்
கமுகுபலாக் கதலியோங்கிச்
சீர்கொழுவு மத்தினாபுரவேந்தன் றிருதராட்
டிரன்மைந்தன் செய்புஞ்சூதாற்
சார்பகன்று வனஞ்சேர்ந்தி ராறாண்டுட் டருமன்முதலைவருந்தாப்பியரகத்துட்
சூர்கொண்டு முனிவரடி தொழுதுபோற்றித் துயரறச்சொல்
லுகவென்றான் றாயதன்மன்.

பொ + ரை.

மேகங்கள் வருஷிக்கத் தாமரைக்குளங்களில் நீர் நிறைந்தும் கரும்புகளுடனே பாக்கு மரங்களும் பலா மரங்களும் வாழைகளும் ஓங்கிவளர்ந்து செல்வங்கள் செழித்திருக்கின்ற அஸ்தினாபுரத்தரசனாகிய துரியோதனன் எண்ணிச்செய்த வஞ்சகத்தினால் அவ்விடம்விட்டு வனத்தில் வாசஞ்செய்கின்ற பன்னிரண்டு வருஷத்திற்குள் தருமபுத்திரர் பீமசேனன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவன் என்னும் ஐந்துபேர்களுந்துரோபதையுடனே தால்ப்ய மகாரிஷி ஆனவர் தம் ஆச்சிரமத்திலிருக்கும்போது மனோதுக்கங்கொண்ட

வர்களா யவ்விடஞ்சென்று முனிவர் பாதங்களை நமஸ்கரித்துத் துதித்து நிற்க தருமபுத்திரர் எங்கள் துக்கந்தீர்வதற்கு மார்க்கத்தைச்சொல்லவேண்டுமென்று சொன்னான். எ + று. (௨)

வேறு.

என்றவர் கேட்கும்போதங் கிருந்ததாற்பியருரைப்பார்
இன்றவே திலரைவேறற் கீசன்பாசுபதப்பெற்றா
லன்றுமக்காகுஞ்செல்வ மரன்பதந் தொழப்பெற்றோரை
நன்றுமக்கறைவோமென்று நவின்றனர் பதிகள்யாவும்

பொ + ரை.

என்பதாகத் தருமபுத்திரர் கேழ்க்கும்போது நிட்டையிலிருந்தெழுந்த தால்ப்யமுனிவர் சொல்வாராயினார் இப்பொழுது அந்த சத்துருக்களை ஜெயிப்பதற்கு ஈசுவரனிடத்திற் பாசுபதாஸ்திரம் பெற்றால் அப்பொழுதுதான் முடியும் உங்கள் செல்வங்களையுமடையலாம் ஆதலால் பரமேசுவரர் திருவடிகளை வணங்கி அருள்பெற்ற அடியார்களை யுங்களுக்குச் சொல்கின்றேனென்று முதலிலே பலவாகிய ஸ்தலத்தின் பெருமையைச் சொல்லத்தொடங்கினார். எ + று. (௨)

வேறு.

மணிகொழிக்கும் பொன்னிநதி வடபாலின் மலைச்சார்பிற்
கணியினெழுஞ்சாலிகன்னல் கமுகொடுதெங்காதிகளு
மணிமிகுத்த மலர்ச்சோலை மதுவடர்ந்தவரைமீது
பணியணிந்தோனுமைவாமம் படர்பெயர்கொண்டமர்ந்தனனால்.

பொழி + ரை.

முத்துக்களை அலைகளாலொதுக்குகின்ற காவேரி நதியினது வடதுபாரிசத்தில் விளங்கிய குறிஞ்சிநிலத்திலே மருதநிலத்தைப்போலே செழித்த நெற்பயிர்களும், கரும்புகளும், பாக்குமரங்களும், தென்னைகளும் இன்னமும் பல விருட்சங்களுடனே பத்திபத்தியாகிய பூஞ்சோலைகளோடும் தேன் நெருங்கிய மலையின்மேலே ஸர்ப்பபூஷணராகிய பரமேசுவரர் அர்த்தநாரீசுவரரென்று பேர்கொண்டு எழுந்தருளினார். எ + று. (௩)

இருக்குமவர் திருச்செங்கோ டெனும்வரையினுச்சிதிகழ்
அருக்கன்மதி யிருகண்ணோ டருத்தநா ரீசனென

விருப்பவரைக்கண்டுளுவந் தலரின்விரைப் பதம்போற்றிப்
பெருக்கிடுமாநந்தவெள்ளம் பெற்றுடிப்பிறங்குவரால்.

போ + ரை.

அவ்விதமிருக்கின்ற அந்தப்பெருமான் திருச்செங்கோடென்னும் மலையினுச்சியிலே விளங்கப்பெற்றசூரியசந்திரர்களாகிய இரண்டு கண்களுடனே அர்த்தநாரீசுவரரென்று வீற்றிருக்கும் விருப்பத்தையுடையவரைத் தெரிசித்து உள்ளம் மகிழ்ந்து மலர்போலும் பரிமளிக்கின்ற பாதங்களைத்துதித்து பெருகுகின்ற ஆநந்தசமுத்திரத்தில் முழுகி விளங்குவார்கள். எ + று. (௫)

கடையுகத்திற்புனன்மீது மிதக்கின்றகாழிவளர்
சடையுடையானுமையொடுவீற்றிருந்துசராசரமளிக்கு
முடையவனையுள்ளிருத்தியுணர்ந்திடவே மெஞ்ஞாநக்
கடையுறைந்துமனமணுவாய்க்கலந்திருப்பரவர்தாமே.

போ + ரை.

யுகாந்தத்தில் எழுந்த பிரளயத்தில் மிதக்கின்ற சீர்காழித்தலத்தில் சடைமுடியையுடையவராகி யுமையவளுடனே எழுந்தருளிச்சராசரங்களை ரட்சிக்கின்ற ஈசுவரனை உள்ளத்தின்கண் வைத்துணர்ந்தவர்கள் மெஞ்ஞாநமடைந்து சாயுச்சியம் பெற்றிருப்பார்கள். எ + று. (௬)

முச்சுடருமொருவடியாய் முதிர்திருவீங்கோய்மலையி
னுச்சியில்வீற் றிருந்தாரை யுளத்திடலும்மாசகன்று
சச்சிதா நந்தநிலை சார்ந்தகண்டா காரமென்சா
யுச்சியமாம்பேரின்ப மொருவாமன் மருவுவரால்,

போ + ரை.

சந்திர சூரியாக்கினிகளாகிய மூன்றும் ஒன்றாகி யெழுந்த ஈங்கோய் மலையினுச்சியின்க ணெழுந்தருளிய திரணஜோதிசுவரை இதயத்தினிலே வைத்துத் தியானித்தவர் மும்மலங்களுநீங்கி சத்யஞ்ஞாநாநந்தமயமாகிய அகண்டாகார சாயுச்சியமென்னும் பேரின்பத்தில் சதாநீங்காதிருப்பர். எ + று. (௭)

அத்திசிரா வணமாக்கும் பழமலையும் முத்தாறும்
முத்திதரவலச்செவியி லொருமொழிசொ லையாறும்
சத்தியரசாண்மதுரைத் தலம்வைகை யாநதியும்
பத்திசெயும்வாரணா சியும்பரமன் சடையாறும்.

போ + ரை.

எலும்புகளைக் கல்லாகச்செய்கின்ற விருத்தாசலமும் அதில் ஓடுகின்ற மணிமுத்தா நதியும் முத்தியைக்கொடுப்பதற்கு வலது காதில் உபதேசிக்கின்ற திருவையாறும் தடாதகைப்பிராட்டியாராகிச் செங்கோல்செலுத்தும் மதுரையும் வேகவதிநதியும் சிவபூசைசெய்கின்ற வாரணசியும் ஈசுவரன் அணிந்த கங்காநதியும். எ + று. இது முதலிரண்டும் குளகம். (அ)

யுகமொன்றுக்கொருதலமா யொப்பிடுங்காசியை யென்னவ்
வகமொன்றிநதிமூழ்கி யாற்றுமுறையினர்க்கிரங்கி
யிகலின்றேயுமையுடனேற் றிடபமிவர்ந் தருளிவந்து
நிகமமுடி யோன்பக்க னிலவவருள்கலவுவரால்.

போ + ரை.

சொல்லிய நான்குதலங்களும் முதல்யுகம் 'முதலாக நான்குயுகங்களிலேயும் ஒவ்வொரு தலமுங்காசியை யொத்திருக்கும் என்கின்ற அந்தஸ்தலத்தின்கண்சென்று நதியிலே ஸ்நாநஞ்செய்து வழிபாடுசெய்யும் அவ்வடியவர்க்கு தயவுடனே யிவ்வுலகத்திலே பிரத்தியட்சமாய் உயர்ந்த இடபவாகனரூடராயெதிரில் வந்து பரமேசுவரர் தமது சாமீபத்தை யடைந்தருளச்செய்வார். எ + று. (௯)

புத்திடங்கொளாரூரும் புனலிடங்கொளானைக்கா
முத்தினைத்திடவருளும் முதுவழலாமருணையுங்கா
ளத்திவிராட்புருடனுக்கு ளத்தலமிவ்வைம்பூதந்
தத்திடுமிக் கேத்திரங்க டருகுமுமூட்சுத்துவமே.

போ + ரை.

புற்றிடங்கொண்ட பிருதிவி ரூபமாகிய திருவாரூரும் அப்புரூபமாகிய திருவானைக்காவலும் ஸ்மரித்த மாத்திரத்தில் முத்தியைக்கொடுக்கின்றதேஜோரூபமாகிய அருணாசலமும் - வாயுரூபமாகிய காளஹஸ்தியும் - விராட்புருஷனுக்கு இதயாகாச ரூபமாகிய சிதம்பரமும என்றுள்ள பஞ்சபூதங்களாகிய இந்த மகா ஸ்தலங்கள் முத்தியைத்தந்தருளும். எ + று. (௰)

வெற்றிவேற்கரந்தாங்கி விண்ணடுபுரந்தருளிச்
சுற்றுமெயிற்சுவாமிமலை தோன்றரியகுருவாகப்
பெற்றமுதுகூரீசன் பிரணவத்தின்பொருள்வினவுங்
குற்றமில்லாத்தலமுள்ளக் கொடுக்குமருடிருவிரண்டும்.

பொழி + ரை.

வெற்றியைத்தருகின்ற வேலாயுதத்தைத்திருக்கையில் ஏந்திக்கொண்டு தேவலோகத்தைக் காத்தருள்செய்து மதிள்சூழ்கின்ற சுவாமிமலைக்கண்ணே விளங்கிய குருவாகிநிற்க இடபவாகனராகிய ஈசுவரன் பிரணவார்த்தம் கேட்டருளிய குறைவில்லாத அந்தஸ்தலத்தைத் தியானித்தவர்க்கு அருளையும் பொருளையுங் கொடுத்தருளும். எ + று. (யக)

திருப்பலூர் முதலைந்துந் திருப்பிலியூரெனுமைந்தும்
விருப்பகலாவெழுதுறையும் வெள்ளாற்றினிறையிமையப்
பருப்பதத்தி னடிநடுவீ றும்பொனிப்பான் முதலந்தம்
இருப்பதவ்வைம் புனலெடுத்தாட் டிற்பெறுவ ரெண்ணிய
வே.

பொ + ரை.

திருப்பலூர் முதலாகிய பிரம்பலூர் - பசும்பலூர் - பெரும்பலூர் - குரும்பலூர் என்னும் பஞ்சஸ்தலங்களும், திருப்பிலியூரெனப்படுகின்ற எருக்கத்தம்பிலியூர் - திருப்பாதிரிப்பிலியூர் - காஞட்டம்பிலியூர் - ஓமாம்பிலியூர் - பதஞ்சலிப்பிலியூர் என்று சொல்லுகின்ற பஞ்சஸ்தலமும் பிரியம் நீங்காத ஆதிதுறை, ஆலந்துறை, மாந்துறை, ஆடுதுறை, வசிட்டதுறை, அறத்துறை திருக்கூத்துறை என்று சொல்கின்ற ஏழுதலங்களும் வெள்ளாறும் பக்கங்களிலிருக்கும் ஸ்தலங்களிலுள்ள இலிங்கங்களுக்கும் இமயகிரியிலுண்டான கங்காநதியின் முதல், இடை, அந்தம் இந்த மூன்றிடங்களிலும், காவிரி நதியின் முதல் அந்தம் இந்த இரண்டிடங்களிலும் எடுத்த தீர்த்தத்தினால் அபிஷேகஞ்செய்யில் எண்ணிய பொருளை அடைவார்கள். எ + று. (யஉ)

முச்சிரத்தோன் புரிபூசை முதியதிருச்சிராப்பளியு
முச்சிதமா மொருமணிக்கோ ராயிரங்கும்பப்புனலு
முச்சிதனிற்கொண்ட பிரானுறையரதனசைலமு
முச்சிதரித்திடும் மதியோன் முந்துபைஞ்ஞீ லிப்பதியும்.

பொழி + ரை.

மூன்று தலையினையுடைய திரிசிரன் பூசிக்கின்ற திரிசிராப்பள்ளியும், ஆரியராஜனால் அருமையாகிய ஒரு ரத்தினத்திற்கு காவேரி தீர்த்தத்தில் ஆயிரங்குடம் அபிஷேகஞ்செய்யக்கொண்ட பரமேசுவரன் எழுந்தருளிய ரத்னசைலமும், சடைமுடியிலே சந்திரனைத்தரித்த ஈசுவரன் இருக்கும் திருப்பைஞ்ஞீலித்தலமும். எ + று. (யங)

முன்னயன மமரர்களே முறைசெய்வா ரங்கதன்றி
பின்னயனம் மானிடரே பிரியமுறுந்தலம்வேடன்
என்னயன மணிதலமு மரித்துவா ரமுமிசைப்போர்
சொன்னயந மாப்புரியஞ் சோணாட்டுப்பதிபலவும்.

போ + ரை.

முதலயனமாகிய உத்தராயணத்தில் தேவர்கள் பூசையும் பின் அயனமாகிய தக்ஷிணாயனத்தில் மனுஷர் பூசைசெய்யும் கேதாரத்தலமும் வேடன் ஒளிர்கின்ற கண்ணைத்தனது கண்களாகவடைந்து பரமேசுவரன் எழுந்தருளிய ஸ்ரீகாளத்தியும அரித்துவாரமும் என்னும் சில ஸ்தலங்களை ஒருவர் சொல்லக்கேட்டமாத்திரத்தில் தெரிசனபலனை அடையச்செய்கின்ற சோழநாட்டுப்பதிகள் முழுவதும். (௰௭)

அறமுதனான்கினையடைவே யடையவருள்பங்கலங்க
ளுறவியென வொளிர்வன வாயிரத்திருநான்கிவ்வுலகிற்
பிறவியெனு முளையவியப்பெருமான் வீற்றிருந்தருளுந்
திறநிகழுஞ் சதுரகிரிச் சிறைசிலவுமைந்தலமே.

போ + ரை.

தர்மம், அர்த்தம், காமியம், மோக்ஷம், என்கிற நாலையும் முறையாகவே அடையச்செய்கின்ற அநேகந்தலங்களும் எடுக்கவெடுக்கக்குறைவுபடாதூறுகின்ற ஊற்றுக்கண்போல விளங்குகின்றன. அந்த ஆயிரத்தெட்டுச் சிவஸ்தலங்களிலும் சென்மமாகிய அங்குரம் அழியும்படிச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பாக்கியமாக விளங்குகின்ற சதுராசலச்சாரலில் பஞ்சஸ்தலங்கள் விளங்குகின்றது. எ + று. (௰௫)

வடமலைவில்லோன்முகத்தால் வழிந்தபுனல்புவிக்கணிழிந்
திடமருவுஞ்சதுரவரை யாண்டிருந்துசிலநாட்பின்
றடமொழுகிப்பொன்னிநதி சார்ந்திடுமவ்வையாற்றிற்
றொடரிடமேழிருடீசன் சுயம்புறையுந்தலமாமால்.

போ + ரை.

மகாமேருவாகிய வில்லையேந்திய பரமேசுவரருடைய ஐந்து முகங்களிலிருந்தும் வழிந்த கங்காசலம் பூலோகத்திலிறங்கி விசாலமாகிய சதுரகிரியிற் சிலகாலமிருந்தபின்பு வழிக்கொண்டோடிக் காவேரி நதியிற்சங்கமஞ் செய்கின்ற அந்த ஐயாற்றின் சம்பந்தமான இடத்தில் ஸப்தரிஷீசரென்று பெயர்பெற்ற சுயம்புலிங்கமிருக்குந்தலமும் ஆகும். (௰௬)

அவ்விசனமர்ந்தருளுந் திருத்தலையூராந்தலத்துக்
கொவ்வாது புரியேழுநகரைந்து முதுவல்லாற்
செவ்வான வாயிரத்தெட் டீசர்திருப்பதிக்கெல்லாங்
கவ்வாகின்றிடும்பெருமை மூவுலகுங் கரையரிதால்.

போ + ரை.

அந்த ஸப்தரிஷீசரெழுந்தருளிய திருத்தலையூர் என்னுந்தலத்தினுக்கு அயோத்தி மதுரை மாயா காசி காஞ்சி அவந்தி துவாரகா என்னும் ஜீவன் முத்தியைக்கொடுக்கின்ற ஸப்தபுரியும் மதங்கமாலி அவந்தி ரச்சுமயம் கிட்கிந்தா ஸ்ரீரங்கம் என்னும் ஐந்து நகரங்களும் ஒப்பாகாது. பின்னும் செம்மையாகிய ஆயிரத்தெட்டு சிவஸ்தலங்களுக்கெல்லாம் முக்கியமாயிருக்கின்ற இந்தத்தலத்தின் பெருமை மூன்றுலகங்களினும் சொல்லமுடியாததாகும். எ + று. (௰எ)

வேறு.

என்றுதாற்பியருரைக்க விருந்தபாண்டவருங்கேட்டு
நன்றுநன்றவ்வூர்மாண்பு நாவலத்துதித்தவாறுங்
கொன்றையஞ் சடையோன்றேன்றுங் கொள்கையுநதிபின் வாறு
மின்றெமக்குரைத்தியென்று விசைத்தலுமியம்பலுற்றார்.

போ + ரை.

இந்தவாறு அந்த ஸ்தலப்பெருமைகளெல்லாம் தால்ப்பியமகாமுனிவர் சொல்லப்பக்கத்திலிருந்துகேட்ட பாண்டவர்கள் நல்லது நல்லது அந்நகரின் பெருமையையும் அது ஜமபுத்தீவில் தோன்றியதும் கொன்றைமாலை சூடியச்சடையவன் வந்த விதமும், ஐயாறு வந்த காரணமும் இப்பொழுதே யெங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்டலுமுடனே சொல்லத்தொடங்கினர். எ + று. (௰அ)

நாட்டுவேளம்-வேறு.

மாமறைவேள்விகளெங்கும் வளர்சோழ நன்னாட்டிற்
பூமலிமின்மணிகொழிக்கும் பொன்னினதிவடபாங்கர்
கோமனுறை பதியொவ்வாக் கோயிலுங்கோபுரத்தூவி
தாமதிள்சூழ்ந் தயன்மருதஞ் சார்திருச்சிரிடமூதூர்.

பொ + ரை.

வேதங்களாலே சொல்லப்பட்ட பஞ்சஎக்ஞங்களை யெவ்விடங்களிலேயும் செய்கின்ற சோழநாட்டிலே அழகுமிகுந்து குற்றநீங்கிய முத்துக்களை அரித்தோடுகின்ற காவேரியாற்றினது வடது பக்கத்தில் தேவருலகமும் ஒப்பில்லாத கோயிலும் கோபுரஸ்தூபிகளும் பலமாகிய மதில்களும் வளைந்துபக்கத்தில் மருதகிலங்களுஞ்சேர்ந்த திருத்தலையூரென்னுந் தலமொன்றுளதாகும். எ + று. (மக)

அப்பதிவாழந்தணர்க ளக்கினிகோத்திரமுதலா
யெப்பொழுதுமயர்தலினு லிந்திரன்கம்பலைநீங்கித்
தப்பறவென் றபிடேகஞ் சங்கரற்குச்சமைத்தனபோ
லிப்புவிகுன் றுகள்கான மெங்குமழை பொழிந்தனவே.

பொ + உரை.

அந்தப்படியிருக்கும் பதியினிலே வாசஞ்செய்கின்ற பிராம்மணர்கள் அக்கினிஹோத்ராதி காரியங்களை எப்பொழுதுஞ்செய்தலினால் தேவேந்திரன் துக்கம் நீங்கி தன் அபசாரத்தைப்பொறுக்கவேண்டுமென்று பரமேசுவரருக்கு அபிடேகஞ்செய்ததுபோலே வருஷமானது மலைகள் காடுகள் முதலெவ்விடங்களிலும் சொரிந்தது. எ + று. (உய)

வேறு.

சொரியுமப்புனல்களோடிச் சுரிவளைப்பணைதடங்கள்
கரைவரையொக்குமேரி கனைகடலொக்குமென்னத்
திரையெறியுவாப்பெருக்கிற் செல்லுநீரோதையோடும்
விரைமலர்க் கொடியும்புள்ளும் மிக்கொலித்திடுவவன்றே.

பொழி + ரை.

வருஷிக்கின்ற மழைநீர்பெருகி சுழித்த சங்குகளையுடைய வயல்களிலும் குளங்களிலும் மலைபோலாகிய கரையினையுடைய ஏரிகளை ஒலிக்கின்ற கடலென்று சொல்லும்படி அலை வீசுகின்ற சமுத்திரம் பெருக்கெடுத்ததுபோற் செல்கின்ற ஓசையுடனே வாசனை வீசுகின்ற பூங்கொடிகளும் பட்சிகளும் அதிகமாக சப்திக்கும். (உக)

வேறு.

அப்புனலும்மைம்முகத்தா லவதரித்த வையாற்றின்
அப்புனலு முந்தடஞ் சென்றுறும் வயற்பரப்பெல்லாம்

அப்புவன மெதிர்மள்ளர் கரையொதுக்கி யார்த்தொலிசெ
யப்புவனம் வானுலகுக் கப்புரத்து மெய்திடுமால்.

பொ + ரை.

அந்த ஏரிநீரும் சிவபெருமான் பஞ்சமுகத்தினின்றுமெழுந்த ஐயாற்றினுடைய புண்ணியநீரும் வழிக்கொண்டுபோய் வயல்களினிடங்கள் முழுவதும் தேங்கிச்செல்லுநீரைச்சந்தித்த உழவர்கள் வரப்புகளைக்கோலிக் கூச்சலிடுகின்ற ஓசையானது பூலோகங்களெல்லாம்பரவித் தேவருலகத்துமுட்டியப்பாலுஞ்செல்லும். (உஉ)

வேறு.

மண்பிளந்திட வலமதிற் கொழுக்களை வனைந்தே
யெண்வடங்களாற் றடிநுகந் தைவரவிறுக்கித்
திண்பகட்டிணை சுவலிணைத்தோட்டுவார்செய்ய
பண்புவச்சிர பாணியோன் கேட்டுளம்பரியும்.

பொழி + ரை.

மண்பிளக்கும்படியாகக் கலப்பைகளிலே கொழுவையேற்றி வலியவடக்கயிற்றினால் தடிகளை நுகத்திற்றழுவத்தகைந்து உறுதியாகிய எருமைக்கடாக்களின் பிடரியிற்சேர்த்து ஏர் ஓட்டுகின்ற உழவர்கள் நன்மையாகிய தகு யைக்கேட்டுத் தேவேந்திரன் பிரீதிகொள்வான். எ + று. (உ௩)

வேறு.

திடங்கெழுமள்ளர்தாமுஞ் சேறுசெய்செய்யிற்சால்வாய்த்
தடஞ்சித றரதனங்க டரணிமெய்ந் நெய்த்தோர்மானும்
விடங்கனுர்க் கமுதமாக்கும் விரிகிவித்துகடெளிக்கப்
படங்கிளர் படிக்குரோமம் பொடிப்பபோன் முளைக்குமன்றே

பொழி + ரை.

வலிபொருந்திய உழவர்கள் பரம்படித்த வயல்களிற் படைச்சாலின் வழிகளாக உதிர்ந்து கிடக்கின்ற ரெற்றினங்கள் பூமிதேவியின் சரீரத்திற் றோன்றும் இரத்தத்தையொத்திருக்கும். அழகனாகிய சிவபெருமானுக்கு நிவேத்தியம் செய்வதற்காகிய சம்பா நெற்களை எடுத்துத்தெளித்திடவும் அதுகள் முளைத்திருக்கின்றது பூமிதேவி தேகஞ்சிலிர்த்ததையொக்கும். எ + று. (உ௪)

அற்றவிழ்பணிணை யிட்டத்தாக்கிய நாறரும்பித்
துற்றகிழ்மகளிர்கா முந்தொடிக்கை யாற்பறிப்பமள்ளர்
வெற்றிநென்முடிகடுக்கி மேவுவார் குலிசற்போற்றி
நற்குரவைகள் படித்துநடுகுநர் பயிர்களெங்கும்.

பொ + ரை.

அந்த விதமாக வித்தாரமாக நெருங்கிய வயலில் முளைநாற்றுகள் வளர்ந்து நிறைந்தவைகளை உழத்தியர்கள் தம் வளையலணிந்த கைகளாலே பிடுங்கிவைத்தலும், உழவர்கள் ஜயத்தைத்தருகின்ற நெல்லம்பயிர்முடிகளைத் தேவேந்திரனைத்துதித்துத் தூக்கிக்கொணர்ந்து குரவைகளைப்பாடிக்கொண்டு நடுவார்கள். எ + று. (உரு)

மண்டிநீர்சுலவுசெய்யின் வளர்பயிர்ச்சுருள்விரித்தல்
கண்டுமள்ளர்கள் பதத்திற்காட்டிடக் கடைசிமாதர்
வண்டுழல் கோதையோடும் வன்களைகளையுஞ்செய்கை
யிண்டையா னனக்குமாம்ப லிதழிற்கு மாகாவென்றே.

பொ + ரை.

நீரினால் நெருங்கி வளைகின்ற வயல்களில் வளர்கின்ற பயிர்கள் கதிர்கள் விட்டு முற்றியிருப்பதைப்பக்குவம்பார்த்துக் காட்டியபின்னே உழத்தியர்கள் வண்டுகள் மயங்குகின்ற மாலையணிந்த தலைமயிர்களோடும் களைகளைப் பறிக்கின்ற வேலையாகொள்வர் தாமரையை முகப்பகையென்றும செவ்வாம்பலை உதட்டின் பகையென்றும். எ + று. இது முதலிரண்டும் குளகம். (உசு)

குவளைமைவிழிகட்காகா கொட்டிகள் நாவுக்காகா
பவளப்புல் கோரைமற்றும் பசும்புதலினுக்காகாவென்
னவளைக்கையாற்பறித்து நறவுமிக்கருந்திமாழ்கிக்
கவலையினீலஞ்சூடிக் கைக்கொள்வார்கமலக்காயை.

பொ + ரை.

கண்களுக்கு நீலோற்பலத்தைப் பகையென்றும் கொட்டியை நாக்கின் பகையென்றும் பவழப்புல் கோரைப்புல் முதலியயாவையும் பச்சைகொண்ட பயிர்கட்காகாதென்பதாக வளையலணிந்த கைகளால் பறித்தும் அதிகமாக மதுக்களைக்குடித்து மயங்கியும் விசாரமில்லாமல் கருநீலமலரைத்தலையிலே சூட்டிக்கொண்டு தாமரைக்காயைப்பறித்துக் கைகளில் வைத்துக்கொள்வார்கள். எ + று. (உஎ)

வேறு.

மின்னுநெடுங் கயலினமென் றுழத்தியர்தங் கண்ணிழலைப்
பேணியேறி
மின்னருகில் மரீஇப்புருவ நிழல்கண்டு தற்கொடியோன்
வில்லென்றேங்குங்
கன்னமழு திடும் வதனங்கமலமென வாசைகொடு
களிவண்டணமிப்
பொன்னணியுங் குமிழ்நாசி செண்பகப்பூ வென்றுவெரீஇப்
போகுமன்றே.

பொ + ரை.

களைதோண்டுகின்ற பள்ளத்திகளின் கண்ணிழலை நீண்ட கெண்டை மீன்கள் தம் இனமென்று எண்ணிநடந்து விளங்குகின்ற பக்கத்தில் வந்துப் புருவத்தினிழலை நோக்கித் தன்னைத் துவசமாகவுடைய மன்மதனது கரும்பு வில்லென்று வருந்திநிற்கும் வண்டுகள் கன்னங்களில் அமுதம் வழிகின்றமுகத்தைத் தாமரைப்பூவென்றாசைகொண்டு சென்று குமிழம்பூவை யொத்த மூக்கைக்கண்டு செண்பகப்பூவென்று பயந்தோடும். (உஅ)

பெருவயலுட் கடைசியர்தங் கணைக்காலை வராலெனப்போய்ப்
பிடித்துமள்ளர்
வருகையின்மற் றொருத்திபுற வடியையுறுப் படக்கியென
மருவிவெட்குங்
குருகுதொடுங் கரக்குரும்பை முலைச்சியர்கண் முகத்தினுக்குக்
குலைந்தோமென்றே
யருகுபடர் குவளையுந்தா மரைசொரிவ மதுவளியோ
டழுவபோலும்.

பொ + ரை.

பெரிதாகிய வயல்களிலே உழத்தியர்கள் கணைக்காலைவரால் மீனென்று பிடித்துப்பின்னும் ஒருத்திபுறங்காலை யாமையென்று உழவர்கள் வெட்கமடைவார்கள் வளையலணிந்த கைகளையும் தென்னங்குரும்பையொத்த முலைகளையுமுடைய அப்பெண்கள் முகங்களுக்கும் கண்களுக்கும் அழிந்தோம் நாமென்று பக்கங்களிற்செழித்திருக்கின்ற தாமரையும் நீலோற்பலமும் வண்டுகளுடனே சொல்லியழுவதுபோலே தேனைச்சொரிகின்றதுகள். எ + று.
(உகூ)

வட்டவிளை புலத்துழவர் மருதநிலக்குழலூத
வளிகேட்டேழைக்
கட்டளகக் குழலுலவி யக்குழல்போ லிசைப்பனநட்
கழனிதன்னுண்
மட்டருந்தி வருமாதர் மயங்குபுபுட் புணர்ச்சிகண்டு
மள்ளர்தம்பாற்
பெட்புநிறைந் தணைந்திடுவர் வீழ்ந்திடுவர் மீண்டிடுவர்
பிரியாரன்றே

பொ + ரை.

விளைந்திருக்கின்ற வயல்களிலுள்ள உழவர்கள் மருதநிலக்குழலிசையைச்செய்ய வண்டுகள்கேட்டுப் பள்ளத்தியர் முடித்தகூந்தல் மலர்களிலே வந்திருந்து அந்தக்குழலிசைபோலே ஒலிக்கின்றதுகள். குளிர்ந்தவிளைநிலங்களிலே அப்பெண்கள் மதுவுண்டு மயக்கங்கொண்டு பட்சிகள் புணர்ச்சியைக்கண்டு ஆசைமிகுந்து அந்த உழவர்களைப்புணர்வார்கள் கீழே விழுவார்கள திரும்பிவருவார்கள் கலவியின்கண் பிரியாதவரானார்கள். எ + று.
(௩௰)

வருபுனற்கான் மறித்தவரான் மீற்பாயும் வாளையொடு
கெண்டைச்சேலும்
மருவியுல வுவவதுகண் டையெனவந் தருந்திடுவான்
மராளம்போலக்
குருகுபகம்முதலியபுட் குழாங்குலவ வளைத்தவைகள்
குலையநீர்நாய்
வெருவவெருட் டிக்கருமை தாக்கிடலும் வெவ்விடங்கர்
மிரட்டுமம்மா.

பொ + ரை.

ஓடிவருகின்ற வாய்க்காலைத்தேக்கின்றவரால் மீன்களை. வாளைமீனும் கெண்டைமீனும் கூடித்திரிவதைக்கண்டு சீக்கிரமாகப் புசிப்பதற்குப் பாம்பைப்போலே நாரை கொக்கு முதலிய பட்சிகள் சஞ்சரிக்கவும் அவைகளை வளைந்து பயமுறுத்தி நீர்நாய்கள் ஓட்டிடவும் அதுகள் அஞ்சிட எருமைகள் முட்டியோட்டவும் அதைக்கொடிய முதலைகள் பயமுறுத்தும். எ + று.
(௩௧)

வயலயலின் மடுவுழக்கி வன்பகடு குடையமலி
மராள மோடும்
புயறொடுமப் பொழில்வளத்திற் புட்குலங்கள் பேடையொடும்
புணர்ச்சி மல்குங்
கயமுறுமே திகள்செருத்தல் கன்றெனவூற் றிடமோதிக்
கமுகு தென்னை
யியனனித்தா றுதிர்க்குவன தாய்வாளை வராற்கெண்டை
யிருக்குஞ் செவ்வே.

பொழி + ரை.

விளை நிலத்தின் பக்கங்களிலே யிருக்கும் எருமைக்கடாக்கள் மடுவு களைக் கலக்கி முழுகுதலால் அலைப்புண்டு அன்னங்கள் அங்குவிட்டுப் பறந் தோடும். மேகமண்டலம் அளாவிய பூஞ்சோலைகள் செழிப்பை விரும்பிப்ப ட்சிகள் பெட்டைகளுடன் புணர்ந்து விளையாடும். குளங்களில் தங்கிய எ ருமைமடிகளிற் கன்றுகளென்று சுரப்பெடுக்கும்படி வாளை, வரால், கெண் டைமீன்கள்மோதி மேலேபாய்ந்து பாக்கு, தென்னைகளின் வரிசையாகிய மிகுந்தகுலைகளை யுதிர்க்கின்ற வளங்களையு முடைத்தாகும். எ + று. (கூஉ)

பசுங்கிள்ளை யிறகரெனச் சுருள்விரிந்து சூற்கொண்டு
பருக்குஞ் சாலி
யசங்குறுசெங் கரும்பொக்கு மக்கரும்பு வளர்ந்தோங்கி
யணிப்பா கொன்றும்
வசங்கலவுங் கமுகுறழ்தென் னத்தென்னை வான்படர்ந்து
மழையை யாற்றுங்
குசங்கிளருங் கற்பினர்தங் கொழுநர்பணி தலிற்கதலி
குலைகள் சாய்க்கும்.

பொழி + ரை.

பச்சைக்கிளிகளின் சிறகைப்போலே சுருட்டை விரிந்து முதிர்வடை ந்து தொண்டைக்கதிராகிய பயிர்கள் அசைகின்றசெங்கரும்பை யொக்கும் கரும்பு ஓங்கி கமுகுமரத்தை யொப்பாகும். பாக்குமரங்கள் தன்வசமாகத் தென்னைமரத்தைப் போலாகும் அந்தத்தென்னை ஆகாயத்திற் செல்கின்ற மேகமண்டலத்தைத்தாங்கும். தனங்கள்புடைக்கின்ற கற்பின் மகளிர் தங் கள் கொழுநரை வணங்குவதுபோல் வாழைகள் தாறுகளைச் சாய்த்திருக்கு ம். என்றவாறு. (கூக)

வானோங்கிப் பணைபலவாய்ப் பிரிந்துமலர் காயூற்றும்
மதுச்செய் நீத்தக்
கானோங்குந் தேமாவுங் கனிபாகல் குளஞ்சிவிளாக்
கழைசூழ் வேலி
தானோங்கி யளிக்கணங்க ளிசையேங்கக் கேதாரந்
தாண்ட வஞ்செய்
வானோங்கிக் கலுழன்முதற் ககநோக்கப் பைங்கிளிகள்
வாழ்த்து மன்றே.

பொ + ரை.

ஆகாயத்தின் வளர்ந்து கவடுகள் பலவாய்ப்பிரிந்து மலர்களிலும பழங்களிலும் சொரிகின்ற தேன் வெள்ளங்களையுடைய காடுகளில் வளர்ந்திருக்கின்ற கட்டிமாமரமும், கனிந்தபலாமரமும், கிச்சிலிமரமும், விளாமரமும், மூங்கில்களால் வேலி சூழப்பெற்றுச் செழிக்கவும் வண்டுக்கூட்டங்கள் பாடவும் மயில்கள் நடிக்கவும் கருடன்முதலாகிய பட்சிகள் கண்டுமகிழவும்அக்கூத்தின் பெருமையைக் கிளிகள் துதிக்கும். என்றவாறு. (௩௪)

சினைதழுவி வளர்கின்ற செஞ்சாலி வெண்சாலி
தில்லைச் சாலி
நனியெழுந்து விளைகதிர்கள் நரையினுற வளித்தொடர்போ
ற்றொடர்கள் பூண்டு
தொனியிடுமா லைகள்கவள மிடவுண்டு மதம்பொழிவிட்
டேங்க லென்ன
வினையினர்செங் கரும்பிடச்சா றுமிழ்தருமம் மருதநிலம்
விளங்கிற் றம்மா.

பொ + ரை.

வளர்ந்தேறுகின்ற செவ்விய சம்பாவும், வெள்ளைச்சம்பாவும், தில்லைச்சம்பாவும் உயர்ந்து விளைகின்ற கதிர்கள் சாமரம்போலத் தலைவிரியவும், கருவண்டின் பந்திபோலச் சங்கிலிகள் பூட்டிய ஆலைகளானது கவளங்கொடுக்க உண்டு மதத்தைப்பெருகவிடுகின்ற ஐராவதத்தைப்போலே கரும்பைக்கொடுக்க நசுக்கிச்சாற்றைக் கக்குகின்ற மருதநிலங்கள் செழித்திருக்கும். எ + று. (௩௫)

வேறு.

வார்கழைப் பக்குவத்தின் வன்கதி ராலைப்பூட்டிக்
கார்பல வுருமித்தென்னக் கரும்பினின் றுணியையீந்தே

யோர்வுளோர் சிதைத்துநீத்த வொருபுலன் போலநீக்கிக்
கூர்கொளச் சாறுவாக்கிக் கொப்பரைப் பாகுய்ப்பாரால்.

பொழி + ரை.

நீண்டகரும்புவெட்டும் பதம்பார்த்து வலியகதிர்களைப்பூட்டி மேகங்க ளிடித்ததுபோலே கரும்புத்துண்டங்களை ஆலேவாயிற் கொடுத்து ஞானிக ள் நீக்கிய சப்த-பரிச-ரூப-ரஸ கந்தங்கள்போலே சக்கைகளைப்பிழிந்தெறிந் து நன்ருகச்சாற்றினைச் சொரிந்து கொப்பரையிற் பாகு செய்வார்கள் எ + று (௬௬)

வேறு.

வேலை நீர்கொள மேகங்க ளடர்வன மான
வாலை வன்புகை யண்டமட் டோடியே வயலிற்
சோலை யேரியிற் சூழ்வபின் னருமது வன்றிச்
சாலை வைப்பராற் றரளமங் கெடேஉச் சிலர்தங்கும்.

பொ + உரை.

சமுத்திர ஜெலத்தை மேகம் உண்ணச்சென்றது போலே கருப்பஞ் சாறு காச்சுகின்ற புகைகள் ஆகாயமட்டும் படர்ந்து பக்கத்திலுள்ள பூஞ் சோலை ஏரிகளுஞ்சூழ்ந்து கொள்ளும், பின்னு மவையல்லாமலே தரும சாலைவைப்பவர்களும் சிந்தியமுத்துகளைச் எடுத்துக்கொள்ளுகின்ற சிலர்க ளும் வசிப்பார்கள் என்றவாறு. (௬எ)

மஞ்ச ளிஞ்சிகண் மற்றுள மூலங்க ளகழ்வார்
நஞ்சை நெற்பத நோக்குபு நாடியே சூழ்ந்து
வஞ்சி யோடுகொய் குயங்கொடு மள்ளர்க ணெருங்கி
விஞ்சி டும்படிச் சொல்லரிந் தெடுப்பர்கள் விரைந்தே.

பொ + ரை.

மருதநிலப்பொருளாகிய மஞ்சள், இஞ்சிகள் முதலான கிழங்குகளைத் தோண்டி யெடுப்பார்கள். நன்செயில் நெற்களின் பதங்கள்-பார்த்து பள்ள த்திகளுடனே உழவர்களும் சூழ்ந்து அரிவாளினால் அறுத்து நெல்லரிகளை ச்சீக்கிர மெடுப்பார்கள். எ + று. (௬அ)

மங்கை வன்முலை தொட்டிட மள்ளர்க ளரியைச்
செங்கை யாற்கட்டிச் சேர்ப்பர்கட் டெடுப்பர்சார் களத்திற்

சங்கை நீத்தரி தட்டுவர் கூப்புவார் நெற்றாள்
யங்கை யாலிராக் கதரம ரர்களமர் கடுப்ப.

பொ + ரை.

பள்ளத்திகள் தனங்களில் மோதும்படி நெல்லரிகளை உழவர்கள் எடுத்துக்கட்டி ஒன்றாய்க்கொணர்ந்து கட்டை யெடுப்பார்கள். களங்களிலே போட்டு ஒட்டுதலில்லாம லடித்துதிர்த்து நெற்களைக் குவிப்பார்கள் அடித்ததாள்களையுங் குவிப்பார்கள் அவை தேவாசுரரான் யுத்தஞ்செய்வதை யொத்திருக்கும். எ + று. (௩௯)

வேறு.

வானுலவு மிரவியெழு பைம்பரிபோல் வன்பகடு
பிணைத்து மள்ளர்
மேனிலவக் கடாவிடுத்துப் போர்செய்வர் வெற்பிறகர்
மேகவாகன்
பானலிற்கொய் திறுத்தனபோ னெல்லளந்து பரம்பரனுக்
கீந்துபண்டி
தானிறைத்துப் பெயர்த்தவர்பண் டகச்சாலை கண்டுய்ப்பார்
சால்பின் மாதோ.

பொ + உரை.

ஆகாயத்திற் செல்லுகின்ற சூரியனது எழு பச்சைக்குதிரைபோலே பள்ளர்கள் எருமைக்கடாக்களை பிணையல்விடுத்துத் தேவேந்திரன் மலையின் சிறகை அறுத்துப்போடக் கீழே வீழ்ந்திருந்ததுபோலும் உதறியவைக்கோலை ஆகாயத்தை அளாவப்போர்போடுவார்கள். நெற்களை அளந்து சிவபெருமானுக்குக் கொடுத்து மிச்சநெற்களை வண்டிகளிலேற்றி யவரவர்களுங் களஞ்சியங்களைச்சுத்தஞ்செய்துபோடுவார்கள். எ + று (௪0)

வேறு.

தூயவிரீ கியையோடு செற்றுத்தந்து சொரியரியங் தணர்தம்மாற்
சுசிமுன் விண்ணோர்க்
கேயவளித் திடுவரறு சுவைமிகுந்த வுண்டியொடுங் தளவமுகை
யேய்ப்ப வன்னஞ்
சேயுகைப்பார்க் கருத்தியதி திகளுமுண்ணத் தெருநடுவி லறச்சாலை
செய்து வைப்பார்
சேயொடும்மற் றுறவினர்க டானுமுண்டு சிறந்திருக்கும் பதிவளனைச்
செப்பற் பாற்றோ.

போ + ரை.

சுத்தமாகிய நெற்களை யுமிபோக்கித் தீட்டிய அரிசிகளை வேதப்பிராம் மணர்கள் அக்கினி காரியத்திற்குத் தருவார்கள் ஷட்ரஸத்துடனே உண வை முல்லையரும்புபோலே சால்யான்னங்களை யிடபாரூடராகிய சிவபெரு மானுக்கு நிவேதித்துப்பின்பு அதிதியர் அப்பியாகதர்களு முண்ணும்படித் தருமசாத்திரங் கட்டிவைப்பார்கள். தன்குமாரர் பந்துக்களுடனே தானு முண்டிருக்கு நாட்டின் பெருமைகளைச் சொல்லவெளிதல்ல. எ+று. (சக)

நாட்டுவளம் முற்றும்.



நகர்வளம்.

வேறு.

சோதியார்கண நாதபூதர்கள் சொல்சிவாவெனு மோசையும்
பூதியக்க மணிந்துபோற்றிமெய் பூசுராண்மறையோதையுங்
கீததுந்துபி வித்தியாதரர் ககனமீது முழக்கமும்
நீதிபற்றுபு கடிகைதேர்ந்திட நிதமறைமணி யேங்கலும்

போ + ரை.

சிவபெருமானுடைய பூதகணநாதர்கள் சொல்கின்ற சிவசிவா என்கி ற ஓசையும் விபூதி ருத்திராட்சங்களைத் தரித்துக்கொண்டு பிராம்மணர்கள் தோத்திரம் செய்கின்ற ஓசையும் வித்தியாதரர் கீதமும் பஞ்ச துந்துபிகளும் ஆகாயத்தில் முழக்கும் ஓசையும் காலங்கள் தெரிய நாள்தோறும் மணியடி க்கு மோசையும். எ+று. (சஉ)

வேறு.

பேரிசச்சரி டிண்டிமம் மணிபெரும் முழவு
தாரைகாகளந் தவளசங் கந்திருச்சின்ன
மாரிவிண்ணினின் றிடிப்பபோன் முழங்கிட வான்பூ
மாரிபெய்தரன் பதம்பணிந் தேத்துமவ்வொலியும்,

போ + ரை.

பேரிகைசற்சரி, டிண்டிமம், கண்டாமணி, பெரியமிருதங்கம, தாரை, எக்காளம், சங்கம், திருச்சின்னங்களும் நீருண்டமேகங்கள் ஆகாயத்தில்

கின்றிடிப்பதைப்போலே முழங்கிடவும் தேவர்கள் புட்பவருஷம் வருஷித்துச்சிவபெருமான் றிருவடிகளைப்பணிந்து தோத்திரஞ்செய்யு மோசையும். எ + று. (௪௩)

வேறு.

பத்தரெங்கு மராகராவெனப் பன்னியாடிடு மோதையும்
துத்தியாள்பல மத்தளத்தியை சுருதிவீணையி னாதமும்
தத்தளங்கு திமித்திமித்திமி தாவெனப்புகல் பரதமோ
டத்தனார்பணி செய்யுமாதர்க ளாடல்பாடலி னார்வமும்.

பொ + ரை.

அடியார்கள் அராஹராவென்று சொல்லிக்கொண்டு நர்த்தநம்பண்ணு மோசையும் துத்தியோடு மத்தளலயம் பொருந்த வாசிக்கும் வீணைகானத்தோசையும் தத்தளங்குவெனும் பரதத்தின்படி ருத்திரகணிகையர் நாட்டியஞ்செய்யும் ஓசையுடனே பாட்டொலியும். எ + று. (௪௪)

வேறு.

மந்தரமால் வரையதினோர் வண்டியீர்க்கும் வண்கதிரோன் பரிக்குளம்பு
வருடி மீச்சென்
றிந்திரனா ருலகுதொட லிவந்ததோகை யெழிற்சி நகரமும்பந்த
பேற்றுந்தாம
மந்தரம்போ யுலவிடப்பல் குலைகள்தூக்கி யரன்றிருவி ழாநடத்து
மாரவாரஞ்
சுந்தரவீ திகண்முழுது மலங்கரிப்பார் துணிக்கொடிஞ்சித் தேர்ச்சதுக்கந்
த்துலங்கும் மாதோ.

பொ + ரை.

மந்தரகிரியைப்போலே ஒற்றைவண்டி ரதத்தை யிழுத்துச்செல்கின்ற சூரியன் குதிரைக்குளம்பைத்தடவி. மேலேபோய் இந்திரலோகத்தை யெட்டிப்பார்க்கும். துவசத்தையுடைய கோபுரமும் அழகிய பந்தல்களிற்றொங்கவிட்ட மாலையும் பாக்குக்குலைகளையும் ஆகாயமளாவும்படித்தொங்கவிட்டு ஸப்தரிஷிசர் திருவிழா நடத்து மவரவர்கள் வீதிகளெங்கும்தேரோடி வருகின்ற மூலைகளும் விளங்கிக்கொண்டிருக்கும். எ + று. (௪௫)

மங்கையிடத் தரன்விழவு நிதமுமாற்றி வருமவீதி தொறுந்தோர
ணமும்பூந் தாமஞ்
செங்கிடையிற் பங்கயச்சித் திரங்கொண்மாலை செறிந்திடவா
னுலகளவுங்குலவக்கட்டி
யெங்குநிறைந் திடக்கதலி கமுகந்தாறு மெழிலொழுகக்காவண
டத்தின் பாங்கர்ப் [மா
பைங்குதிரைபுதலென்ன முகந்துமெல்லப் பருதிரதநின்றுநின்று
பரவுமன்றே.

பொ + ரை.

பார்வதியையிடப்பக்கத்தில் வைத்த ஸப்தரிஷீசர் திருவிழா நடக்கும் வீதிகளெல்லாம் மகர தோரணங்களும் பூமாலைகளும் நெட்டியாற்செய்தவி சித்திரமாகிய தாமரைப்பூமாலை முதலானதுகளைத் தேவருலகத்தையெட்டும் படிகட்டி எவ்விடங்களும் விளங்கும்படி வாழைக்குலை பாக்குக்குலைகளும் அழகு வழிந்திருக்கும்படிப் பந்தல்களுங்கட்டி மரகதமணியாலிழைத்த மாளிகையின் பக்கத்தில் பச்சைக்குதிரைகள் பசும்புல்லென்று முகந்துபார்த்துக் கடிப்பதனுல் சூரியரதம் தங்கித்தங்கிநிற்கும். எ + று. (௪௯)

பின்னலிடுநீண்மருகினுயரரங்கம் பீதகத்தான் மணிமேடை
பிறங்குங்கொண்மூ
மின்னலிடுவதின்மடவார் நின்றுதங்கண் மீதிலணிகுறும்
திலத்தாமங்க [வெண்ணித்
டன்னையருகுலவுநெடுந் தெங்கில்வைத்தே தகரநறுங்குழல்
தருக்களெல்லா [புலர்த்தத்
மென்னைக்கொல்வெண் மணிபயப்ப தெனச்சகுந்த மிறைத்தி
விறும்பூதாமால். [லங்கும் வளமிறுத்த

பொ + ரை.

சந்திகளையுடைய நீண்ட வீதிகளிலும் மதிளரங்கங்களிலும் பொன்மயமாகிய ரத்நமிழைர்தவுபரிகையிலும் விளங்குகின்ற மேகங்கள் மின்னும் மின்னலைப்போலே நிற்கின்ற ஸ்திரீகள் உருப்புகளிலணிகின்ற வெண்மையாகிய முத்துமாலைகளைக்கழற்றிப் பக்கத்தில் நிற்கின்ற தென்னைமரத்தில் வைத்துத்தங்கள் கூந்தலையுலர்த்தவும் மரங்களெல்லாம் முத்துமாலையாகக் காய்க்கின்றதென்று சொவ்லும்படிப் பட்சிகள் சிந்தியிருக்கின்ற ஆச்சரியமும் ஆகும். எ + று. (௫௦)

வேறு.

சேணுயர்மேடைமாதர் செல்லன்மின்னிடையைக்கைதை
காணவுமதிமுகத்தைக் கண்டிடநீலங்காதிற்
பூணணிகுழைகள்காணப்புட்கரங் கூந்தனோக்க
நாணனைமுலையுங்காட்டிநனிமலர்ந்திடுவ மாதோ.

போ+உரை.

ஆகாயத்தையளாவிய உபரிகையிற்செல்கின்ற மாதர்களிடையை மின்னலென்று தாழைகள் பார்க்கவும் சந்திரன்போன்ற முகத்தை நீலோத்பலங்கள் பார்க்கவும் காதிலணிந்த ரத்நஓலையைத் தாமரைகள் பார்க்கவும் கூந்தலைப்பார்க்க முல்லைகளும் மலர்ந்தன. எ+று. (௩௮)

வேறு.

இமையகுலப் புதல்விமணஞ் செயுஞ்சத்தரிடியீச
னெய்தும் வீதி
சமனுறக்குங் குமங்களபந் தண்பனிநீர்பெய்சேற்றிற்
றையல் கூந்தற்
கமழ்செறியும்மலர்த்தாது பிதிர்ந்தொழுகு மதுக்களொடு
கலந்திழுக்கு
மமையமைதோள் வங்கியினளாடுதகங் கடனுற்ற
மகற்றுமன்றே.

போ + ரை.

பர்வதராஜகுமாரியைக் கல்யாணஞ்செய்தருள்கின்ற ஸப்தரிஷீசர் பவனிவருகின்ற வீதிகள் சமனுவதற்குக் குங்கும, கலவைகள், பனிநீரும்தெளித்த சேற்றினிலே பெண்களது கூந்தலில் பரிமளிக்கின்ற புட்பத்தின் மகரந்தங்களுதிர்ந்து தேனுடனே கலந்து வழுக்கலைச்செய்யும். மூங்கில்போலு தோள்களில் வளையலணிந்த பெண்கள் நீராடும் ஜெலங்களோடிச் சமுத்திரத்தினது துற்னாற்றத்தை நீக்கிவைக்கும். எ+று. (௩௯)

வேறு.

சோலைநாடிழிந்துசாரி சுழறென்றற்றேரிலேறி
மாலையாங் களிறுங்கிள்ளை வாசியாப்பதாதிமின்னார்

வேலையாம்முரசொலிப்ப விதுக்கொடையேந்திவிட்செல்
சேலைமீநாட்டிக்கன்னற் சிலைவளைத்தளிநாணேற்றி.

பொ + ரை.

பூஞ்சோலையாகிய தன்னகரைநீங்கி மெதுவாக வீசுகின்ற தென்றலாகிய தேரிலேறி இருட்டாகிய யானையும் கிளியாகிய குதிரையும் பெண்ணாகிய சேனையோடும்கடலாகிய முரசம் முழங்கச் சந்திரனாகிய குடையை யேந்தி ஆகாசத்தையெட்டுகின்ற மீனக்கொடியை நாட்டிச்செங்கரும்புவில் லைவளைத்து வண்டுகளாகிய நாணையிறுக்கி. எ + று. குளகம். (௩௰)

காளமாங் குயில்களூதக் கமலமுல் லைகளசோகங்
காளமாங் குவளைசூதங் கலவுமைந் தேவையேவும்
வேளனங் கனுங்கண்டஞ்சி மீண்டிடு மின்னாரங்க
வேளன நமமையாற்று மெனவுறுப் புறலினன்றே.

பொழி + ரை.

மாமரத்துலாவுகின்ற குயிற்குரலை எக்காளமாகவும்கொண்டு தாமரை, முல்லை, அசோகம், நீலோற்பலம், மாம்பூவுமாகிய பஞ்சபாணங்களையும் பியோகஞ்செய்கின்ற ஆசையாகிய மன்மதனும் மின்னலைப்போலுமிடையை யுடைய ஸ்திரீகள் அவ்விடத்து அந்த பரிகாசத்தை நமக்கு செய்வார்களிவர் நமது குடியிருப்பிடமாகிய உருப்பைக்கொண்டதினாலென்று தரும்பிப் போவான். எ + று. (௩௧)

ஆலைய மல்குல்காதி னணியுருண் மார்பு ரோமங்
கோலமா ரிரதங்கோணங் கொடிவராற் புருவம்வில்லா
நீலமை நோக்கநாணி நேத்திரம் பகழியாகப்
பானுரை காளமாகப் பாவைவே ளினைமருட்டும்.

பொ + ரை.

கடிதடங்களே மன்மதன் குடியிருக்குமாலையமாகவும், காதினோலைகளே வண்டில்களாகவும், மார்பு ரோமங்களே தேராகவும், மூக்கையே மீனக்கொடியாகவும் புருவங்களையே வில்லாகவும், கரியகண்களையே நாணியாகவும், பார்வையையே பாணமாகவும், பால்போலுமினிய வார்த்தையையே எக்காளமாகவுங்கொண்டு ஸ்திரீகள் மன்மதனை மயக்குவார்கள். எ + று. (௩௨)

எகினம்பைங் கிள்ளைபூவை யிருட்குயின் மேகம்பாங்கி
சிகியளி பேதைநெஞ்சந் தென்றலீ ரைந்துந்தூது

தருமென வவரையேவித் தந்தசொல் வினையவற்றை
முகில்புரை யளகமாதர் முடிக்கிப்பின் விடையுங்கொள்வார்.

பொழி + ரை.

தனது ஆசை நாயகனிடத்தில் அன்னம், கிளி, நாகணவாய், கோகிலம், மேகம், தோழி, மயில், வண்டு, அறியாமையாகிய மனம், தென்றல் இந்தப்பத்தும் தூதுக்காகுமென்று பாங்கியரையனுப்பித் தெரிந்தும் அன்னம் முதலானவைகளையனுப்பியும் மேகம்போலிருண்ட கூந்தலையுடைய பெண்களானவர்கள் வதல் சொல்வதைத் தெரிந்துகொள்வார்கள். எ + று. (௩௩)

பாரிமேற் றூவிமெத்தை தலையணை படாரங்குட்
பாரிபாக் கிலைலவங்கம பரித்திட மதனலீலை
பாரிச மிருந்துசெய்யப் பரிந்தவ ருடல்கொள்ளப்
பாரில்வெண் மதிபோலங்குப் பரவுகைக் களையினர்வார்.

பொழி + ரை.

கட்டிலின்மேலே ஹம்ஸதூலிகா தல்பத்தில் தலையணையுடனே இருக்கின்ற சயனக்கிரகத்தில் மனைவி, பாக்கு, வெற்றிலை, லவங்கமும் சேர்ந்த சுருள் கொடுத்தருந்தி மன்மதலீலைகளை தன் பக்கத்திருந்து செய்து இருவரும் மகிழ்ச்சியடைந்து தங்களிற்பிணங்கிக்கொள்ளவும் சந்திரபிம்பம்போலே ஒரு தலைக்காமமுடையவராவார்கள. எ + று. (௩௪)

பதமருண் மறையோன்கோட்டம் பதிபதி யகத்துணித்தம்
வதுவைக ளாற்றும்வாயின் மலர்நெடுந் தாமப்பந்தர்ப்
பதலையோ டொலிமுழங்கப் பரிசனச் சிவிகையோடுந்
துதைமறைக் கும்பம்வைத்துச் சுடரொளித் தீபஞ்செய்வார்

பொ + ரை.

நாலு பதவிகளும் தந்தருள்கின்ற ஸப்தரிஷீசர் திருக்கோயிலுடனே நகரில் விளங்கிய கிரகங்களிலே நாள்தோறும கல்யாணம் செய்கின்ற வாசலிலே மலரினலாகிய நீண்டமாலைகள் தொங்கவிட்ட பந்தலில், மத்தளம், பேரி முதலாகிய வாத்தியங்கள் முழங்கவும், பரி சனக்கூட்டத்துடனே பல்லாக்கின்மேல் வீதியில் வருவோரும் வேதமந்திரங்களைச் சொல்லிக்கொண்டு பூரண கும்பங்கள் வைப்பவரும், தீபங்களைப் பிரகாசமாக ஏற்றிவைப்பவரும். எ + று. (௩௫)

மத்தகக் களிறுகட்டும் வாயின்முன் மரங்கடம்மிற்
குத்திய கோடுபோலக் குன்றுறழ் புயத்தினுனைப்
பொத்திய மாதர்கொங்கை பொலிநதணி களபத்தாழ்ந்து
முத்தியன் மாலையோடும் மொய்ம்புரத் திலங்குமாதோ.

போ + ரை.

மஸ்தகங்களையுடைய யானை கட்டியிருக்கின்ற வாசலில் நிறுத்திய மரங்களிலேகுத்திய அந்தத் தந்தங்கள்போலே மலையையொத்த புஜத்தையுடைய தன் புருஷர்களை ஆலிங்கனஞ்செய்த பெண்களினது ஸ்தனங்கள் அவர்கள் விளங்கவணிந்தகலவைச் சாந்தில் முழ்கி அதிலணிந்த முத்துமாலைகளுடனே வலியுடைய மார்பில் விளங்கும். எ + று. (௫௬)

சாரும்பா லிகைகள்வைப்பர் சராசனம் மூங்கினுட்டும்
பூரண கும்பமுய்ப்பார் பொரிமலர் தூவிநிற்பார்
நீரிற்பன் னீரிறைப்பர் தாரைநீ ரூற்றுகிற்பர்
மாரணி மாலைமாற்று வார்கண்மங் கலமிசைப்பார்.

பொழி + ரை.

முளைப்பாலிகை வைப்பார்கள் அரசும், மூங்கிலும், நாட்டுவார்கள். பூரணகும்பம் எடுப்பார்கள் நெற்பொரிகள், புட்பங்களையும், தூவுவார்கள். சலம்போலே பன்னீர் தெளிப்பார்கள் தாரை நீரூற்றுவார்கள் தோள்மாலை மாற்றுவார்கள், மங்களம் பாடுவார்கள். எ + று. (௫௭)

வேறு.

அந்தணர்க ளோதிடுநான் மறையதிர்ப்பு மரசர்நெறி
யமைப்பி னார்பபுந்
தந்தமுறி படக்கரிகள் பொருமார்ப்புங் கவனவயந்
தாமு ழக்குந்
தொந்தமிடுஞ் சிரவவினத் தெழுமொலியுங் குக்குடப்போர்த்
துவையும் பல்ல
குந்தளச்செம் மறிகள்சினங் கொடுதொடர்ந்து முட்டியமுங்
குலவு மன்றே.

பொ + ரை.

பிராம்மணர்கள் அத்தியயநம் செய்கின்ற வேதவோசையும், அரசர்கள் மநுநெறிப்படித் தீர்ப்புச்செய்கின்ற ஓசையும், கொம்பு முறியும்படி யானைகள் சண்டைசெய்யுமோசையும், வேகத்தையுடைய குதிரைகள் தாவுகின்ற ஓசையும், கவுதாரிச்சண்டையினோசையும், கோழிச்சண்டையினோசையும், அனேகமாகிய மயிர்களையுடைய ஆட்டுக்கடாய்கள் ஒன்றுடனொன்று தாக்கும் ஓசைகளும் சூழ்ந்திருக்கும். எ + று. (௫௮)

நவவிரதந் தருங்கனியி னல்வல்லி செடிக்காய்கள்
சுவைதருகு பலவித்துந் தொன்மலையின் வகையைந்துங்
கவையினருள் பொருளைந்துங் கடலைந்து நகர்நாட்டின்
அவிரைந்து மிரசதம்பொன் னுடையணி தருந்தெருவும்.

பொ + ரை.

நவரஸங்களையுங் கொடுக்கின்ற கொடிப்பழங்களும், செடிப்பழங்களும், ருசியாகிய பலவிரைகளும், மலைபடுதிரவியங்களாகிய மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமம் இவ்வைந்தும், காடுபடுதிரவியங்களாகிய தேன்கூடு, தேன், அரக்கு, மயிற்பீலி, நர்வி இவ்வைந்தும், கடல் படுதிரவியங்களாகிய உப்பு, முத்து, பவழம், சங்கு, ஒக்கோலை இவ்வைந்தும், நகர்படுதிரவியங்களாகிய அரசன், பித்தன், மந்தி, யானை, கண்ணுடி இவ்வைந்தும், நாடுபடுதிரவியங்களாகிய செந்நெல், சிறுபயறு, பரும்பு, வாழை, செவ்விளநீர் இவ்வைந்தும், வெள்ளியும், பொன்னும், வஸ்திரமும், ஆபரணங்களும் விற்கின்ற கடைத்தெருக்களும். எ + று. (௫௯)

அவ்வார வாரநகர்ப பூவணிகர் கோவசிய ரத்தநாய்கர்
கவ்வீதி களுமவர்க்கு ளேய்ந்துசெயும் வினையினர்கள் கலந்தவீதி
யொவ்வாத நவமணிபொன் விற்குநர்தோ யுபரிகைக ளொன்றும் [வீதி
செவ்வேசெய் தொழிலமைகண் ணுளர்தெரு வும்மயனூர் சிரிக்கு [மன்றே.

பொ + ரை.

அந்தவிதம் ஓசையுடைய நகரில் பூவசியர், கோவசியர், தனவசியர்களிருக்கின்ற வீதிகளும், அவ்வசியருக்குள் தொழில்செய்வோர் வசிக்கும் வீதிகளும், உவமையில்லாதுயர்ந்த ஒன்பது ரெத்தினங்களும் தங்கமும் விற்ப

வர்கள் வசிக்கின்ற மாடவீதிகளும், சுத்தமாகிய வேலை செய்கின்ற பொன் கொல்லர்கள் வசிக்கும் வீதிகளும், விசுவகர்மாவின் நகரைப் பரியாசம்பண்ணும். எ + று. (சுய)

சதுரங்க சேனையொடு தார்முரசு கொடிதாங்கும் மன்னர்வீதி
வதுவையிழைப் பவர்கணகர் வலம்வருகு நெடுமாட மன்றமெங்கும்
கதிரெறிக்குஞ் சிவிகையினுங் கவனவய விமானத்து மூர்ந்துசெல்
[லும்.
பொதுமகளி ராவணமுஞ் சந்திசதுக் கமுங்கந்தப் பொருளும்மல்
[கும்.

போ + ரை.

ரதம், கெஜம், துரகம், பதாதியென்னும் நான்கு அங்கங்களோடும் மாலை முரசு கொடி இவைகளைத்தாங்கிய அரசர் வீதியும், கல்யாணமாப்பிள்ளைகள் ஊர்கோலம் வருகின்ற நெடுந்தெருக்களெங்கணும் காந்தி வீசுகின்ற பல்லாக்குகளிலும் வேகமாக நடக்குங்குதிரைகள் பூட்டிய தேர்களை நடாத்திப் போகின்ற வேசிமார் குடியிருக்கும் வீதியும், கூடமிடமும், நாற்சந்திகளும், வாசனைப்ண்டங்கள் நிறைந்திருக்கும். எ + று. (சுக)

வேறு.

அக்குலத்தோர் குலவுபெரும் பதிகொள்வாவி
யணைந்திலங்கை யரக்கனழற் குண்டங்கோலி
யுக்கிரமா யெக்கியஞ்செய் சதுரவாவி
யுள்ளுறையு மறுபான்சட் கோடிதீர்த்தம்
முக்கிடுமப் புனனிறைவிற் றீயினெங்கும்
முளரிமலர் செங்கழுநீர் முகையினல்லி
மைக்குவளை மலர்மதனன் வாளிமான
மலர்ந்தனவம் மதுவையளி மருவுமன்றே.

போ + ரை.

நான்கு சாதிகளும்பொருந்திய அந்நகரிலிருக்குந்தடாகக் கரையை அடைந்து இலங்காதிபனாகிய ராவணன் அக்கினிகுண்டஞ்செய்து உக்கிரமாகிய யாகஞ்செய்கின்ற நாற்கோணமாகிய அத்தத்தீர்த்தத்துள்ளே அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும் மூழ்கின்ற அந்த ஜலங்களெல்லாம் செந்தணலை

ப்போலே தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும், உண்டாகிய செவ்வாம்பலும் நீலோற்பலமும் மன்மதனுடைய பாணங்களைப்போலவும் வளர்ந்திருக்கும். அத்தேனை வண்டுகள் மொய்த்திருக்கும். எ + று. (௬௨)

பக்கநெடுஞ் சோலைப்பைங் குலைகடம்மிற்
பருத்தவரால் பெரும்புனல்விட் டெழுந்துமுட்ட
மிக்கமது வொடுங்கனிக ளெங்குஞ்சிந்த
விரிந்தமதிட் படிகளொடு மிசைநதுவாவி
புக்கிடவா னுலகரம்பை நால்வர்கூடிப்
புனலாடக் கின்னரர்கிம் புருடர்கண்டு
குக்கியொடு தழுவவெனக் கரங்களில்லைக்
கோவையித ழுண்டிடவா யிலையென்பாரால்.

போ + ரை.

அகோரதீர்த்தத்தின் கரையில்சூழ்ந்த சோலைமரக்குலைகளிலே பெரிய வரால் மீன்கள் அந்த நீரைவிட்டெழுந்து பாய்ந்து அதிகமாக மதுக்களையும் கனிகளையுமுதிர்த்து அத்தடாகத்திற் புகுந்திருப்பவும் அரம்பை, மேனகை, ஊர்வசி, திலோத்தமை என்னுநால்வர்களுங்கூடி நீர் விளையாடவும், கின்னரர்கள் கிம்புருஷர்கள் அவர்களைக்கண்டு இவர்களை வயிறுறுக ஆலிங்கனஞ்செய்வதற்குத்தகுந்த கைகளுமில்லை அதரபாணஞ்செய்வதற்குவேண்டிய வாயுமில்லையென்று சொல்லுவார்கள். என்றவாறு. (௬௩)

வேறு.

அந்தவழற் குண்டமதற் கருகுகுட திசையிற்
சுந்தரச்சத் திருஷசர் சொன்னமணிக் கோயிற்
பந்தியெயில் சிகரங்கள் பருதிவழிக் கப்பா
லந்தரமீச் சென்றனவ வ்வாடகக்கும் பங்கள்.

போ + ரை.

அந்த அகோரதீர்த்தத்தின் பக்கலில் மேற்றிசையில் அழகராகிய ஸப்தரிஷீசர் கோயிலினுடைய பத்தியாகிய மதிள்களும், கோபுரமும், சூரியமண்டலத்திற்கப்புறமும், ஸ்வர்னகலசங்கள் ஆகாயத்தளவுஞ் சென்றிருக்கின்றதுகள். எ + று. (௬௪)

உயர்ந்தநெடுங் கோபுரத்தி னுச்சியினற் சுரர்க
ணயம்பெறுவா னிருந்திடநல் லேழிசைக்கந் தருவர்
மயன்றுடனன் னிலையுள்ளம் மகிழ்ந்துமிக வாழ்க
வயனும்மன்னந் தேடிவர லாகியதவ் விடமே.

போ + ரை.

ஓங்கிய நீண்டகோபுரத்தினுச்சியிலே தேவர்கள் மேன்மை பெறும்படியிருக்கவும் சரிகமபதநியென்று மேழிராகங்களையுடைய கந்தருவர்கள் ஆசையோடும் அத்தன்மைகண்டுள்ளம் மகிழ்ந்து எந்நாளும் வசித்துக்கொண்டிருக்கவும், பிர்மதேவனும் அப்படிக்கொத்த மகிமைகளைக்காண வந்திருக்கும் தன் அம்ஸவாகனத்தைத் தேடிவரும்படியுள்ளதாகும் அந்தக்கோபுரத்தினுச்சி. எ + று. (௬௫)

வட்டநெடுங் கேதுலவு வழிக்கப்பாற் கோயிற்
கட்டுகம்பத் தின்றுவசங் காட்டுகுசங் கண்டே
திட்டிநெடு வாசல்களைத் தீர்ந்திடவு மிளைக்கு
நட்டமுயன் பண்டபஞ்சித் திரமுநவ மாமால்.

போ + ரை.

வளைந்திருக்கின்ற கேதுவானவன் சஞ்சரிக்கின்ற தன் மண்டலத்திற்கும் மேலே கோயிலிற் கட்டப்படுகின்ற துவசஸ்தம்பமும், அதிற்கட்டிய தருப்பையையுங் கண்டு கோபுரத்தினது நீண்டதிட்டி வாசல்களையுந்தாண்டிப் போவதற்குச் சத்தியற்றவனுப்ச் சோர்வடைந்திருப்பதையும் நர்த்தநமண்டபங்களும், சித்திரங்களாற் புதிதாக விளங்கும். எ + று. (௬௬)

அந்தணனுக் கருளளித்த வரன்பதிமேற் றிசையில்
வந்திடுமை யாறெனவே மாநதியொன் றுண்டவ்
விந்துமுடி யாருமையோ டெய்துவர்க ளாடிற்
சிந்துபல வின்றிறமை சேர்க்கவுமொவ் வாதே.

போ + ரை.

பிர்ம்மகுலத்தவராகிய உருத்திர பசுபதியாருக்குக் கிருபைசெய்த ஈசுவரன் கோவிற்கு மேற்குத்திக்கில் உண்டாகிய ஐயாறென்று பேர்பெற்ற மகா நதியொன்றுள்ளத்தனில் ஸ்நாநஞ்செய்பவர்களுக்கு சந்திரமௌளியானவர் இடபாரூடராய் எழுந்தருளியருள் செய்வார் பல நதிகளுடைய புண்யவிசேடங்களுமிந்நதிக்குச் சமானமாகமாட்டாது. எ + று. (௬௭)

வேறு.

அந்த மாநதி காலங்க ளாறினு மொழுகும்
முந்து கார்தனின் முகில்சொரி வெள்ளநீர்.பரவி
யுந்தி கொண்டொலி யுடன்மிகக் கலங்கின புலன்க
ளைந்தெ னிந்திரி யங்களாற் கலங்குளம மான.

போ + ரை.

அவ்விதமாகிய மகா நதியானது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதிர்வேனில் என்னும் ஆறு பருவங்களிலும் ஓடிக்கொண்டிருக்கும் முதலாகிய கார் பருவத்தில் மேகம் மழைசொரிந்த வெள்ளஜெலம் போய் சுழிப்புடனே ஆரவாரித்து மிகவுங்கலங்கிக்கொள்ளும் சப்த-பரிச-ரூப-ரச-கந்தமென்கின்ற மெய், வாய், கண், மூக்கு, செவிகளினாலே குழம்பப்பட்டச் சித்தத்தைப்போலும். எ + று. (சுஅ)

கூதிர் மைக்குயில் கூவிட வான்சொரி வெள்ளம்
பூதை விட்டபோ லோடுநீர் பிரளையம் பூண்டு
சேது கட்டுவாய்க் காலினூற் சென்றிட மருதந்
தீதி றிண்கரை யேரிக ணிறைந்திடச் சேரும்.

போ + ரை.

கூதிர்காலத்திலே கருங்குயில் கூப்பிட மேகங்கள் சொரிந்தமழை வெள்ளமானது எய்யும் அம்புபோலே ஓடுகின்ற நீர்ப்பெருக்கினால் அணைகட்டுதலையுடைய வாய்க்காலிற்சென்று வயல்களிலும், குற்றமில்லாத கரைகளையுடைய ஏரிகளிலுங்கடைபோகும்படி அடையும். எ + று. (சுகூ)

சென்று முன்பனிக் காலத்தி னீத்தங்க டெருட
னின்று வந்திடு நிறைந்தசின் மயத்தின ருளம்போல்
ஒன்று பின்பனி யும்பர்கண் மகளிரோ டாடத்
தென்ற லோச்சிடச் சிகரத்தி னுவதைக டெளியும்.

போ + ரை.

கூதிர்காலஞ்செல்லவும் முன்பனிக்காலத்தில் வெள்ளமானது தெளிவடைதல் நிலைநின்று மகிழ்வடைந்த அகண்டாகாரசிற்சொரூபத்திற் கலந்தவர்கள் உள்ளத்தைப்போலேயும் பொருந்திய பின்பனிக்காலத்தில் தேவர்கள் அரமாதர்களோடுகூடி நீர் விளையாடவும் தென்றற்காற்று வீசவும், மலையருவிகள் தெளிந்தோடும். எ + று. (எo)

தேசு வேனிலின் னதிமணற் றிரளையைப் பரூஉத்து
மாசி னீர்சிறந் திரிந்துநன் மருதங்க ளணையும்
பாசி ழைப்பர னைம்முகத் தாற்பர வையா
ரோசை யோடுமோர்ந் தோடுவ பொன்னியி னுற்றே.

போ + ரை.

பிரகாசம் பொருந்திய வேனிற்காலங்களில் நதியினது மணற்கட்டிகளைப் பறித்துக்கொண்டு குற்றமில்லாமல் ஓடி நஞ்செய் வயய்களிற்சேரும் பொன்னுபரணமணிந்த பார்வதி நாதனாகிய சிவபெருமான் ஐந்து முகத்தினாலும் பரந்த ஐயாறனது ஓசையோடு விறைந்தோடிக் காவேரியோடும் சேரும். எ + று. (எக)

வேறு.

அப்பதிவா ழந்தணர்க ளறுதொழிலும் மூவழலும் மகலார் சுத்தஞ்
செப்பவொணு வக்குடிக டிறங்குபே ரனுமொவ்வான் திருமா றேடா
டப்பின்மொழி யவர்க்கரிச்சந் திரனிகரா னவர்பொறுமை தரணி [நேரி
ஞெப்பிடுமோ வத்தலச்சொ லுரைப்பவர்நா வினளயன்பா லுறை
யாளாமல்.

போ + ரை.

அவ்விதமிருக்கின்ற நகரில் வசிக்கின்ற வேதியர்கள் எஜன, யாஜந, தாந பிரதிக்ரக, அத்யயந, அத்தியாபகமென்னும் ஷட்கற்மமும் ஆகவனீயம் காருகபத்யம் தெட்சிணக்கியம் என்னும் மூன்றக்கியும் விடாது செய்வார்கள் நேமநிட்டைகளும் சொல்லவருமையாயிருக்கும் குடிகளின் செல்வத்தின் மிகுதிக்குக் குபேரனும் ஒப்பாகான். லட்சுமிதேவி வீஷ்ணுமூர்த்தியைத் தேடமாட்டாள் மெய்ம்மொழி பேசுகின்றவாக்கில் அரிச்சந்திரனும் சமனாகான், பொறுமையுள்ளவர்க்குப் பூமிதேவியும் முன்னிலையிற் சமதையாகாள் அந்தஸ்தலபுராணபடனத்தோர்களது நாவில் வாணியானவள் வசித்திருப்பாள் பிர்ம்மதேவனிடம் பொருந்தாள். எ + று. (எஉ)

வேறு.

பூமிதனக் கோர்திலகம் பொன்மானுக் கொருமான் மார்
நேமிதனக் கொருநேமி நிதிபதிக்கோர் நவ நிதியந்
தோமில்லார்க் கொருகயிலை தொன்மறைக்கோர் சுட ராகு
நாமகட்கோர் மலரென்ன நவில்வர்திருத் தலை யூரை.

பொ + ரை.

பூதேவிக்கு நெற்றியிலணிந்த பொட்டுமாகும் இலக்குமிதேவிக்கு விஷ்ணுமூர்த்தியின் மார்புமாகும் விஷ்ணுமூர்த்திக்குப் பாற்கடலுமாகும் குபேரனுக்கு கச்சபநிதி, கற்பநிதி, சங்கநிதி, நந்தநிதி, நீலநிதி, பத்மநிதி, மகாநிதி, மகாபத்மநிதி, முகுந்தநிதி என்னும் நவநிதிகளுமாகும் மும்மல நீங்கிய மெய்யடியவர்க்குக் கைலையங்கிரியாகும், வேதங்களுக்குப் பரஞ்சோதியாயிருக்கும் சரஸ்வதி தேவிக்கு வெண்டாமரைப்பூவும் ஆகுமென்று திருத்தலையூரைச் சொல்வார்கள். எ + று. (ரசு)

## பலதலப்பெருமை யுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆக செய்யுள் சுசு.

சிவமயம்.

## உ-வது தலமுற்பத்தியுரைத்த வத்தியாயம்.

துதி-வேறு.

சங்குவெண் டாளம்பக்க மிரண்டினுஞ் சாத்தி யோடிப்
பொங்குமை யாறுதந்த புண்டரீ கத்தி னைம்மு
கங்குல வமலமூர்த்தி கண்ணுத லிமைய மீந்த
குங்குமை வாமஞ்சேர்த்த குழகனைப் போற்றி வாழ்வாம்.

பொ + உரை.

சங்குகளையும் வெள்ளியமுத்துக்களையும் இரண்டு கரைகளிலும் அணிந்து ஓடுகின்ற பெருக்கமுடைய ஐயாற்றை உற்பவித்தருளிய தாமரைபோலும் ஐந்து திருமுகங்களும் பிரகாசிக்கின்ற சுத்தஸ்வரூபமும் மூன்றுகண்களையுமுடைய பர்வதராஜ குமாரியாகிய குங்குமாம்பிகையை இடப்பாகஞ்சேர்த்தருளிய ஸப்தரிஷீசரைத் தோத்திரஞ்செய்திருப்போம். எ + று.

(க)

அப்பதித் திறமைதன்னை யாவரு மறியார் வேதஞ்
சேப்பிய தலச்சிராதி சேடன்பண் ணவர்க்குக் கைலை
யொப்பிடு பதியிலிங்க முற்பவ மான வாறுந்
தப்பறச் செப்புமாண்புந் தாற்பியர் சாற்ற லுற்றார்.

பொ + ரை.

அப்பதியின் மகிமைகளை எவருந்தெரியமாட்டார்கள். இரண்டாம் வேதத்திலே சொல்கின்ற ஸ்தலத்தின் மகிமையை ஆதிசேஷன் தேவர்களுக்கு ஸ்ரீகயிலாசகிரியையொத்த ஸ்தலமும் இலிங்கமும் உண்டான காரணத்தையொன்றும் விடாமல் சொல்லிய மாட்சிமையைப் (பாண்டவருக்கு) தால்ப்யமுனிவர் சொல்லஆரம்பித்தார். எ + று. (உ)

பொன்மலைச் சிலைவளைத்தார் பூதலந் தங்கும் பல்ல
நன்பதி களிலமர்ந்து நாற்பதந் தருமவ் வீசன்
றென்றிருத் தலையூர்வந்த திறனிதுவாதி காலம்
வன்றரை முற்றுந்தண்ட காவன மாகு மன்றே.

பொழி + ரை.

மகாமேருவை வில்லாகவளைத்த சிவபெருமான் பூலோகத்திலிருக்கின்ற ஆயிரத்தெட்டாகிய புண்யஸ்தலங்களிலெழுந்தருளிச் சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சியம் என்னுநாலு பதவிகளையும் தந்தருள்பவர் தெட்சிணத்திலிருக்கின்ற திருத்தலையூரில் எழுந்தருளிய விதமானது பஞ்சபாண்டவர்களே முன்காலத்தில் வலிமையுடைய பூமி முழுவதும் தண்டகாரணியமாகும். எ + று. (ங)

வேறு.

ஓங்கு சந்தன மகிலுடன் வேய்பலா கமுகு
கோங்கு பாடலங் குலைதழை கதலிநற் சூதந்
தேங்கு நாரங்கஞ் செண்பகஞ் செறிந்துசூழ் பொழில்கள்
பாங்கு மிக்குறுஞ் சதுரமால் வரைமுதற் பறம்பும்.

பொழி + ரை.

உயர்ந்த சந்தனமரமும், தேவதாருவும், மூங்கிலும், பலாமரமும், பாக்குமரமும், [illegible]மரமும், பாதிரியும், சாய்த்திருக்கின்ற வாழைகளும், மா

மரமும், நெருங்கிவளர்ந்த சோலைகள் பக்கங்களில்மிகுந்த கொல்லியென்னும் பெரியமலை முதலாகிய மலைகளும். எ+று. குளகம். (ச)

வேறு.

சூழுமவ் வரைக டம்மிற் சொரியும்வான் கூதிர் காலங்
கீழுறை குறவர் சேந்தற் போற்றிப்பின் கேடில் வில்லின்
மேழியி னுழுது கெல்லி விரைத்தசெந் தினைக்கா னங்க
டோழியிற் கொடிச்சி மார்விண் டோய்பர ணிருந்து காக்கும்

பொழி + ரை.

வளர்ந்த அந்த மலைகளில் மழைபொழிகின்ற கூதிர்காலங்களிலே சாரலிலிருக்கின்ற குறவர்கள் முருகக்கடவுளை ஏத்திப்பின்னர் கெடுதலில்லாத விற்றடிகளாலும், கலப்பைகளாலும் உழுதும தோணடியும், தெளித்திருக்கின்ற தினைக்காடுகளை தோழிப்பெண்களுடனே குறிஞ்சிநிலப்பெண்கள் ஆகாயந்தோயப்பெற்ற பரணிமேலிருந்து பாதுகாப்பார்கள். எறு+. (ரு)

சுருண்மயிர்க் கற்றை மாதர் சொற்கள்பைங் கிள்ளை யொக்
வருகுவார் சிகியி னுடி வந்துமேய் கின்ற புட்க [கும்
ளொருவிட வோச்ச வோடி யோங்குதேக் கசோகம் மற்
. றைத்
தருவெலா மமர்வ வேனற் றன்பதங் கொய்து கொள்ளும்.

பொ+உரை.

சுருண்டமயிர்க் கூட்டத்தையுடைய குறத்தியர் பேச்சுகள் கிளிகள் பேசுவதையொப்பாகும் அவர்கள் ஓடிவருவது மயிலைப்போலிருக்கும், அவர்கள் கொல்லையில்வந்து மேய்கின்ற பட்சிகளை ஓடும்படி ஓட்டிவிடவும் பறந்துபோய் உயர்ந்த தேக்கு அசோகம் முதலாகிய மரங்களெல்லாம் உட்கார்ந்திருக்கவும் செந்தினைகளைப் பக்குவங்கண்டறுத்தெடுத்துக்கொள்வார்கள். என்றவாறு. (சு)

வேறு.

கோலி ரும்புகைக் குறவர்கள் கொட்டியை யகழ்ந்து
மால ரும்புசெந் தேனொடு தினையடு மமுதுஞ்
சீல மில்லன ரருந்துவர் திரள்கரிக் கோடுஞ்
சால சந்தகிற் குறிஞ்சியிற் சார்பொரு டருவார்.

போ + ரை.

குறவர்கள் கையிலுள்ள இருப்புத்தடியால் கொட்டிக்கிழங்குகளைப்பறித்தெடுத்து, மயக்கஞ்செய்கின்ற தேனோடு தினையையுங்கலந்து பாகஞ்செய்ததையும், சீலமில்லாதவராகியுண்டு, அதிகமாகிய யானைத்தந்தங்களையும், மிகுதியான சந்தனத்துண்டங்களையும் அகில் கட்டைகள் முதலான மலையிலுண்டான பொருள்களையுங்கொடுப்பார்கள். எ + று. (எ)

தும்பி முக்கடாக் களிற்றினை முடங்குளை துரத்த
வெம்பி வீறிடப் பல்லமுங் குறிஞ்சியாழ் விளம்ப
வும்ப ரங்கமர் புரிகுவான் வந்த போல் வெருளச்
சிம்புள் வன்புலிக் குலவிறைச் சிகள்பொசித் திடுமால்.

போ + ரை.

துதிக்கையையும் மூன்றுமதங்களையுமுடைய யானையைச் சிங்கங்கள் வெருட்டவும் வருந்திக்கூக்குரலிடவும் கரடியும் கூவவும் (குறவர்) குறிஞ்சிநிலத்தின் யாழினை வாசித்தலினாலும், தேவர்கள் அந்த இடத்தில் யுத்தஞ்செய்கின்ற களமென்று பயந்துபோகும்படி சரப்பட்சிகள் வலியபுலியினது சாதியான இறைச்சிகளைப்பொசிக்கின்றன. எ + று. (அ)

சுனைகொ ணீரினிற் றோய்ந்திடு வானுல கரம்பை
வினைகொ ளொன்மணி யணிந்திட வெடுக்கும்வெள் ளருவி
நனவு கொண்டுநன் முல்லையி னணுகிடுங் கன்றோ
டினமு மானிரை மேய்ப்பவர் திருமனைத் தொழுவார்.

போ + ரை.

மலைச்சுனைநீரில் ஆடுகின்ற தேவரம்பை முதலானவர்கள் தொழிலமைந்த ஒளிபொருந்திய ரெற்றினங்களைத் தரித்துக்கொள்வதற்குப் பொறுக்குகின்ற வெள்ளியமலையருவிகளானது தெளிவடைந்து செழித்த முல்லை நிலங்களிலே சேரும் பசுவின் கன்றுக்கூட்டங்களுடனே பசுக்குலத்தை மேய்க்கின்ற இடையர்கள் விஷ்ணுமூர்த்திக்கு வழிபாடு செய்தெழுவார்கள். எ + று. (கூ)

சுழிபடுங் கடற் புனல்கவர் மேகங்கள் சூழ்ந்து
பொழியு மப்புன லுவர்கெடுத் தமுதத்திற் பொலிவ
விழிகொள் விண்ணவர்க் கூட்டிமண் ணவர்மெலிந் தோர்க்
கழிவி லாதருத் தியுமப வருக்கநல் கவினே. [குன்

போ + ரை.

அலைத்துச்சுழிக்கின்ற கடல்நீரை மேகங்களுண்டு அதன் உப்பை மாற்றிப்பொழிகின்ற தீர்த்தமானது இமையவராகிய தேவர்களுக்குத்திருத்தி செய்தும், மானிடவர்களில் ஏழைகளையும் நீங்காமல் ஊட்டிவைத்தும், அமுதத்தினுலாகாத முத்தியையுங்கொடுத்தலினுல் சிறக்கும். எ + று. (கய)

கணைக்கு மன்மதன் றேடிடு மெனெனக் கருதி
யிணைக்கு ருந்தின்பேற் படர்ந்திடு முல்லைக ளிசைந்து
திணைப்பெ ருமையாற் செய்திடும பயிர்களை செழிக்கப்
பிணைக்கு லங்கடன் குருளையும் பெருகிடுங் கானம்.

போ + ரை.

மன்மதன் தனது பாணங்களுக்காகத் தேடுவானென்று நினைத்து முல்லைக்கொடிகளானது பூங்கொத்துகள் மலர்ந்த குருந்தமரத்தின்மேல் படர்ந்திருக்கும் மருதநிலத்தினது உயர்வினுல் விளைகின்ற செந்நெல் முதலாகிய பயிர்கள் விளைந்திருக்கவும் மான்கூட்டங்கள் தம்குட்டிகளுடனே அக்காடுகளில் விருத்தியடையும். எ + று. (கக)

அவ்வனத் திந்தி யேனமுங் கரடியு மறுகு
மைவணக் கரி யாளியுஞ் சிங்கமும் மகிழ்வ
செவ்வரி க்கிளி கோகிலம் மயில்புறச் சிறந்த
பைவளர்க் கரா வின்மணி யிருளறப் பரவும்.

போ + ரை.

அக்காட்டில் புனுகுபூனை, முள்ளம்பன்றி, ஆண்சிங்கம், கருத்தயானை, ஆளி, பெண்சிங்கமும் சந்தோஷிக்கின்றதுகள். பஞ்சவர்ணக்கிளிகளும், குயிலும், புறாக்களும் சிறப்பையடைந்திருக்கின்றன. மேலான படத்தையுடைய சர்ப்பத்தின் ரெற்றினங்களானது இருளைவிலக்கி இறைந்திருக்கும். எ + று. (கஉ)

அந்த மாவனத் தமர்ந்திடும் பலவுயிர் கட்குச்
சிந்தை கூர்ந்திடு மிகத்தினிற் றெளிந்தபே ரின்பம்
வந்து நற்றவங் தழைந்திட வான்முக மைந்தாற்
சிந்தி நந்துமோர் நதிதலத் திறமைசெப் பிடுவாம்.

பொ + ரை.

அவ்விதமாகிய ஆரண்யத்தில் தரித்திருக்கின்ற பல சீவகோடிகளுக்கும் மனது சந்தோஷிக்கின்ற இப்பிறப்பிலே தெளிவடைந்து பேரின்பமோட்சத்தைக்கொடுக்கின்ற தவங்கள் செழிக்கும்படி உயர்ந்த பஞ்சமுகங்களிலுமுண்டாகி வளர்கின்ற ஐயாறும், தலங்களும், அதன் விசேஷமும சொல்வோம். எ + று. (௧௩)

வேறு.

நாவலர் வணங்கிப் போற்ற நற்றவ முனிவர் தேடத்
தேவர்நா நங்கிற் சூழச் சிவப்பெருங் கணங்கள் தங்க
ளேவல்செய திடக்கரத்தி லெடுத்தபொற் பிரம்பு கொண்டு
காவனந் திசர் ராற்றுங் கைலைமால் வரையி னன்றே.

பொ + உரை.

சொல்வன்மையடைந்த பெரியோரால் பணிந்து துதிசெய்யவும் மெய்ம்மையுடைய முனிவராலாராய்ந்து தேடவும், தேவர்கள் பக்கத்தில் வளைந்துகொள்ளவும், சிவகரமாகிய பெரிய பூதகணங்கள் பணிவிடை செய்திடவும் கையில்தாங்கிய அழகுபொருந்திய பிரம்பைக்கொண்டு நந்திகேசுவரர் ஆக்ஞைசெய்கின்ற திருக்கைலாசமலையினிலே. எ + று. (௧௪)

வேறு.

கயிலை மால்வரைக் கடவுளைக் காண்குபு விரிஞ்ச
னுயிர ளித்தல்விட் டுறைய நீள் காலமுங் காணான்
குயில்வ ணன்மல ரருச்சனை புரிந்திடக் கொண்டு
தயவி னெண்டிகி ரிப்படை தருகிடப் பெற்றான்.

பொ + ரை.

கைலாசகிரியில் எழுந்தருளிய சிவபெருமானை பிரமதேவன் தனது சிருட்டித்தொழிலை நெடுநாள் நீங்கியுபாசித்துங் காணவில்லை. அப்பொழுது நீலமேகப்பெருமான் தாமரைப் பூவினாலருச்சிக்க அந்த ஈசனிரங்கி சக்கராயுதத்தைக்கொடுக்கப் பெற்றுக்கொண்டார். எ + று. (௧௫)

வேத நான்முகன் விதித்திட வருளப யமுங்கா
மாத வத்தினோர் விடுத்திடும் மான்மழுத் தரித்துச்

சீத வெண்பிறை கடுக்கைநீர்ச் செஞ்சடா மவுலி
நாத னைம்முகத் தமாநதனன் கைலைமா நகத்தில்.

பொ + ரை.

வேதங்களைத்தெரிந்த சதுர்முகப்ர்ம்மதேவனுக்குப் பண்டுபோலே சிருஷ்டிக்குந் தொழிலைக்கொடுத்தருள்கின்ற அபயவரதங்களோடும் தாருகாவனத்து முனிவர்கள் ஏவிவிட்ட மானையும், மழுப்படையையும் திருக்கைகளில் தரித்துக்கொண்டு குளிர்ந்த வெள்ளியபிறைச்சந்திரனையும், கொன்றைமாலையையும், கங்கையையும், சூடிய செவந்தசடா மகுடத்தையுடைய சிவபெருமான் பஞ்சமுகங்களுடனே கைலாசகிரியிலிருந்தருளினார். எ + று.
(கசு)

ஆதி தேவனங் கிருக்குமோர் காலங்க ளதனி
லோதி தங்கிய கங்கையைம் முகங்களி னொழுகப்
பீதி கொண்டச ரீரியும் பிடித்தங்க ணகன்று
சோதி வள்ளலார் சொற்படி மாருதற் கீந்தாள்.

பொ + ரை.

ஆதிமூலராகிய சிவபெருமான் வெள்ளிமலையில் வசித்திருக்கின்ற ஒரு நாளில் ஐந்து முகங்களிலிருந்து கங்காநதி பெருகவுங்கண்ட ஆகாசவாணி பயந்து அந்தக்கங்கையைக் கைப்பற்றி சிவபெருமானுத்திரவின்படி அவ்விடத்தைவிட்டுப்போய் வாயுவினிடத்திற்கொடுத்தாள். எ + று. (கஎ)

எவ்வு யிர்க்குயி ராகிய மாருத மேந்திப்
பவ்வ நீர்ப்புவிப் பரதகண் டத்தினிற் பல்லோ
ரொவ்வு கூறிடாச் சதுரமால் வரையினுச் சிக்கட்
கவ்வை மேவிவைத் தனன்சில கழிந்தது காலம்.

பொ + ரை.

எவ்வித ஜீவர்களுக்கும் உயிராகிய வாயுபகவான்தாங்கிக் கடல்சூழ்ந்த பூமியில் பரதகண்டத்திலே யாவர்களாலும் ஒப்பிடக்கூடாத பெரிய சதுரகிரியின் உச்சியிலே ஆரவாரத்துடனே கொணர்ந்துவைத்துப்போயினான் அவ்விடத்திற் கங்கை சில நாளிருந்தனள். எ + று. (கஅ)

மலைத்த லத்தலை யிருந்தமாப் புனலையா றுய்த்தங்
குலத்திற் கூடியே குணகடற் சேர்ந்திட வெண்ணிப்

புலத்தி னோக்கடிந் தோருளம் பொங்குபே ரின்பி
னிலத்தி ழிந்தெங்கு நிறைவுறப் பரந்ததை யன்றே,

பொழி + ரை.

சதுராசலத்தின் கொடுமுடியில் வசித்திருந்த கங்கையானவள் ஐயா றென்கிற பேரைக்கொண்டு தனது குலமாகிய நதியுடனே சேர்ந்து கீழ்கடலைச் சேரவேண்டுமென்று நினைத்துப் பொறிபுலன்களைவென்ற பெரியவருள்ளத்திற்றெவிட்டாத பேரின்பத்தைப்போலப் பூமியிலிறங்கிப் பெருகியெங்கும் பரவியது. எ—று. (கக)

வேறு.

வானில்வெண் சிறிய மேகம் வளர்ந்து பின் கரிதா யெங்குஞ்
சோனையாய்த் துளிப்பபோலப் பொழிந்தவப் புனலாருகிப்
பேனமுஞ் சுழியும்பெற்றுப் பெருந்திரை வீசிக்கல்லுங்
கானமும் பறித்திட்டோடுங் கடவுளார் மிலைந்த கங்கை.

பொழி + ரை.

வெள்ளியமேகங்கள் ஆகாயத்திற்சிறியதாய்ச்சென்று பெரிதாகிப்படர்ந்து கருப்பாகி யெவ்விடத்தும் சோனையிட்டுப் பின்றுளியாகிப்பொழிகின்ற அந்த நீரானது ஆருகி நுரையையுங்கூடிப் பெரிய அலையை வீசிக்கொண்டு பரற்கற்களையும், காடுகளையும், பேர்த்துக்கொண்டுபோகும். சிவபெருமானுர் தரித்தருளிய கங்காநதியானது. எ—று. (உய)

தேனிறால் கனியுந் தள்ளிச் சிறந்தபன் மணியும் முத்தும்
பானுவி னூர்தி யொக்கும் பச்சையா டகங்கொ ழித்து
நானிலத் தெவரும் போற்ற நனியொலி யொடுந்தெற் கேகிப்
பானல்சூழ் பொன்னி கூடிப் பாங்குடன் கடலுட் சேரும்.

பொ + ரை.

கங்காதீத்தமானது தேன்கூடுகளையும், பழவகைகளையும், வீழ்த்திக்கொண்டு மேலான பல ரெத்தினங்களையும் முத்துகளையும் பச்சைக்குதிரைபோன்ற மரகதங்களையும், தங்கங்களையும் வாரிக்கொண்டு நாலு பூமியிலுள்ளவர்கள் துதிக்கும்படி மிகுந்த ஓசையோடும் தெற்கு நோக்கிச்சென்று மருதநிலங்களால் விளைந்த காவேரி நதியிற்சேர்ந்து இயல்பாகவே கடலிற்போய்ச் சங்கமமாகும், எ—று. (உக)

வேறு.

கயிலை யாளியைம் முகத்தினாற் கறந்தவப் புனல்பல்
லுயிர்க ளுற்பதம் பெற்றிட வோடிடு மையாற்
றயலி னைம்முக னைம்பதி யாகியங் கங்க
ளுய வரதங்க ளுதவுவா னிலிங்கமா யுதிக்கும்.

பொ + ரை.

கைலாசபதியின் பஞ்சமுகங்களிற்பெருகிய அந்த நதி அநேக ஜீவாத்மாக்கள் நாலு பதவிகளும் அடையும்பொருட்டு ஓடிய ஐயாற்றின் பக்கங்களில் ஸத்யோஜாதாதி ஐந்து முகங்களும் ஐந்து ஸ்தலங்களாகி அவ்வவ்விடங்களிலுள்ள ஜனங்கள் அனுக்கிரகம் பெற்றுக்கொள்ள வரப்பிரசாதஞ்செய்வதற்கு இலிங்கவடிவமாயெழுந்தருளியிருப்பார். எ—று. (௨௨)

ஆதி யுற்றவீ சானமா மறப்பளீச் சுரமும்
பூதி தங்குதற் புருடமா முகத்தொடு பொருந்துஞ்
சோதி சேரகோ ரம்மிரு டீசனாய்த் தோன்றுங்
கோதில் வாமமுஞ் சத்தியோ சாதமுங் குலவும்.

பொ + ரை.

முதலாகிய ஈசானமுகமாகிய அறப்பளீச்சுரதலமும், பூமியிலே தற்புருடமுகத்துடன்றோன்றிய மத்தியகிரிதலமும் ஜோதிமயமாகிய அகோரமுகமாகிய ரிஷிபுரிஸ்தலமும் குற்றமில்லாத திண்ணக்குளமாகிய தலமும் ஸத்யோஜாதமாகிய பாதாளேசுவரஸ்தலமும் விளங்கும். என்றவாறு. (௨௩)

தாணு லிங்கசத் தேசுய சத்தியோ சாதங்
காணு மைம்முக மைம்பதி கம்முதற் பூதந்
தோணு மவ்விலிங் கங்களாய்ச் சூலக பால
பாணி யாரங்கங் கிருந்தனர் பற்பல காலம்.

பொ + ரை.

நிச்சலமாகியலிங்கரூப ஸாரமேசுயம்புவாகிய ஸத்யோசாதாதி ...றிய ஐந்து முகங்களும் பஞ்சஸ்தலங்களாய் அதில் ஆகாசமுதலாகப் பூதவடிவமாகிய லிங்கங்களிற்சூலம் கபால முதலியவைகளைக்கொண்ட ... பெருமான் அவ்வவ்விடங்களில் அநேக நூற்றாண்டுகளாக வாசஞ்செய்தார். என்றவாறு. (௨௪)

### வேறு.

என்றின வாதிசேட னிமையவர்க் குரைதலத்தை
யின்றுமக் கறைந்தோமப்பா லிருடிகண் முறையினிற்பொன்
மன்றுளாட் டயர்வோற்போற்றும் மாக்கதை யுரைப்பல்கேட்பீ
ரொன்றுதாற் பியரைவர்க்கு முள்ளுவந் தோதலுற்றான்.

### பொழி + ரை.

இந்த விதமாகத்தலத்தினுற்பத்தியை ஆதிசேஷன் தேவர்களுக்குச் சொல்லிய தலத்தின் பெருமையையுங்களுக்குச் சொன்னோம். இனிமேல் முனிவர்கள் வரன்முறையாகப் பொற்சபையில் நடித்தருள்கின்ற சிவபெருமானைப் பூசைசெய்து துதித்தகதையையுங் கேட்பீர்களென்று மனமொன்றுகூடிய தால்ப்யமுனிவர் மகிழ்ச்சியுடன் சொல்லத்தொடங்கினார். என்றவாறு. (௨௫)

தலமுற்பத்தி யுரைத்த வத்தியாயம்



முற்றிற்று.

ஆக செய்யுள் ௱௪௮.

## ௩-வது இருடிகள் பூசித்த வத்தியாயம்.



### வேறு.

தாபரங்கள்வா னுலவிடத் தழைத்தகா னகத்துட்
கோபமின்முனி மார்குழாங் கூடியங் குறைந்து
நாபவூர்தியோன் றனையுளி னோக்கியே தவங்க
டாபம் மேவிட வியற்றுவர் சஞ்சரித் திடுவார்.

### போ + ரை.

விருட்சஜாதிகள் ஆகாயத்திற்செல்லும்படியோங்கிய தண்டகாரணியத்திலே கோபயாதிகளைவிட்ட இருடிகள் கூட்டமாக அவ்விடம் சேர்ந்திருந்து இடபவாகனராகிய சிவபெருமானைத் தனக்குள்ளே பார்த்துக்கொண்டு தவங்களைத்தாபமுண்டாகும்படிச் செய்வார்கள் எங்குஞ்சஞ்சாரமுஞ் செய்வார்கள். என்றவாறு. (௧)

சத்த மாதியாங் கருவிகள் கடிந்துதன் னிலையுட்
பொத்தி யேபரஞ் சுடர்வெளி யகண்டமாய்ப் பொலிந்து
முத்தி பெற்றிட முனிவர்கள் புல்லுரி மூடிப்
புத்த தண்டிக மண்டலங் கைக்கொடு பொருந்தும்.

போ + ரை.

சப்த-பரிச-ரூப-ரஸ-கந்தங்களை யறியுங்கருவிகளாகிய பொறிகளை நீக்கி அறிவினிடத்தில் தம்மனதை அகப்படுத்திப் பரஞ்சோதியாகிய தகராகாசத்திற்கலந்து முத்தியடையும்படி இருடிகள் புலித்தோலைப்போர்த்து புதிதாகிய தண்டிகமண்டலங்களையும் தரித்துக்கொள்வார்கள். (௨)

இயம நேமங்க ளமையப்பெற் றுசனத் திருந்து
செயலெ லாமறச் சோமமண் டலச்சுதை தெளிப்பச்
சுயபி ராணயா மம்புரி வார்கலை தொடரு
நியம வீட்டின்ப நிகழ்தர நிற்பர்சில் லோர்கள்.

போ + ரை.

சரீரசுத்தியாகிய இயமமும், மனோசுத்தியாகிய நியமமும், பொருந்தவடைந்து சுகாசனத்திலிருந்து சிவயோகமுயற்சியாற் சந்திரமண்டலந்திறந்தமுதொழுகும்படி பிராணவாயுவி னுபாதிநீங்கிச் சமாதியிலிருப்பவரும் இடகலைபிங்கலைகள் நின்றதாரணை நிலையிற் சுழுமுனைதிறத்தலாகிய பேரின்ப முத்தியிலழுந்தவும் தவநிலையில் நிற்பார்கள். எ—று. (௩)

இராக மாதிபன் மூன்றறக் கலைகளி ரிரண்டி
மிரேச கம்விடா வறிவினி லிருந்துபூ ரித்து
நிராச னத்தியல் கும்பக நிறுவுமட் டாங்கம்
பராவு மோகுறி இக் கற்பங்கள் பலவுங்கண் டுறைவார்.

போ + ரை.

காமக்ரோத லோப மோக மதமாச்சரிய ஈரிஷை அசூயை தற்ப டம்ப அகங்கார ராக த்வேஷமென்னும பதின்மூன்று குணங்களும்கட்டோடும் நீங்கி இடைகலை பிங்கலைகளில் நாலங்குலத்தையும் பூரகத்தைவிடாது அறிவோடு கலந்துநிற்கப் பூரித்து நிராகாரமயமாகிக் கும்பித்து வசஞ்செய்து அஷ்டாங்கங்களாகிய அநுஷ்டான யோகத்தில் நின்று கற்பாந்தங்களை அநேகஞ்சென்றிடக்கண்டிருப்பார். எ—று. (௪)

வாதை மும்மல மாற்றியும் பிரத்தியா காரப்
போதை கொள்ளவைம் பொறிகளு மோடவா தாரப்
பாதை கண்டுமூ லக்கன லெழுப்பிமேற் பதுமத்
தோதை கேட்டுள மகிழ்ந்திருப் பார்சில முனிவோர்.

போ + ரை.

வருத்தஞ்செய்கின்ற ஆணவ காமிய மாயையென்னும் மும்மலங்களையும் நீக்கிவின்று உபாதை நீங்கிய போதத்திலழுந்தியதால் இந்திரியங்களுங் கெட்டு மூலாதாரமுதலாகிய ஆதாரவழிதெரிந்து மூலத்திலிருந்த அக்கினியை மேனோக்கவிட்டு ஆயிரம்தழ்க்கமலத்திலெழுந்த நடந ஒலியைக்கேட்டுக்கொண்டேயசைவற்று மகிழ்ந்திருப்பர் சில முனிவர்கள். எ—று. (ரு)

ஓடி டுங்கர ணங்களுள் ளொடுக்கிநா சியின்மே
னாடி டும்மிரு நயநமு மோர்வழி நடாத்தித்
தேடி டும்பளிங் கொளியது கண்டுளந் திருத்தி
வாடி டும்படி வனத்தினில் வதிந்தனர் சிலர்கள்.

போ + ரை.

அலைகின்ற மனமுதலிய அந்தக்கரண நான்கையும் உள்ளேயடக்கி நாசிகாக்கிரமாகிய சுழுமுனையின்கண் இரண்டு கண்களையுஞ்சேர்த்து ஆய்கின்ற வச்ரவொளியாகிய பரமாத்மாவைத் தெரிசனஞ்செய்து மனோதிருடயடைந்து தேகங்களிளைக்கும்படித் தவஞ்செய்வர் சில முனிவர்கள். எ—று. (சு)

ஆசை யீடணை நீக்கிவான் மதிரவி யங்கித்
தேசு தன்னுளே சிவனிடச் சின்மய மாகி
வாசி யேறிமும் மண்டலங் கடந்தோரா யிரத்து
னேச மூடுருச் சமாதியி லிருந்தனர் சிலர்கள்.

போ + ரை.

ஆசையாகிய தாரம் வித்தம் புத்திரன் என்னும் மூன்று ஈஷணைகளையும் போக்கி உயர்ந்த சந்திரசூரியாக்கினிகளாகிய சோதியைத் தனக்குள்ளிருத்திச் சிற்சொரூபமேதானாகி பிர்ம்மநாடி வழிக்கொண்டு மும்மண்டலங்களையுந்தாண்டி ஆயிரவிதழ்க்கமலமுகையை மலரும்படி யோகாப்பியாசம் யாரூட சமாதியிலே சில முனிவர்களிருப்பார்கள். எ—று. (எ)

நிறைந்த நிட்கள நின்மல நிச்சயத் தெய்தி
யுறைந்த பேரின்ப மோதுவோ ரத்துவி தத்திற்
குறைந்தி டார்வெகு வயதுளார் குழன்மட வார்க்கு
மறைந்து மாதவஞ் செய்திடு வோர்களும் வதியும்.

பொ + ரை.

பரிபூரணமாகியொன்றாய்ச் சுத்தமாகிய தத்வத்தையடைந்து தேக்கிய பேராநந்தத்தை மனதுக்கடங்காமல் வாக்கினாலோதிக்கொண்டிருப்பவரும், உடம்பைப் பஞ்சீகோணப்படுத்துமவர்களும், பலவாகிய காலம் சீவித்திருப்பவரும் கூந்தலையுடைய ஸ்திரீகளுக்ககப்படாமல் மறைந்திருந்து பெரிய தவங்களைச்செய்யும் முனிவர்களும் வாசமாயிருப்பார்கள். எ—று. (அ)

காய சித்திகள் செய்குநர் கலையமு துண்டு
மாய வித்தையின் வாதமஞ் சனம்வசி வந்தோர்
தூய சித்தர்கள் சூரிய காந்திமெய் யினரா
காய மேற்பர காயமெய் துவர்கணக் கில்லோர்.

பொழி + ரை.

சித்திகள்செய்து சரீரம் வலுத்த முனிவரும், கலையினமுதத்தையுண்டு மாயையினால் வாதம் அஞ்சனம் வசியம் கைவசப்பட்டவரும், பரிசுத்தமான வேண்டுவோர் வேண்டியபடி செய்யும் சித்துமுனிவர்களும், சூரியகாந்தி வீசுகின்ற சொர்னமயமாகிய தேகத்தையடைந்த முனிவர்களும், ஆகாயத்திற் பரகாயஞ்செய்யுமுனிவர்களும் கணக்கில்லாதவராவார்கள். எ—று. (௯)

கற்பின் மங்கைய ரொடுந்தவங் காப்பவர் கோடிச்
சிற்ப ரப்பொருள் சிறந்திட விருந்தனர் கோடி
யற்பு தத்தணி மாதிகள் வந்தவர் கோடி
நற்ப திப்பொரு ளுடிடும் முனிவர்கள் கோடி.

பொ + ரை.

கற்புடைய மனைவியுடனே தவம்பண்ணுகின்றவர் கோடிப்பேர்கள். சின்மயாநந்த சோதியில் கலந்தவர்கள் கோடிப்பேராகும். மகா சித்தியாகிய அணிமாதியஷ்டசித்தியும் பெற்றவர் கோடானுகோடி. துவாதசாந்தமாகிய ஸ்தலத்திலேயிருக்கின்ற சிற்சொரூபத்திற் கலந்திருப்பவர் கோடானுகோடி முனிவர்களாகும். எ—று. (௰)

வாத ராயணன் பராசர னுரோமசன் மயுரீர்
போத வன்மிகன் கார்க்கியன் புங்கவன் றென்சொல்
லோத வல்லவன் கோதம னுயர்ந்தவா சிட்டன்
சூதன் சோனகன் முதலிய முனிக்கணஞ் சூழ்ந்தார்.

பொ + ரை.

அவ்விதமிருக்கின்ற முனிவர்களுடன் வியாசர், பராசரர், ரோமஜர், திராவிடபாஷா நிபுணராகிய அகஸ்தியர் வாசனைநீங்கி ஞானமடைந்தவால்மீகர் கார்க்யர் புங்கவர் கௌதமர் சிறந்தவசிட்டர் சூதர் சௌநகர் முதலாகிய முனிக்கூட்டங்கள் வந்து கூடினார்கள். எ—று. (கக)

வேறு.

பன்முனி வோர்கள் கூடிப் பரமனைம் முகத்தால் வந்த
நன்னதி யையாற் றின்பா னண்ணுமைம் பதிக்குண் மேலாந்
தன்னது வாம கோரஞ் சத்தரி டீச னென்றே
துன்னினர் பலகால் பூசை தொடுத்தன ரியற்றி னாரால்.

பொ+உரை.

அநேகம் முனிவர்களொன்றுசேர்ந்து சிவபெருமான் ஐந்து முகங்களினின்றுமுண்டாகிய நன்மைதருகின்ற நதியாகிய ஐயாற்றின் பக்கத்திலிருக்கின்ற தலங்களுக்குள் மேலாகிய தன்னுடைய அகோரமுகமாகிய ஸ்தலத்திலெழுந்தருளிய ஸப்தரிஷீசுவரரை அடுத்து அநேகந்தடவை பூசையையாகமவிதிப்படிச் செய்வார்கள். எ—று. (கஉ)

வேறு.

தேவர் மாதவர் வித்தியா தரர் சித்தர் நாகரி யக்கரும்
பூவில் வாழய னாரதாதி புரந்தரன் வல வன்புலி
கோவு வாபவ னுச னப்பதன் குன்ற வன்முதல் யாவரும்
மேவி யாகம முறையி னர்ச்சனை வேத நாதனை யாற்றினார்.

பொ + உரை.

இன்னமும் தேவதைகளும், இருடிகளும், வித்தியாதரர்களும், சித்தர்களும், உரகர்களும், யட்சர்களும், பூவில் வசிக்கின்ற பிர்ம்மதேவரும், நார் தும்புருவும், தேவேந்திரனும், விஷ்ணுமூர்த்தியும், வியாக்கிரபாதரும்,

பசுவும், யானையும் பதஞ்சலியும், வேடனும் இவர்கள் முதலிய யாவர்களும் அத்தலத்திற்சென்று அகோரமூர்த்திக்கு வேதாகமஙகளிற்சொல்லியபடி பூசித்தார்கள். எ—று. (கௌ)

வேறு.

போற்றுமம் முனி வர்க் கெல்லாம் புராந்தகன் விடையி வர்ந்து
தோற்றிடக் கண்டுதங்க டொல்வினைப் பற்று நீங்கி
யாற்றுநாற் கருவியற்றுள் ளாயிர மிதழுட் சோதிப்
பாற்றுறீஇ யுவந்துநித்தப் பரப்பிர மத்தி லாழ்ந்தார்.

பொழி + ரை.

பூசித்துத் துதிக்கின்ற இருடிகளுக்கெல்லாம் திரிபுரசம்ஹாரியாகிய சிவபெருமான் இடபாரூடராகி வந்து தோன்றவும், தரிசித்ததனல் பிராரத்துவ நீங்கிப்பிரபஞ்ச வாசனையைக்கொடுக்கின்ற கருவியாகிய அந்தக்கரணங்களடங்கி ஸஹஸ்ரகமலத்தில் விளங்கும் பரஞ்சோதியின்றன்மையை யடைந்தானந்தங்கொண்டு நித்யமாகிய பரப்ர்ம்மசிவத்திேனுடுங்கலந்து நின்றூர்கள். எ—று. (கசு)

சோதியி னுருவ மாகித் தூமுனி யானூர் கோடி
மாதரம் பையரி னுடி வானுல கிருப்பார் கோடி
நீதியிற் செங்கோல் பூண்டு நிருபராய் வாழ்வோர் கோடி
பூதலத் தகோரம் போற்றிப் புக்கின ரிவர்க ளாமால்.

பொழி + ரை.

சோதிஸ்வரூபமடைந்து முனிவராயினவர் கோடிப்பேர்கள், தேவமாதர்களின்பமடைந்து தேவலோகத்திலிருந்தோர் கோடிப்பேர்கள். மனுநீதிப்படி அரசுபுரிவர்கள் கோடிப்பேர்கள் ஆகும். இவர்கள் அகோரமுக ரூபமாகிய ஐயாற்றின் கரையிலிருக்கின்ற ஸப்தரிஷீசுவரரை யுபாசித்ததினுலாகிய விதமென்று சொல்வார். எ—று. (கடு)

என்றுதாப் பியரு ரைக்க விருந்தபாண் டவருங் கேட்டு
நன்றிது சொன்னீ ரின்ன நாகபூ டணத்தான் மாண்பு
மின்றுநா மிவ்வ னத்தி லறிந்திட விசைத்தி டாயென்
றொன்றுளங் களீஇ வினுவ வோதுவான் றவத்தின் மிக்கோன்

போ — ரை.

இவ்விதம் என்று தால்பியர் சொன்னவுடனே பக்கத்திலிருந்த பஞ்ச ரண்டவர்களுங்கேட்டு அற்புதமான சரித்திரங்களைச் சொன்னீர் இன்னம் ஸர்ப்பபூஷணராகிய ஸப்தரிஷீசுவரர் மாகாத்மியங்களையும் இப்பொது நாங்கள் இந்த வனத்தில் தெரிந்துகொள்ளச்சொல்லவேண்டுமென்று த்தித்து மனம்பொருந்தி சந்தோஷத்துடனே கேட்கவும், சொல்லத்தொடங்கினார் அம்முனிவர். எ—று. (௧௬)

வேறு.

பூவு லாவிய பொன்னிநன் ஞட்டி னிற்
காவு லாந்தண்ட கார ணி யத்துளே
மேவு மீசற்கு மெய்யர்செய் பூசனை
யாவு முள்ள மகிமைய றைகுவான்.

போ — ரை.

புஷ்பங்கள் நிறைந்த சோழநாட்டில் காடாகிய தெண்டகாரண்யத்துள் ளே விளங்கிய ஸப்தரிஷீசுவரரை இன்னமும் முனிவர் பூஜித்த விசேஷங்களையுங் கேளுங்களென்று சொல்லத்துடங்கினார். (௧எ)

காசி பன்சம தக்கினி கௌதமன்
கோசி கன்வசிட் டன்கொழும் பாரத்து
வாசன் கும்பச மாமுனி யென்றுரை
தேசி னேழு தவர்களுஞ் சேரவே.

போ — ரை.

காசிபமுனிவர், சமதக்கினிமுனிவர், கௌதமமுனிவர், விசுவாமித்திரர், வசிட்டர், செழித்த பரத்துவாசர், அகஸ்தியர் என்று சொல்கின்ற முகான்களாகிய் தேஜஸையுடைய ஸப்தரிஷிகளுங்கூடினார்கள். எ—று. (௧அ)

வேறு.

அரன்முக மாம கோர வப்பதி யமர்ந்த மூன்று
புரமெரித் தருள்பி ரானைப் பூசிப்பா னிருடி யேழ்வர்
விரைநறு மலர்நீ ராதி வேண்டும்பஃ றிரவி யங்கண்
மருவியா கமங்கள் செப்பும் வாறியற் றினர்க ளம்மா.

பொ—ரை.

சிவபெருமான் ஐம்முகங்களில் அகோரமுகத்தலத்தலத்தின்கண் அமர்ந்த திரிபுரஸம்ஹாரியாகிய ஸப்தரிஷீசுவரரைப் பூஜிக்க எண்ணி ஸப்தரிஷிகளும் பரிமளமிகுந்த புட்பங்கள், தீர்த்தம் முதலிய பூஜாத்திரவியங்களைச் சேகரித்து சிவாகமங்களிற் சொல்லியபடி பூசை செய்யத்தொடங்கினார்கள். எ—று. (கக)

வேறு.

ஏன மன்னமு னேடிடத் தெரி யாவடிச் சடை யீசனைக்
கானில் வாழெழு மாத வத்தினர் கண்ட ருச்சனை செய்துறும்
ஆன நாளினி லோர்தி னத்திலி லங்கை யாளர சன்வரன்
மான மாமுனி வோர்க ளஞ்சிம ரத்தி னங்குரு மாறினர்.

பொ—ரை.

விஷ்ணுபிரமாக்கள் வராகமாகியும், ஹம்ஸமாகியும் தேடிக்காணாத திருவடிகளையும் சடையையுமுடைய ஸப்தரிஷீசுவரரை ஆரண்யவாசிகளாகிய ஸப்தரிஷிகளுந்தரிசித்துப் பூசித்து வருகிறகாலத்திலே ஒரு நாளில் இலங்கைக்கரசனாகிய ராவணன் வருதல்கண்டு பயந்தவர்களாகி அம்முனிவர்கள் மரத்தின் வடிவைப் பெற்றுக்கொண்டிருந்தார்கள். எ—று. (உ0)

வேறு.

நாதனைப் பரவுமேழு முனிவரும் மறைந்த நாளில்
வேதஞ்செ யரக்க னங்கண் விமலனை யாராதித்துக்
கோதையீர்ங் குழலினாளைக் கொண்டிலங் கைக்கணேகும்
போதுமை விடுத்துவண்டோ தரிகொளும் புதுமை சொல்
[வாம்.

பொ—ரை.

ஸப்தரிஷீசுவரரை வழிபாடுசெய்த ஸப்தரிஷிகளும் மறைந்தபின்னர் வேதங்களை வரையறுத்த இராவணன் கைலாசபதியைப் பூசித்து பரிமளமிகுந்த பூமாலையணிந்த கூந்தலையுடைய பார்வதியை அருளவும் வாங்கிக்கொண்டு இலங்கைக்குப் போகின்ற அவனைப்பார்வதியை விடுவித்து வண்டோதரியைக்கொள்வித்த ஆச்சரியத்தைச் சொல்வோம். எ—று. (உக)

ரு-வது இருடிகள் பூசித்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆக செய்யுள் ளகக.



வேறு.

நீருண் கொண்டல்க டோற்றிய மெய்யுந்தோண் மலையும்
போரில் வென்றிடும் படைக்கையும் பொறிக் கண்ணுந்
ராரு மொவ்விலா வையிரண் டடர்சிர முற்றே [தேவ
பாரிற் றென்றிசை யிராவண னப்பதி படர்ந்தான்.

பொழி — ரை.

நீருண்ட மேகங்களைக் காட்டுகின்ற நீலசரீரமும், மலைபோலும் தோளும், யுத்தங்களில் ஜெயிக்கத்தக்க அஸ்திரசஸ்திரங்களை வைத்த கைகளும். அக்கினிப்பொறிகளை யிறைக்குங்குணங்களும், தேவர்களிலெவரும் ஜெயிக்கக்கூடாத பத்துத்தலைகளையும் உடையவனுகிப் பூமியில் தென்றிசையிலுள்ள இலங்கையிலிருக்கின்ற இராவணன் அந்த வனமாகிய ஸ்தலத்திற்கு வந்தான். எ—று. (க)

வேறு.

வந்தன னரக்க னந்தி லருச்சனை மலரு நீருஞ்
சிந்தின பலமுந் தேனுந் திரள்படக் கிடப்பக் கண்டே
யிந்தணி யரனைப் போற்ற வேண்ணினு னெண்ணு மாறு
தந்தன னவனைப் பூசை சார்ந்தனன் செய்ய லுற்றான்.

பொ — ரை.

அவ்விதம் வருகின்றவிராவணன் அவ்விடத்தில் அருச்சித்த பூவும், ரும், சிந்திக்கிடக்கின்ற கனிவர்க்கமும், தேனும், கும்பலாய்க்கிடப்பதைப் பார்த்து சந்த்ரமௌளியாகிய சிவபெருமானை ஆராதிக்கவேண்டுமென்று னைத்தமாத்திரத்திலெண்ணியபடி அருளிய அவரைப்பூசிப்பதற்கு ஆரம்பித்தான். எ—று. (உ)

நதிதரு மமுத மாதி நற்றிர வியங்க டேடி
மதியணி வேணி யோனை வன்மிகத் துருவு கண்டு
பதமருச் சித்து நின்று பணிந்தருட் கடலே யென்று
துதிபுரிந் தின்பந் தோற்றத் துருவின்ன் காணன் றேவை.

போ — ரை.

ஐயாற்றின் வருகிற தீர்த்தம் முதலான நல்ல பூசைத்திரவியங்களைச் சேகரித்து சந்திரசேகரராகிய சிவபெருமானைப் புத்துமண்ணால் வடிவுசெய்து முறையே பூசித்து எழுந்து நமஸ்கரித்து கிருபாஸமுத்ரமேயென்று பலதோத்திரங்களைச்செய்து பேராநந்தமும், பத்தியுமுண்டாகித் தெரிசிக்கவும் தான்திரட்டியவுருவைத்தேடியுங் காணாயினனென்றவாறு. (ங)

முனிவரான் மாற்றஞ் செய்த முதல்வனைக் காணு ளுகி
யினிப்பலி வேள்வி யாற்றி யிறைவனை நோநமெத டுத்துத்
தனியிலங் கையிற்கொண் டேகித் தாபனம் பண்ண
வெண்ணி
நனிவரை யையாற் றின்பானடத்தினு னரக்க னிட்டி.

போ — ரை.

உருமாரி சப்தரிஷிகளால் வேறுபடுத்திய சிவபெருமானைக்கண்களினுற் பாராதவனுகி மனங்கலங்கி யினிமேல் பெலி யாகஞ்செய்து நமது தலைவனுகிய ஈசுவரனைக்கண்டு கைக்கொண்டு ஒப்பில்லாத இலங்கையிலே எடுத்துக்கொண்டுபோய் ஸ்தாபனஞ்செய்து விடுவோமென்று நினைத்து இராவணன் யாகஞ்செய்யத்தொடங்கினுன். எ—று. (ச)

முறைமைசெய் முதல்வன் கீழ்பான் முதிர்சதுக் கோணங்
கோட்டிக்
குறைவிலாக் குண்ட மிட்டக் குண்டத்தி னகரு போதி
நிறைகுசை பலாசம் வாச நிகழ்தரு படீர மோடுந்
தொறுவினெய் குடத்தாற் றூற்றி வளர்த்தன னேம
மன்றே.

போ — ரை.

விதிப்படி யையற்றிப்பூசித்தமூர்த்தியின் கீழ்ப்பாகத்தில் தேறிய நாற்கோணத்தை வளைத்து நிறைந்த குண்டங்கள் அமைத்து அந்தக்குண்டத்தில் அதில் அரசு அதிகமாகிய தருப்பை புரசு மணம் வீசுகின்ற சந்தனம் முதலான சமித்துகளுடனே பசுவின் நெய்யைக்குடங்குடங்களாக வெடுத்துச்சொரிந்து ஓமம் வளர்த்தனன். எ—று. (ரு)

அவ்வழ லோங்கி வானி லண்டகோ ளகைக்கப் பாலுங்
கவ்விட வடவை யோடக் ககனவெம் பரிதி யூர்தி
தவ்வுறத் திகைப்ப வேலைச் சலிலமும் முளிப்பத் திக்கோ
ரொவ்வொரு திசைக்க ணேக வுலகெலாஞ் சூழ்ந்த
மன்னோ.

போ—ரை.

அந்த தபோக்னி பெருகி யாகாயத்திலெழும்பி அண்டகோளத்தையுங்க டந்திடவும் வடவைத்தீயும் ஓடவும் ஆகாயத்தில் செல்லும் சூரியன் குதிரையும் துன்பமடைந்து மயங்கவும் சமுத்திரசலமும் சோஷிக்கவும் திக்பாலகர்கள் மாறிப்போகவும் உலகமெங்கும் வளைந்துகொண்டது. எ—று. (௬)

சூழ்ந்தவவ் வனற்குண் டத்தோர் பாங்கரிற் றன்னும் யாது
வாழ்ந்துறு முமையாள் பாகன் வந்திலே யெனச்சி ரங்கள்
வீழ்ந்திட வெறிந்து வேதி வெந்தழற் பெய்தும் பெய்யத்
தாழ்ந்திடா துருக்கப் பின்னுந் தளிர்த்தன தலைக ளம்மா.

போ—ரை.

தவாக்கினியாற் சூழப்பட்ட அந்த அக்னிகுண்டத்தினது ஒரு பக்கத்திலிருந்த ராவணன் நித்தியமங்களையாகிய பார்வதீநாதர் இன்னமும் வரவில்லையென்று தன் தலைகளைவெட்டி ஓமகுண்டத்திற்சொரிந்து மறுபடியும் தலைகளை வெட்டிப்போடுவதற்குக் குறைவுவராமல் அறுந்ததலைகள் பின்னும் முளைக்கத்தலைப்பட்டதுகள். எ—று. (எ)

ஒளிப்பெருங் குண்டத் தின்பா லுமையொடு மீசன் றோன்
தளிர்த்திடத் தலைய ரித்துத் தானவர் பகைவோர் சூழ [ றித்
வளிப்பதென் னினக்கென் றோத வஞ்சிமுன் னிலங்கை மன்னன்
களிக்குநம் மிலங்கை தன்னுட் கண்டிட வுறைதி யென்றான்.

போ—ரை.

ஜ்வலிக்கின்ற பெரிய ஓமகுண்டத்தின் பக்கத்தில் பார்வதிசமேதராய் பிரத்யட்சமடைந்து அற்றதலைகளை விருத்திக்கச்செய்து தேவகோடிகள் சூழ்ந்துகொள்ளும்படி வெளிவந்து ஓ ராவணனே வேண்டியது என்ன உனக்கென்று கேட்டலும் அவ்விராட்சதன் நான் சந்தோஷப்படுகின்ற இலங்கையில் தெரிசனம்செய்யும்படி நீங்கள் ஆவிர்ப்பவிக்கவேண்டுமென்று சொன்னான். எ—று. (அ)

என்றலு மீசனுரு மியாமுறல் கயிலை யாகும்
அன்றியெப் பதியு மொல்லா வரக்கர்தம் மிலங்கைக் கேக
லின்றிலை யெனவி ளம்பி மறைந்தன னிறுத்தான் கைலை
துன்றிய தலையோன் காணுன் சோதியைத் துன்பத் தாழ்ந்
தான்.

போ — ரை.

இந்த விதம் சொன்னவுடனே சிவபெருமான் நாம் வசிக்கத்தகுந்தது கைலையங்கிரியேயல்லாமல் எந்தவிடங்களிலும் வசிக்குதல் கூடாது ஆயினும் இப்பொழுது ராட்சதாள் வாஸமாகிய லங்கைக்குப் போவதில்லையென்றுசொல்லி மறைந்துவிட்டுக் கைலையில் வந்திருந்தனர் அதுகண்டு பத்துத்தலையுடைய விராவணன் ஐயனைக்காணுமல் துன்பத்திலழுந்தினுன். என்றவாறு. (கூ)

விண்ணவர் முனிவர் போற்ற வேதங்க ளுன்கு மார்ப்ப
வெண்ணிரண் டிரண்டி யங்க ளெங்கிடக் கணங்கள் வாழ்த்த
வண்ணலார் பரையி ேனுடங் கயர்ந்தினி திருந்த காலத்
தண்ணுமை யரனை நோக்கிச் சாற்றுமோர் மாற்ற மம்மா.

போ — ரை.

தேவர்களும் இருடிகளும் துதிக்கவும், நான்கு வேதங்கள் முழங்கவும், பதினெட்டு வாத்தியங்கள் கோஷிக்கவும், பூதகணங்கள் நாமாவளிகளால் தோத்திரம் பண்ணவும், சிவபெருமான் பார்வதி ஸமேதராயெழுந்தருளியிருக்குங் காலத்தில் தயையுடைய உமையாம்பிகை சிவபெருமானைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லத்தொடங்கினுள். எ—று. (கம)

மாரனை யெரிக்குந் தேவே மைபலாற் றையன் பாரைத்
தாரணி புருடர் போந்து தழீஇப் புயத் தணைவ தன்றிச்
சீருயர் வளைக்கை மாதர் செல்லுபு திளைப்ப துண்டோ
நேருமிவ் வுலகி யற்கை நிகழ்த்துதி தெரிய வென்ருள்.

போ — உரை.

மன்மதனைக் கண்ணுலெரித்தருளியநாதனே ஆசையினுலே ஸ்திரீகளைப்புருடர்கள் வந்து தங்கள் தோளிலணைவதல்லாமல் சிறந்த வளையலணிந்த பெண்கள் புருஷர்களை வந்து கலந்திடுவதுண்டோ இவ்வுலகவழக்கமானது எப்படி அதைச்சொல்லவேண்டுமென்று கேட்டாள் அம்பிகையென்றவாறு (கக)

அம்மொழி கேட்ட வீச னுர்சிறு முறுவல் கூர்ந்து
தம்மினி லிருந்த காலைத் தருக்கிய விலங்கை வேந்தன்
நம்மிடஞ் சேர்ப்பல் கைலை நாதனை யெனக்க ரைந்தே
யிம்மென வான்வ ழிக்கொண் டேகினுன் கயிலைக் கம்மா.

போ — ரை.

அந்த வார்த்தையைக்கேட்ட ஜெகதீசன் புன்னகைகொண்டு இருந்த காலத்தில் அகங்காரங்கொண்ட இலங்கேசன் கைலையைவிட்டு வருகிறதில்லையென்றுசொல்லிய அச்சிவபெருமானை மலையோடு நம்மிடத்தில் எடுத்துக்கொணர்ந்து வைத்துவிடுகிறேனென்று சொல்லிக்கொணடே இம்மென்று ஆகாசமார்க்கமாகப்போய் கைலாகிரியைச்சேர்ந்தான். எ—று. (௧௨)

வேறு.

கண்டனன் வெள்ளிவி லங்கலை நிருபன் கைப்பற்றிக்
கொண்டிதழ் தின்றுவி ழிததழல் கொட்டுபு கோபிததே
மண்டிநி வநதெழு கொடுமுடி வேரொட சைத்திடவான்
எண்டிசை யாவுமவெ ருண்டிட மற்றவ ரிடாகொள்ள.

போ — ரை.

இராவணன் கைலாசகிரியைப்பார்த்து இருபது கைகளினாலும் பிடித்துக்கொண்டு இதழைக்கடித்துக் கண்களிற்றீப்பொறிகள் கக்கிடக்கோபித்து நெருங்கி யெழுந்தோங்கிய கைலாசகிரியைக கொடுமுடிகளோடும்அசைத்திடலும், தேவர்களும், அஷ்டதிக்குப் பாலர்களும், கடல் முதலானவைகளும். அவற்றிலுள்ளவைகளும் துககமகொண்டு நடுங்கினார்களென்றவாறு. (௧௩)

வேறு.

கிடுகி டென்று கைலை யோதி கீழு மேலு மாடவு
நடுந டுங்கி யிமய வல்லி நாதனைத் தழீஇக் கொள
வுடுப திச்ச டைப்பி ரானு மொன்று மோதி லார்நகை
கொடு நிகழ்ந்த வியல்பு கண்டுன் குறியெ னென்ன வோதி
னள்.

போ — ரை.

கயிலாசமலையானது கிடு கிடு வென்று மேலுங்கீழுமாக அசைதலும் பார்வதியம்மை நடு நடுங்கிப்பரமசிவனைக்கட்டிக்கொள்ளவும் சந்திர சேகராகிய சிவபெருமானும் ஒன்றும் சொல்லாதவராகிப் புன்சிரிப்புக்கொண்டிருப்பதைக்கண்டு தேவி என்னகாரணம் நீர் சும்மாவிருந்தது என்று சொன்னாள். எ—று. (௧௪)

தென்னி லங்கை மன்னவன் சிரங்கி ளைத்தி டப்பெறு
மன்ன தூல தற்கவன் புரிந்த நன்மை யின்மொழி

வென்னி டக்கி டந்த தென்ன விமலையஞ்சி மீளவு
மென்னை யீதெ னுவ ளைந்த ணைந்து நின் று கூவினாள்.

பொழி—ரை.

தென்னிலங்காதிபதியாகிய ராவணன் தனது தலைகள் வெட்ட வெட்டத்தளிர்த்திடுகின்றதால் அவன் நாஞ்செய்த உபகாரத்திற்கு வதல் செய்ததால் பெண்கள் வலுவில் புருடரை யணையாரென்பதை வென்று விட்டது என்று சொல்ல உமையம்மை பயந்து திரும்பவும், இது வென்னவென்று வளைந்து கட்டிக்கொண்டு நின்று கூச்சலிடத்தலைப்பட்டாள். எ—று. (௬௫)

வேறு.

கூவுதல் வினவி யீசன் கொடுமுடிக் கைலைக்குன் றிற்
பாவிடக் கமலத் தாளின் பருவிர லழுத்த நொந்து
தாவறு மரக்கன் பூமி தன்னுளே புதைந்தா னாக
மேவுநா ரதனு மோடி வேதனுக் குரைத்தா னன்றே.

பொழி—ரை.

தேவி கூச்சலிடுவதைக்கேட்டுக் கொடுமுடிகளையுடைய கைலை மலையின் கண் மலர்போலுந்திருவடிக் கட்டைவிரலாற் படும்படி யழுத்தவும் வருந்தி பிடிப்பற்ற ராட்சஸன் பூமியிற் புதைந்திருப்பதைக்கண்ட நாரதமகாமுனிவர் பிர்ம்மதேவரிடந்தெரிவித்தார். எ—று. (௬௬)

அவ்வுரை கேட்ட வேத னன்றிரா வணன்முன் வந்தே
யொவ்விலிம் மலைபெற் றேக வுற்றனை போலும் மைந்தா
விவ்வுயி ருய்யச் சாம கானமிங் குரைத்தி யென்று
மூவ்வுல களிக்கும் வேத முதல்வன்ற னிருக்கை புக்கான்.

பொழி—ரை.

அந்த நாரதர் வார்த்தையைக்கேட்ட பிர்ம்மதேவன் இராவணன் முன்னேவந்து ஒப்பில்லாத இந்த கைலைமலையைப் பெற்றுக்கொண்டுபோக வந்தாய்போலிருக்கின்றது. குழந்தாய் நின் ஜீவன்பிழைக்கவென்றால் சாமகானஞ்செய்வாயென்று சொல்லிச் சத்தியலோகமடைந்தான். என்றவாறு. (௬௭)

வேறு.

அன்னத் தூர்தரு மயனூர் வாசக மகலாதோன்
மன்னும் பொருந்தலை திருகிக் கையிற மாட்டித் தன்

மின்னிற் பொலிசிரை விகியச் சுருதியின் மிளிர் சாமம்
பன்னிச் சரிகம பதநிச சுரமொடு பயில்வானே

போ + உரை.

ஹம்ஸவாகனராகிய பிர்ம்மதேவர்சொல்லை விடாமல் மனம்பொருந்தி தனது ஒருதலையைத்திருகிக்கைகளை முறித்துக்கோத்து தனக்குள்ளே மின்னலைப்போலே விளங்குகின்ற நரம்பையெடுத்து இறுக்கிச்சுருதிசெய்து விளங்குகின்ற சாமவேதத்தைச்சொல்லிக்கொண்டு ஸ, ரி, க, ம, ப, த, நி, ச என்றும் ஸப்தசுரங்களோடும் பாடத்தொடங்கினான். என்றவாறு. (கஅ)

வேறு.

கருவியி னிசையைக் கேட்டுக் கறைக்கண்ட னரக்கன் றன்னை
யருகுற விளித்து நின்ன வாவெனென் றறைத லோடு
மிருபது கையு மேந்தி யெண்ணில்வா ளுளும் வாளும்
வெருவிலா துமையு மீதி யென்றனன் வினையம் வல்லான்

போ + ரை.

தன்னையே கருவியாகக்கொண்டு பாடுகின்ற சாமகானத்தைக்கேட்டு நீலகண்டமூர்த்தி இராவணனைப்பக்கத்திலழைத்து உனக்கு என்னவேண்டுமென்றுகேட்டலும் இருபதுகைகளையுமேந்திக்கொண்டு அச்சமில்லாதவனுகி தீர்க்காயுசும், மந்திரவாளும், யுமையையும் கொடுத்தருளவேண்டுமென்று கேட்டான். காரியம் முடித்துக்கொள்ள வல்லவனுகிய இலங்கேசன். என்றவாறு. (கக)

அளித்தனன் கோடி யென்ன வரக்கனும் பெற்று வாளுங்
களிப்பிலா வல்லி யோடுங் கணக்கிலா வாயு ளோடும்
வெளிப்படு மிலங்கை நோக்கி விண்ணதர் நடந்தான் விண்ணோர்
துளித்தநீ ரிழிகண் ணோடுந் துயர்ந்துமா தவன்பாற் சென்றார்

போ + ரை.

கேட்டவுடன் சிவபெருமான் கொடுத்தருளினேன்கொள்வாயென்று சொல்லுதலும் மந்திரவாளும், தீர்க்காயுசும், பார்வதியையும் பெற்றுக்கொண்டு வெளிப்பட்டு ஆகாசமார்க்கமாய்ப்போகின்ற இலங்கேசனைப்பார்த்து தேவர்கள் எல்லாங் கண்ணுங்கண்ணீருமாய்த்துக்கித்து மஹாவிஷ்ணுவினிடம்போய்ச்சேர்ந்தார்கள். என்றவாறு. (உய)

அமரர்கடயரந்தீர்க்கு மாதியேயரியேயின்றே
யிமவரைமகளையீச னிடும்பனுக்களித்தசெய்தி
யுமதிடந்தெரிவித்தோமென் றுரைத்தலுமுலகளந்தோ
னிமைநொடிப்பொழுதிற் றென்றிக்கேகினான் றுருவி
மன்னே.

பொழி + ரை.

தேவர்கள் துன்பத்தை நீக்குகின்ற ஆதியானவனே ஸ்ரீஹரியே இப்போது பர்வதராஜகுமாரியைச் சிவபெருமான் ராவணனுக்குக்கொடுத்த சமாசாரத்தையும்மிடத்திற் றெரியப்படுத்தினேமென்று சொல்லக்கேட்ட மகா விஷ்ணுவானவர் நிமிஷத்திற்குள்ளேதென்றிசையை நோக்கித்தேடிப்போனார். என்றவாறு. (௨௧)

பனிவரையரித்துவாரம் பவமில்கோகன்னங்காசி
நனியுயர்கயைசீர்ச்சைலம் நற்செகந்நாதம்விந்தந்
தனியமைகருடவெற்புங் காளத்திசர்ப்பக்குன்று
மினிதருளருணைக்கோனு மிகந்துதெக்கணமடைந்தான்.

பொ + ரை.

இமையாசலமும், ஹரித்துவாரமும், பரிசுத்தமாகிய கோகர்னமும், காசியும், மிகவும் உயர்வானகயையும், ஸ்ரீசைலமும், நன்மைதருகின்ற ஜெகந்நாதமும், விந்தகிரியும், ஒப்பில்லாத கருடாசலமும், காளகத்தியும் வேங்கடாத்திரியும், சுகந்தருகின்ற அருணாசலமும் தாண்டித் தெற்குத்திக்கில் செல்லுகின்றான். என்றவாறு. (௨௨)

அருவியும்மணியும்பொன்னு மமைதருசதுரமென்னுந்
திருவரைத்தென்பாற்சைவஞ் சிறந்தசத்திருடியீச
னிருமதிட்சூழ்பதிக்கா மெல்லையி னறும்பூங்காவும்
பெருவளங்கொழிக்குமங்கண் வந்தனன்பிரமன்றாதை.

பொழி + ரை.

அருவிகளும், ரெத்தினமும் சொர்னமும்பொருந்திய சதுரகிரியென்னுங்கொல்லிக்குத்தெற்கில் சைவாசாரங்கள் சிறப்புற்றோங்கிய ஸப்தரிஷீசர் எழுந்தருளியஸ்தலத்திற்காகிய எல்லையிலே பரிமளிக்கின்ற பூஞ்சோலை முதலிய பெரியசெழிப்பு மிகுந்த அவ்விடத்தில் மஹாவிஷ்ணுவானவர் வந்துசேர்ந்தார். என்றவாறு. (௨௩)

வேறு.

பூவனத்தொருபற்றையை வேரறப்புய்த்துப்
பாவிடத்தலைகீழினி னட்டவப்பதிய
நீவுபொள்ளலங்குப்புனல் சொரிதந்து நிமிர்க்குஞ்
சேவகத்தினிலாள்வினை யேற்றனன்றிருமால்.

பொழி + ரை.

வந்து அந்தப்பூஞ்சோலைக்கணிருந்த செடியைப்பிடுங்கித்தலைகீழாக நடுகின்றவப்பயிருக்கு ஓட்டை தோண்டியிற் சலமெடுத்துக்கொட்டி வளர்க்கின்ற வேலையில் முயற்சியுடையவராயினர் மகாவிஷ்ணுவானவர். என்றவாறு. (உச)

வேறு.

அரனருள்பெற்றரக்கனம்மை வாள்வாளுள்பெற்ற
வுரனொடுவரும்போதாங்கேயோம குண்டத்தின்கீழ்பாற்
கரமணிகரகத்தானைக்காண்டிட விறும்பூதெய்தித்
திரமிலாவினையீதென்னச் சிதரன்செப்பினனால்.

பொ + ரை.

சிவபெருமான் கடாட்சம்பெற்ற இராவணன் பார்வதியையும், சந்திரவாளையும், தீர்க்காயுசையும் அடைந்த பராக்ரமத்தோடு வருகின்றபோது அவ்விடத்திலிருக்கும் ஓமகுண்டத்திற்குக் கீழ்ப்பக்கத்திலே கையிற்பிடித்த தோண்டியையுடையவரைப்பார்த்து ஆச்சரியமடைந்து நிலையில்லாக்காரியஞ்செய்கிறாயென்று பழித்தலும் மஹாவிஷ்ணு அவனைப்பார்த்துச்சொல்லத்தொடங்கினர். என்றவாறு. (உரு)

உன்பணியான்முன் பெற்றவுண்மைகே டொழில்செய் பெ
யின்புதவன்னையென்றே யீந்தனனிருகாற்கோடி [ண்ணை
நன்புவியிருக்குமாண்டு நலமிலாவாளுங்கொண்டு
நின்பதியிலங்கைபுக்கு நீண்மதிக்கலவோவென்றான்.

பொழி + ரை.

ஓ ராட்சதனே நீ செய்த காரியமும் எப்படியிருக்குமென்றால் அதைச் சொல்வேன் கேட்பாயாக வேலைக்காரியைச்சுகங்கொடுக்கின்ற பார்வதியென்று கொடுத்ததுவுமல்லாமல் அரைக்கோடி வயதும் சத்தியில்லாத வாளா

யுதமும் பெற்றுக்கொண்டு உன்னுடைய இலங்காபுரத்திற்குச்செல்லுகிற வித்தாரமாகிய புத்திக்கல்லவோ என்று சொன்னார். என்றவாறு. (உசு)

அவ்வுரைகேட்டரக்க னழலெழக்கோபங்கொண்டு
மைவிழிவல்லியோடும் வாளொடுங்கைலைசெல்ல
விவ்விடம்விட்டொதுங்கி யீசனாரிருக்கைபோந்து
பைவளரரவப்பள்ளிப் பண்ணவனிதனைச்சொன்னான்.

பொ + ரை.

அந்த விபரத்தைச் சொல்லக்கேட்ட ராட்சதன் அக்கினிச்சுடர்கொட்டும்படிக்கோபங்கொண்டு அஞ்சனந்தீட்டிய கண்களையுடைய தேவியோடும் வாளாயுதத்தோடும் கைலாசத்திற்குப் போயினான். அதற்குமுன் சிவபெருமானிருப்பிடத்திற்சென்று மஹாவிஷ்ணுவானவரிவ்வார்த்தைகளைச்சொன்னார். என்றவாறு. (உஎ)

வந்தமால்செய்தவண்ணம் வருத்திடவள்ளலன்றே
கொந்தலர்க்குழலிபோல வண்டினைக்குயிற்றியங்ஙன்
முந்தவைத்திருக்குங்காலை மொய்த்தசீரிடன்போந்தேநீ
தந்தருள்பெண்ணைத்தந்தேன் றருதியிப்பெண்ணையென்றான்.

பொ + ரை.

வருகின்ற மஹாவிஷ்ணுவானவர் தான் செய்த விபரங்களைச்சொல்லக்கேட்ட சிவபெருமான் கொத்துமலர் அணிந்த அழகிய கூந்தலையுடைய பெண்ணாக ஒருவண்டைச்செய்து தன் பக்கத்தில் வைத்திருந்தகாலத்தில் பத்துத்தலைகளையுடைய ராவணன் வந்து பெருமானைநோக்கி உம்மாற்கொடுத்தருளிய பெண்ணை உமக்கே தந்தனன். இங்கிருக்குமிப்பெண்ணையெனக்குத்தந்தருள்வீரென்று கேட்டான். என்றவாறு. (உஅ)

ஈசனவ்வுமையைச்சேர்த்தங் கிறுத்தவண்டகட்டினானை
மாசுவல்லரக்கற்கீந்து மருவரைக்கோடிநாளுந்
தேசுறவருளப்பெற்றுத் தெசமுகனிலங்கைசேர்ந்தான்
தூசில்சத்திருடிநாதன் பூசையாற்றேற்றதன்றே.

பொழி + ரை.

பரமசிவன் அவன் தருகின்ற பார்வதிதேவியை இடப்பாகத்திற்சேர்த்துக்கொண்டு தன்னிடத்திலிருக்கின்ற வண்டோதரியையும், அரைக்கோடி

ஆயுசையும், கொடுத்தருளுதலும் பெற்றுக்கொண்டு இராவணன் இலங்கைக்குபோனான். ஆதலினால் குற்றந்தீர்ந்தஸப்தரீஷிசுவரை அம்முனிவர்கள் பூசித்தபடியால் இராவண மனோசங்கற்பம்முடியாமல் தோற்றுவிட்டான் என்று சொன்னார். என்றவாறு. (உக)

ஈசன்றனருள்பெற்றேகு மிராக்கதன்வரத்தையாங்கே
கேசவன்மோசஞ்செய்த கதையிதுகிளத்தினேங்கான்
வாசகன்கிராதனுக்கு மறைமுதலருடந்தாண்ட
சூசிகையின்னுங்கேண்மி னென்றுபாண்டவர்க்குச்சொற்
றான்.

போ + ரை.

சிவபெருமானருளடைந்துசென்ற இராவணன் வரத்தை மஹாவிஷ்ணுவானர் வஞ்சித்துக்கெடுத்த சரித்திரத்தைச்சொல்லினேம் இனிமேல் காட்டில் திரிகின்ற வேடன் சிவனருளடைந்து முத்திபெற்றகதையின் எதார்த்தத்தையும் உங்களுக்குச்சொல்கிறேன் கேளுங்களென்று தால்ப்யமுனிவர் பஞ்சபாண்டவருக்குச் சொல்லத்தொடங்கினார். என்றவாறு. (கூ)

## ச-வது அரக்கன் வரபங்கமுரைத்தவத்தியாயம்

முற்றுப்பெற்றது. ஆ ளசுகூ.



## ரு-வது வேடன் முத்திபெற்ற வத்தியாயம்.



வேறு.

அந்தமாவனத்தமர்ந்திடும் புள்விலங்கனைத்தும்
மைந்தகத்தின்வில்லம்பினு லெய்தவள்ளூறத்தை
மைந்தர்மற்றவருடன்வளைந் துணுமொருமறவன்
பந்தமோடம்பன்னுள்வதிந் தவன்பசிப்பாட்டால்.

போ + உரை.

அத்தண்டகாரணியத்திலே குடிகொண்டபட்சிகள் மிருகங்களிவைமுதலானதுகளைத் திடச்சித்தத்தோடு வில்லினால் அம்புகளைத்தொடுத்துவிட்டுக்கொன்றமாம்ஸங்களைப்பிள்ளைகள் முதலான கூட்டத்துடனே சூழ்ந்திருந்து பொசிக்கின்ற ஒரு வேடன் தன் சுற்றத்தோடும் அநேகநாள் வாசஞ்செய்துவருகின்றவன் ஒருநாள் பசித்துன்பமிகுதியினால். என்றவாறு. (க)

வீாங்குகண்டகமம்புவில் வலைகளுந்தாங்கிப்
பாங்குநாடினன்பருத்தவெண் கவரிமானிருப்ப
வாங்குக்கண்டதையெய்திட வெண்ணியேநாணி
தாங்குவான்றனைக் கண்டிரிந்ததுதனியெகினம்.

பொ + உரை.

பிச்சுவாவும், வாளும், அம்பும், வில்லும், வலைகள் இதுகளையெடுத்துக் கொண்டு பக்கங்களில் தேடிக்கொண்டு போகும்போது கவரிமானிருப்பதை அவன் கண்டு பாணந்தொடுப்போமென்று கயிற்றை எறிடுவதைக்கண்டு அம்மான் ஓடிற்று. என்றவாறு. (உ)

ஓடுமான்றனைத்தொடர்ந்திட வேடனுமுழையு
நீடுகோபுரத்தகோரர்பா னெருங்கிடக்கண்ணுற்
றூடுவோன்கழலமர்ந்திட வதர்திறந்திடல்போற்
பீடுதுன்றியவின்கணை விடுத்துப்பின்பெயர்ந்தான்.

பொழி + ரை.

ஓட்டமெடுக்கின்ற கவரிமானை வேடனுந்துரத்திக்கொண்டுபோக மானும், ஓடி நீண்ட கோபுரத்தையுடைய அகோர முகஸ்தலத்தின் பக்கத்தில் நெருங்குதலும் திருச்சிற்றம்பலத்தில் நடனஞ்செய்பவர் திருவடிநீழலடைய முத்திவழியைத்திறந்துவைக்குதல்போலே அந்த மானைக்கண்டு பாணங்களைவிடுத்து பிறகே தானும் நடந்துபோனான். என்றவாறு. (ரு)

விட்டவம்புவெண்மானமா னிலக்குறமெய்யிற்
பட்டசெவ்வியினரற்கது வால்படவிரட்டிக்
கிட்டவீழ்ந்ததுகாண்டலுங் கேடிலான்மகிழ்ந்தே
யிட்டபூணுமையவளொடுந் தோன்றினனேற்றில்.

பொழி + ரை.

விடப்பட்ட பாணமானது வெள்ளிய சவரிமானை லட்சியங்கொண்டு சரீரத்தில்வந்து பாய்ந்தகாலத்தில் அந்த மான் தன் வாலையசைத்துக்கொண்டு பக்கத்தில் விழுந்திருப்பதைப்பார்த்துக்கெடாத சிவபெருமான் உள்ளமுவந்து ஆபரமணிந்த பார்வதியோடும், இடபவாகனத்திலெழுந்தருளிக்காட்சிதந்தார். என்றவாறு. (சு)

அந்தியத்தினிலாகுவால் வீசுமான் றனக்கு
நந்தியேறிவந்தருள்புரி நாதனைக்கண்டு
வந்தனைவழிபாடுகொண் டிவ்வனத்தஞ்சிக்
குந்திமைந்தனே கொலைசெய்வில் விட்டனன்வேடன்.

பொழி + ரை.

அந்தமான் மரணந்தத்தில் தனது சாமரமாகிய வாலைவீசினதற்கு இடபாரூடனாய் வந்தருளிய ஸப்தரிஷீசுவரரைநோக்கிய அந்த வேடன் அடிமைத்திறத்தையடைந்து ஓ பாண்டவர்களே அந்த ஆரணியத்தைக்கண்டு பயந்து கொலைசெய்கின்ற வில்லைவிட்டெறிந்தான். என்றவாறு. (ரு)

அங்கணின்றிடும்வனசர னூழ்வினையகன்று
திங்கள்வேணியோன்றிருவடி யிறைஞ்சியேதுதித்துச்
சங்கமில்லுயிர்செகுத்தன னெனையவைசாரும்
பங்கந்திர்ந்திடும்படிபடி யெனவரன்பகர்வான்.

பொ + ரை.

கைப்பிடித்த வில்லையெறிந்துவிட்டு வழிபாடுசெய்து அவ்விடத்தில் நிற்கின்ற வேடன் சஞ்சித-ஆகாமிய பிராரத்துவங்கள் நீங்கிச் சந்திரசூடராகிய பெருமானைக்கண்டு திவ்விய பாதங்களை நமஸ்கரித்துக்கணக்கில்லாத ஜீவர்களைக்கொன்றனன் அந்தக்கொலைகள் என்னைவந்தடைவது திண்ணமாதலால் அந்த தோஷங்கள் நீங்கும்படிக்கு ஒருவழிசொல்லவேண்டுமென்ற வேடனைப்பார்த்துச்சொல்லத்தொடங்கினர். என்றவாறு. (சு)

தென்னிலங்கையிராவணன் செய்ததீக்குண்டந்
தன்னினீரெழுவாரிதித் தீர்த்தத்திற்சமமா
மன்னதிற்சிரந்தோய்ந்திட வைந்துபாதகமும்
பின்னும்வாய்ந்திடும் பாவமும்பிரிவுறுமென்றான்.

பொ + ரை.

தெற்கிலிருக்கின்ற இலங்கேசனாகிய ராவணனாற்செய்த ஓமகுண்டத்திலுண்டாகிய தீர்த்தமானது ஸப்தஸமுத்ரதீர்த்தத்திற்குச்சமானமானது. அந்த அகோர தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தால் பஞ்சமகாபாதகங்களும் மேலேவருகின்ற எல்லாப்பவங்களுந் தீர்ந்துவிடுமென்று சொன்னார். என்றவாறு. (எ)

வேறு.

என்றனன் கண்ணிற்காணு தேகிடவெயினனவ்வா
றன்றுமுன்பிருந்தகுண்டத் தற்புதப்புனலின்மூழ்கி
மன்றுளாட்டயர்வோர்போற்றி வலமிடம்வருமந்நாளிற்
றென்றுசத்திருடசன்னுள் சேர்ந்தனன் றுய்யவேடன்.

பொழி + ரை.

என்றுசொல்லி மறைந்தனர். அந்த ஈசன் சொன்னபடியே அப்போது தன் முன்னுக விளங்குகின்ற அகோர தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து பிரதட்சிணம் நமஸ்காரம் தோத்திரம் இதுகளைச்செய்துவருங்காலத்தில் அந்த வேடன் ஸப்தரிஷீசர் திருவடிகளைப்பெற்று மோட்சத்திலிருந்தான். என்றவாறு. (அ)

வனந்திரிபாவமூர்த்தி வரன்கழலடைந்தவாறுந்
தனந்தனிவேள்விக்குண்டங் கருமங்கடணிக்குமென்றே
யனகனுருரைத்தவாறு மறைந்தனமிப்பாற்கோவுந்
தனமதான்முத்திபெற்ற சரிதையுங்கேண்மினென்றூர்.

பொ + ரை.

ஆரணியத்திலே சஞ்சரிக்கின்ற பாவமூர்த்தியாகிய வேடன் சிவபெருமான்றிருவடியடைந்தவிதமும் தானே தனக்கொப்பாகிய அகோரதீர்த்தமானது எல்லாப்பாவங்களையும் போக்குமென்று அந்தச்சிவபெருமான் சொன்ன விதமும், உங்களுக்குச்சொல்லினோம் இனி பசுவானது மூலைப்பாலினுல்ச்சப்தரிஷீசருக்காட்டி முத்திபெற்ற கதையுங்கேளுங்களென்று பாண்டவரை நோக்கித் தால்ப்யமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ+று. (க)

## ரு-வது வேடன் முத்திபெற்ற அத்தியாயம்

முற்றிற்று.

ஆ ௱எ௩.



வேறு.

மலர்த்தடம்பணைபொழின்மலி பொன்னிநன்னாட்டுத்
தலத்தின்மேம்படுந் திருவையாற் றதினுறைந்திடுமுற்
குலத்தொழுக்கமும் வழுவிடாக் கொண்டவேதியன்றன்
னலத்தினல்வளர் நிரைபசுக்குலங்களு மிகுமால்.

பொ + ரை.

மலர்கள்சூழ்ந்த விசாலமாகிய வயல்களும் பூஞ்சோலைகளும், நிறைந்த காவேரிசூழ்ந்த சோழநாட்டுத்தலங்களுக்குள் சிறந்த திருவையாற்றில் வசித்திருக்கிற பிர்ம்மகுலாசாரங்களைத்தவறாது நடத்தி வருகின்ற பிராம்மணன்தனது முயற்சியினால் வளர்கின்ற இடபங்களும், பசுக்கூட்டங்களும் நிறைந்திருக்கும். என்றவாறு. (க)

அப்பசுக்களைமேய்த்திட வாயர்கோன் வனத்தின்
பப்பெலாமுகைத்தேகுவா னகோரமாம்பதிப்பா
லுற்பலங்கமலஞ்சுலாம் வாவியுய்யானஞ்
செப்பம்மல்கிடவிருந்தவப் பொழில்வந்து சேர்ந்தான்.

பொ + ரை.

அந்தப்பசுக்கூட்டங்களை மேய்ப்பதற்கு ஆரணியங்களெல்லாமோட்டிக்கொண்டு போகின்ற ஆயன் அகோரமுகஸ்தலத்தின் பக்கத்திலே நீலோற்பலம் முதலானதும், தாமரையும், சூழ்ந்திருக்கின்ற தடாகமும், பூந்தோட்டவளங்களும் நிறைந்திருக்கின்ற அந்த வனத்தில் வந்து சேர்ந்தான். என்றவாறு. (உ)

உத்தமப்பெருமடவியி னுயர்சுராலோட்டி
நத்தநண்பகன்மேய்த்திடு நாளையிலோரான்
பித்தனாருள்பெற்றிட வவர்க்குத்தன்பாலை
நித்தமஞ்சன மாட்டிட நேர்ந்ததி லோர்நாள்.

பொ + ரை.

முதன்மையாகிய அந்த ஆரணியத்திலே உயர்ந்த பசுமாடுகளை யோட்டிக்கொண்டு இராப்பகலாக மேய்த்துவருகையில், ஒருநாள் ஒருபசுவானது சிவபெருமான்றயையைப் பெறுவதற்குத்தன்பாலை நாள்தோறும் அபிஷேகஞ்செய்து வரும்போது ஒருதினத்தில். என்றவாறு. (ங)

வாசமுல்லைமல்லிகைமலி வனத்தொருவயமாப்
போசனங்கொளவாவினைப் பிடித்திடப்பொருக்கென்
றீசன்வார்கழற்கபயமென் றெண்ணிவிழ்ந்திடலும்
மாசகற்றுமேவோன் மழவிடைமீதுவந் துதித்தான்.

பொ + ரை.

பரிமளம் வீசுகின்ற முல்லை, மல்லிகைகள் நிறைந்தகாட்டில் ஒரு புலி ஆகாரஞ்செய்வதற்கு அப்பசுவைப்பிடித்துக்கொள்ளலும் உடனே பரமசிவனது நீண்ட வீரகண்டாமணியணிந்த திருவடிகளுக்கபயமென்று கீழே வீழ்தலும் இருவினையொப்பும் மலபாரிகமும் அருளிச்சுகஞ்செய்கின்ற சிவபிரான் இளமையுடைய இடபத்திலெழுந்தருளித் தோன்றினர். எ + று. (ச)

உதித்தசோதியையுழுவைகண் டொருவித்தன்சாபந்
துதித்துப்போற்றலுந தூயநற்றவமுனியாகி
மதிச்சடைப்பிரான்றன்றிரு முன்னமர்வானைக்
கதிக்குவிழ்ந்தவான் கண்டரன்றனையிதுவினவும்.

பொ + ரை.

பிரயத்தியட்சமடைந்த பெருமானைக்கண்டமாத்திரத்தில் புலியின் சாபம் நீங்கித் தவமுனிவனுகத்தோன்றி நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்துகொண்டு நன்மையைத்தருகின்ற சந்திரசூடராகிய சிவபெருமான் சந்நிதியில் நிற்கின்றவனைப் பார்த்து அபயமென்ற பசுவானது காட்சிதந்தருளிய ஜெகதீசனை இந்த வார்த்தையைக் கேட்டது. என்றவாறு. (ரு)

கேட்டகோவினைக்கேடிலா னருள்புரிந்துரைப்பான்
கூட்டமாயிமையவர்சுவர்க் கத்தின்முன்கூடி
யாட்டில்பூரணஞானவின் புறச்செயும்யாகங்
கோட்டவூனவிர்ப்பாகமாக் கொடுத்திடுங்காலை.

பொ + ரை.

புலியானது முனிவனுகிய காரணமென்னவென்று கேட்டலும் நாசமில்லாதவனுகிய ஈசுவரன் திருவுளமிரங்கி சொல்லத்தொடங்கினர். முன்னம் ஒரு காலத்தில் தேவர்களெல்லாமொன்றுசேர்ந்து அசைவில்லாத பரிபூர்ண ஞானசுகத்தையடையக் கருதி யாகஞ்செய்து வருகையில்; பசுக்களின் இறைச்சிகளை அவிர்ப்பாகமாகக் கொடுத்துவருங்காலத்தில் - எ + று. (சு)

மாதவத்தினோர்குழுவினில் வனசருமன்றன்
போதமேன்மையாலூனுத வென்றிடும்போது
விதமாக்கியசுரகுரு வவனைவன்வேங்கை
யாதிபோவெனச்சபித்தன னமரர்சூழவையில்.

போ + ரை.

தேவரிஷி முதலானவர் கூடியசபையில் வனசற்மாவென்றொருமுனி வன் தன் மயக்கமிகுதியால் விரைந்தெழுந்து அந்த மாம்ஸத்தைக் கொடு வென்று கேட்டபோது அவிர்ப்பாகங் கொடுத்துவருகின்ற வியாழபகவான் அம்முனிவனை நீ வலிய வேங்கையாகப்போகக்கடவதென்று தேவர் கூடியி ருக்கின்ற சபையிலே சாபங்கொடுத்தார் - என்றவாறு. (எ)

சாபந்தாங்கியவம்முனி தரணியின்வரியாய்க்
கோபமோங்கப்பலூறடிநிதந் துய்த்தனன்மற்றவ்
யூபமேவியவவிகொளா துறைமுனிசிலரைத்
தாபரங்களாய்ச்செனித்திடு வீரெனச்சபித்தான்.

பொழி + ரை.

சாபத்தை வாங்கிய அந்த வனசற்மாமுனிவன் பூலோகத்தில் ஒரு வே ங்கைப்புலியாகிக்கோபங்குந்து அநேகமாம்ஸங்களை நாள்தோறுமுண்ணும்ப டியாயினன். யாக அவிற்பாகத்தை வாங்காத சில இருடிகளைத்தாபரப்பொ ருளாகியமரங்களாக ஆவீர்களென்று பின்னும் வியாழபகவான் சபித்தார். என்றவாறு. (அ)

பூசுரோத்தமர் சாபத்தாற் போரந்துநம்மருகின்
மூசமற்றரக்கன்வர முனிவர்கண் மரமாய்த்
தேசுபெற்றசின்மயத்தரிற் சேர்பவத்தோனு
மேசநீர்ந்துபண் டுருக்கொடு சென்றனனென்றான்.

போ + ரை.

அந்தகுருபகவான்சாபத்தைப்பெற்ற முனிவனும்நமது பக்கத்தில்வந்தி ருந்தகாலையில் இராவணன் வருதலும் அவர்கள் மரங்களாய் இருந்த அவர்க ளிலொருவனுகிய சாபம்பெற்ற வனசருமாவென்னும் முனிவனும் சாபநீங் கிப்பழயவடிவையடைந்தானென்று சிவபெருமானருளிச்செய்தார் எ—று. (கூ)

ஆவினுக்குத்தன் பதமளித்தாண்டவின் மறைந்தான்
கோவினுற்குருசாபம்போய்க் குணவனசருமா
வோவினற்றவம் புரிந்துவிண் ணுலகடைந்தனன்பின்
காவின்மற்றையமுனிவரர் மரமெனக்கதித்தார்.

போ + ரை.

சிவபெருமான் இந்தவிதம் சொல்லித்தெளிவித்துப்பசுவிற்குந்தன்றிருவடியையருளிமறைந்தார். பின்பு அந்தப்பசுவினுற் சாபநீங்கினவனுகிய நற்குணநிறைந்தவநசற்மமுனிவர் எப்பொழுதும் அரியதவத்தைச்செய்து தேவலோகத்தை அடைந்தார். அதன்பிறகு அந்த ஆரணியத்தில் வேறுள்ள இருடிகள் மரங்களாகச்சிறந்திருக்கின்றுர்கள் - என்றவாறு. (ய)

வேறு.

சரூபமின்முனிவர்போற்றிச் சார்ந்தகாரணத்தின் ஞான்று
மரூஉமொழியாகச்சத்த முனீசனென்றுலகம் வாழ்த்துங்
குரூரமுற்றெருவுந்தாற்பி யனும்பினுங் குந்திமக்காள்
புரூரவன்கதையுங்கேட்பி ரென்றுடன் புகன்றுனன்றே.

போ + ரை.

உவமையில்லாத அந்த இருடிகள் பூசைசெய்து துதித்தகாரணத்தினுலே என்னுளும் உயர்ந்தோர்களால் பொருந்தியபெயராகவே ஸப்தரிஷீசரென்று துதிசெய்யப்படும். கொடுமையாகிய குணங்கள் நீங்கியதாற்பிய முனிவர் இன்னமும் ஒ பாண்டவர்களே? புரூரவசக்கிரவர்த்தியுபாசித்தகதையையுங்கேட்பீரென்று சொல்லத்தொடங்கினுர் - என்றவாறு. (கக)

கூ-வது கோமுத்திபெற்றவத்தியாயம்

முற்றிற்று. ஆ ௱௮கூ.



வேறு.

சிலைபுருவமளிக்கணுமை யிளாவிருதமணைந்தவரார்
தெரிவையென்ற
சொலைவினவா னிளனெனுமிந்திரபுரியா ளிறையவனச்
சுரஞ்சென்றுட்டி
நிலைமருவிநிலவளிக்கும் மதலைபுதனொடுங்கலவ
நிகழ் புரூரன்
றலைமையினோர் குடைநிழற்கு ளுலகாளும் முறைசெங்
கோற் றரித்தானன்றே.

பொழிப்புரை.

மன்மதன் செங்கரும்பு வில்லையொத்த புருவமும், அது பூட்டும் நாணாகிய வண்டையொத்த கண்களையுமுடைய பார்வதிதேவியார் இந்த இளாவிருதகண்டத்தில் வந்தவர்கள் பெண்ணாக ஆவார்களென்றுசொல்லியதைக்கேட்டுத்தெரியாதவனாகிய இந்திரபுரியென்னும் பட்டணத்தையாள்கின்ற இளமகாராசன் அந்தக்காட்டிற்சென்று ஸ்திரீயுருவாகிச் சந்திரகுமாரனாகிய புதனோடும் புணர்ந்திடவும் உண்டான புரூரவன் முதன்மைபெற்ற பராக்கிரமத்தால் இவ்வுலகமுழுவதும் ஒரு சந்திரவட்டக்குடைநிழற்குள்ளே தங்கும்படி நீதியாகச்செங்கோலைஏந்தியரசாட்சிசெய்துவந்தான் – என்றவாறு. (௧)

நாவலெனும்பெருந்தீவி னவகண்டந்தனிலெண்ணேழ்
நாடுதாங்குங்
காவலர்கள் கப்பமிடக் களிகொள்புரூ ரவனொருநாட்
கரிதேர் சூழ
வாவமுதற்படைதாங்கித் தானையொடு மதிவேக
வயத்தி லேறிக்
காவனஞ்சென் றடர்விலங்கு களைவேட்டஞ்செய்திருந்த
காலை யம்மா.

பொழிப்புரை.

ஜம்புத்தீவிலாகிய பரதகண்டம், குருகண்டம், கிம்புருஷகண்டம், இளாவிருதகண்டம், அரிவருஷகண்டம், கேதுமாலகண்டம், ரம்மியகண்டம், பத்திராகண்டம், இரணியகண்டம் என்னும் ஒன்பதுகண்டங்களிலுமிருக்கிற ஐம்பத்தாறு தேசங்களையும், ஆளுகின்ற அரசர்கள் கப்பஞ்செலுத்தவும் அகங்களித்திருக்கும் புரூரவசக்கிரவர்த்தியானவன் ஒருநாள் ஆனைகளோடு

ம், தேர்கள்சூழ அம்பறுத்தூணியில் வைக்கப்பட்ட பாணம் முதலான ஆயு தங்களைக்கொண்டு சதுரங்கசேனைகளுடனே கதியையுடைய அசுவத்திலே றி வலிமையுடைய காட்டிற்போய் வேட்டையாடிக்கொண்டிருந்தகாலத்தில் என்றவாறு. (உ)

மாசுரர்வாழ் பொன்னாட்டின் வசிசசிதன் சகிகளொடும
மண்ணில் வந்து
தேசுடையபுருகூத னருச்சனைசெய் தலம்போற்றிச்
செல்லும்போழ்து
வீசுதுணியியந்திரத்தி லிவர்ந்தவழன் முகாசுரனூர்
வசியின் வீழ்ந்தே
யாசினிற்கொண்டகன்றிடும்போழ் தயிராணிபுரூரவனிற்
கபயமென்றாள்.

பொழி + ரை.

பெரியதேவர்கள் வசிக்கின்ற சுவர்க்கத்திலிருந்த இந்திராணியானவள் தனது தோழிகளோடும் பூலோகத்தை வந்தடைந்து இந்திரனால் வழிபட் டதலங்களெல்லாம்தரிசனஞ்செய்துவருகிறகாலத்தில் ஆடுகின்றகொடியை யுடைய இரதத்திலேறிவந்த அக்கினிமுகாசுரன் ஐயிராணிதோழியாகிய ஊர்வசியினேடும் விரும்பிச்சீக்கிரமாக எடுத்துக்கொண்டு போகும்போது இந்திராணிகண்டு புரூரவசக்ரவர்த்தியே உனக்கடைக்கலமென்று சொன் ஞள் - என்றவாறு. (௩)

அம்மொழிகேட்டவேந்த னடவியின்விளித்தார் யாவ
ரம்மவென்றகத்திலுன்னி யாசைநான்கினையு நோக்கித்
தம்மையுநோக்கிச்செல்லுஞ் சயந்தனநோக்கி மன்னன்
மும்மதமலைகள்பூட்டும் முகிறகொடித்தேர்மேற் சென்றான்.

போ + ரை.

அந்த அடைக்கலம் என்ற வசனத்தைக்கேட்ட புரூரவச்சக்கிரவர்த்தி இந்தவனத்தில் ஓ புரூரவாவென்று கூப்பிட்டவர் யாரோவென்று ஆச்சரியங் கொண்டு மனதில் நினைத்து நான்கு திக்குகளையும் பார்த்துத்தன்னையும்பா ர்த்து வார்ந்துபோகின்ற அசுரன் ரதத்தையும் பார்த்தான் உடனே சக்கிரவ ர்த்தி மூன்றுமதங்களையுடையமலைபோன்றயானைகளைக்கட்டிய மேகத்தைக்கொடி யாயுடைய ரதத்தின்மேலேறிக்கொண்டு போனான் - என்றவாறு. (௪)

சென்றவேனிருபன்றேரைச் சிதருறப்புடைக்கச் சூரன்
நன்றெனச்சினந்திரண்டு நவிரத்தோடெழுந்து நாற்கண்
ணின்றழற்கணங்கள்கொட்ட நெறித்தரசிறையைநோக்கித்
தின்றனனின்னேநின்னை யென்றனன்செல்லினம்மா.

போ + ரை.

தேரேறிச்சென்ற சக்கிரவர்த்தியானவன் தான் ஆரோகணித்த தேரைப்பொடியாகும்படி அடித்தலும் அசுரன் நன்றாச்சுதென்று கோபங்கொண்டு இரண்டுதலையுடனே ஆக்கிரமித்து நாலுகண்களிலிருந்தும் அக்கினிப்பொறிகள் கொப்புளித்திடச்செவ்வையாய் நின்று சக்கரவர்த்தியைப்பார்த்து இப்பொழுதே நின்னைமென்றுவிடுகிறேனென்று இடிஇடித்ததுபோலுரப்பிச்சொன்னான் - என்றவாறு. (௫)

வேறு.

இடிபோலிசைத்த வொலிகோளமுட்டவிமையோர்வெ
றுண்டுநிமிரக்
குடியேமகூடமுதன்மாயை மைந்தர்குழூவிக்கிரீடமணியாக்
கொடிமீதசைத்தவயமேன்மு னூறுகூறக்குரோணியநிகம்
நொடிசூழவன்னி முகனிட்ட சொல்லை நுதிகொண்டு
நின்றனரரோ.

போ + ரை.

அப்படி இடிஇடித்ததுபோலே பேசுகின்ற ஒசையானது அண்டமுகட்டளவும்போய் எட்டவும், தேவர்களெல்லாம் பயந்தோடவும், இதுதெரிந்து ஏமகூடமுதலாகிய மலைகளில் குடியிருக்கின்ற அசுரர்கள் கிரீடமணிந்து துவசங்கட்டிய தேரின்மேலேறி முந்நூறக்ரோணி சேனைகளுடனே வந்து சூழ்ந்துகொண்டு அக்கினிமுகாசுரன் இட்ட கட்டளைப்படி நின்றார்கள் - என்றவாறு. (௬)

பதினாலுநூறுகரமோடுபெற்ற படையார்படைத்தலைவரோ
டதிகோபயுத்தமிடுவோனிடும்ப னறுநூறுசென்னியவனுந்
திதியாலுதித்தநதிபோற்செருக்கு விரைநீர்முகத்தவுண
னும்
மதிநேர்வெளுத்தவுடலோர்ப சுத்தவடிவோருமொய்த்தி
டுவரால்.

போ + ரை.

இன்னமும் எழுநூறுவலைகளும், ஆயிரத்து நானூறுகைகளும் உடைய வரத்தாற்பெற்ற ஆயுதங்கள் பொருந்திய சேனாதிபதிகளும், அதிகமாகிய

கோபத்துடன் சண்டைசெய்யத்தகுந்த இடும்பாசுரனும் அறுநூறு தலைகளும் ஆயிரத்திருநூறுகைகளையுமுடைய அசுரனும், திதிதேவியினுற் பெற்றருளிய நதிநீரின் ஓட்டம்போலே சண்டையைக்கண்டோடுகின்ற சூரர்களும், சந்திரனைப்போலே வெளுத்த தேகத்தையுடைய சூரர்களும், பச்சைமலைபோலே தேகத்தையுடைய சூரர்களும் நெருங்கி வளைந்துக்கொண்டார்கள் - என்றவாறு. (எ)

பரியேய்முகத்தர்பரிவாரமோடு பலவாயெதிர்க்குமவுணர்
கரிமான்முகத்தர்குலைநாய்முகத்தர் கனலேறுதுண்டவசுரர்
எரியூர்தியொத்த கருவன்முகத்த ரிருள்போன்மலைப்பு
முயல்வோர்
வரிமாமுகத்தர்நரியாமுகத்தர் வயமாமுகத்தர் வளைவார்.

போ + ரை.

இன்னமும் குதிரைமுகத்தையுடையவர்களும், காலாளகளுடனே அநேகவிதமாக எதிர்த்துச் சண்டைசெய்யுமசுரர்களும், யானைமுகத்தசுரரும், குலைக்கின்ற நாய்முகத்தரும், அக்கினியுண்டாகின்ற முகத்தோரும், ஆட்டினது முகத்திற்கருமை சிறந்தவரும், இருட்டிபபோலே சண்டைசெய்கின்றவரும், புலிபோல் முகத்தோரும், நரியாகிய முகத்தோரும், சிங்கமுகத்தினையுடைய வசுரர்களும் சூழ்ந்துகொண்டார்கள் - என்றவாறு. (அ)

வேறு.

காலதூதர்கள்விலங்கூன் கனன்படுத்தட்டளிப்பப்
பாலவெண்மதியைச்சூப்பிப் பரிதியைத்துரத்தியேழு
கோலவாம்பரியும்வெள்ளைக் கும்பியும் பிடித்துச்செல்வர்
வேலைநீர்த்திரளைக்காலின் வீசிவற்றிடச்சூழ்ந்தாரால்.

போ + ரை.

எமன்றூதர்கள் மிருகமாம்ஸங்களை அக்கினியிற் சமைத்துக்கொடுக்கவும், வெள்ளியசந்திரனையுறுஞ்சிச்சக்கைசெய்பவரும், சூரியனை விரட்டிவிட்டு அழகியதாவுகின்ற ஸப்தமாவையும், ஐராவதத்தையும், பற்றிச்செல்கின்றவரும் சமுத்திரசலத்தைத் திரட்டிக்காலினுலிறைப்பவருமாகிய அசுரர்களெல்லாம் வளைந்துகொண்டார்கள் - என்றவாறு. (க)

சலதிசூழ்போதல்போலத் தரணிவானிரம்பிக்கோவைக்
குலவரையசுரரெல்லாங் கொடுஞ்சினத்தினராய்க் கோல

லகொருகுடையாள்வோன்கண் ணுற்றுவன்வெகுண்
டு சீறி
யலகிலாப்படையைத்தேரி னமைந்துவில்லேற்றநின்றான்.

பொ + ரை.

சமுத்திரம் பொங்கி வளைந்ததுபோலே பூமி ஆகாசங்களெல்லாம் நி றைந்து புரூரவச்சக்கிரவர்த்தியை உயர்ந்த மலைகளிலுள்ளவசுரர்கள் முழு வதும் பொல்லாங்கைத்தருகின்ற கோபத்தையடைந்தவர்களாய்ச் சுற்றிக் கொள்ளுதலை உலகத்தை ஒரு குடையிலேயாள்பவனாகிய சக்கிரவர்த்திகண் டு மிகவுங்கோபங்கொண்டு அதட்டிக்கணக்கில்லாத ஆயுதங்களை இரதாரூட னாகி வில்லில்தொடுக்கக்கையிலே வாங்கினான் - என்றவாறு. (கய)

எடுத்தனன்வயிரக்கையா னிசைக்கவிண் ணாணேறிட்டுத்
தொடுத்தனனொன் றுபத்து நூறொடாயிரந்தொடர்ந்து
விடுத்தனன்யாளிபோல்வான் வாளியைவிரிந்தசூரர்
படுத்தனர்களத்துறுப்பிற் பாய்ந்திடப்பட்டவன்றே.

பொ + ரை.

வில்லைக்கையிற்பிடித்துப்பலம்பொருந்திய நாணேறிட்டுக் குணத்தொ னிசெய்து தொடுக்கின்ற ஒருபாணமானது பத்து, நூறு, ஆயிரம் என்று அ டுக்கடுக்காக உண்டாகும்படி ஆளியைப்போன்ற பராக்ரமசாலியாகிய சக்கி ரவர்த்தி பிரயோகித்தகாலத்தில் பரவியிருந்த சில சூரர்கள் அவயவங்களி லுருவப்பட்டுக் கீழே விழுந்தார்கள் - என்றவாறு. (கக)

வாளியாற்றொலைக்கக்கண்டு வான்முகிலொத்துச்சீறித்
தாளினாலவுணன்கொட்டச் சலமுகத்தசுரனோக்கித்
தூளிநான்செய்வலென்று சுற்றினன்கோக்குழாத்தைப்
பூழியும்புனலும்பொங்கப் புரிந்துமிக்கலைத்தானம்மா.

பொழி + ரை.

சக்கிரவர்த்தி பாணங்களால் தன்படைகளெல்லாம் இறந்துபோவதை க்கண்டு மேகம்போலே கெர்ச்சித்து அக்கினிமுகாசுரன் காலினாலே பூமியி லேயடிக்க ஜலமுகாசுரன்பார்த்து நான்இந்த அரசன்சேனைகளைத்தூள்த்து ளாகச்செய்வேனென்று வளைந்து சேறும்நீருமாக வெள்ளமெடுக்கும்படிச் செய்து மிகவும் வருத்தினான் - என்றவாறு. (கஉ)

புனற்பிரளயத்திலாழ்ந்த புரூரன்சூர்த்தானைநோக்கிச்
சினத்தொடுகராவுமச்சஞ் செனிக்குமப்படையிற்றாக்க
வினத்தொடும்புனன்முகத்தோ னிறந்திடக்கண்டுவன்னி
மனத்தினிலனுக்கங்கண்ட மதியுடலவுணன் சொல்வான்.

போ + ரை.

அந்தஜலப்பிரளயத்திலழுந்திய புரூரவன் சூரனது சேனையைக்கண்டு கோபங்கொண்டு முதலைகள் மத்ஸ்யங்கள் உண்டாகின்ற திவ்வியஅஸ்திரத்தைத்தொடுத்து விடுத்தகாலத்தில் தனது சேனைகளுடனே ஜலமுகாசுரன்வதமாதலும் அதைக்கண்ட அக்கினிமுகாசுரன் மனோதுக்கமடைவதுகண்டு அவன்மந்திரியாகிய சந்திரசரீரனென்ற அசுரன் சொல்லத்தொடங்கினன் - என்றவாறு. (௧௩)

குளிர்ந்திடுமமுதந்தன்னாற் கொல்லுகேனரசையானென்
றொளிர்ந்திடும்மதித்தண் மார்பாலோடுபு சிமிழ்ப்பமன்ன
றுளிமுளிந்திடவமபெய்து சுதாகரனுடலைமாய்த்தா [ன்
னளியிருட்காயன் கங்கு லமர்திசை பரவச்செய்தான்.

பொழி + ரை.

சீதளமாகிய எனதுசரீரஅமிருதத்தினாலே கொன்றுவிடுவேனென்று சொல்லிவிட்டுச்சக்கிரவர்த்தியைச்சந்திரகிரணம் மிகுந்ததன்மார்பினால் ஓடிப்பாய்ந்து கட்டவும், அரசன் அசுரனது மழையாகிய பனிகளைவற்றும்படி அஸ்திரங்களை விடுத்து அந்த சந்திரகாயனையுங் கொன்றான். உடனே வண்டுகள்போலும், நீலகாயனென்ற அசுரன் இருள்மயமாகிய யுத்தத்தைத் திக்குகளெல்லாம்கும்மென்று இருள்போர்ப்பச்செய்தான் - எ + று. (௧௪)

இருண்டதுமமர் செய்யார்ப்பு மிந்திர புரியிற்கேட்டுப்
பிருந்தமாய்ச்சேனையெல்லாம் பெருகிடக்கூட்டிப்பின்வந்
திருந்திடுவிதர்ப்பதேயத் திராக்கதிருலோசனனேடும்
பெருந்தளவங்கதேசப்பெலிட்டனிற் போரிலுற்றான்.

போ + ரை.

இருள்வந்துமூடியதையும், யுத்தஞ்செய்வதினாலாகிய சத்தத்தையும் புத்திரீட்சண்யனும் கேழ்விப்பட்டு இந்திரபுரியிலிருந்து கூட்டமாகிய சேனைகளுடனே நாற்படைகளையுமொன்று சேர்த்துக்கொண்டு தன்பின்னேவந்திருந்த விதர்ப்பதேசத்தரசனாகிய சந்திரலோசனனேடும், அங்கமாகியசே

னைகளையுடைய வங்கதேசாதிபதியாகிய பெலிஷ்டராஜனோடும், போர்க்களத்தில் வந்துசேர்ந்தான் - என்றவாறு. (கரு)

உற்றவர்தங்கடங்களுயுத்தவெம் படையாற்சூரர்
சுற்றிடும்படைகண் மாய்த்தார்தூமதி யுலோச னன்போர்
கற்றவனிருள்செய்சூரற் கடிந்தனன்பெலிட்டன் பொற்கோப்
பற்றினர்ச்சண்டையாற்றிப் பன்முகரொடும் மாய்த்தானல்.

போ + ரை.

படையெடுத்துவந்த அரசர்கள் தனித்தனியுத்தஞ்செய்து அவரவர்கள் விடுகின்ற பாணங்களினாலே சூழ்ந்திருக்கின்ற அசுரர்களையும், அவர் சேனைகளையும், கொன்றார்கள். சந்திரலோசனன் யுத்தத்திற் பழகிய இருளுண்டாக்கிச் சண்டைசெய்கின்ற நீலகாயனைக்கொன்றனன். பெலிஷ்டமகாராஜன் இரணியாசலாசுரனை அநேகமுகஅசுரர்களோடுஞ்சண்டைசெய்துகொன்றான் - என்றவாறு. (கசு)

மாய்ந்திடக்கண்டிடும்பன் வல்லிடியென்னச்சீறிப்
பாய்ந்தவனரசன்றானை பதறிடச்சிதறியோடித்
தீய்ந்திடச்செயலும் வங்கதேயமாள் பெலிட்டன்கண்டே
யோய்ந்திடவிடும்பன் றன்மேலோட்டினான் கணைகண்மாரி.

போ + ரை.

வெகுமுகத்தசுரர்களிறந்தது தெரிந்து இடும்பாசுரனைவன்வலியகோடையிடிபோல கெற்சித்துவந்துவிழுந்து சக்கிரவர்த்தியின்படைகளெல்லாம்திடுக்கிட்டுச்சின்னாபின்னமாய் ஓடும்படிச்செய்வதைப்பார்த்து வங்கதேயத்தரசனாகிய பெலிஷ்டன் இடும்பாசுரனோடெதிர்த்துப்பாணவருஷங்களை பிரயோகித்தான் - என்றவாறு. (கஎ)

இடும்பன்மட்கவ்வவீழ்ந்தே யிறந்தனன்கண்டான் வன்னிக்
கொடுமுகனாழித்தீப்போற்குறுகிவன் பெலிட்டன்றன்னை
நடுநடுக்குறத்தெவ்வாற்ற நாவலந்தீவாண் மன்னன்
கடுமுனைப்பகழிமாரி கடுகித்தீமுகன்மேற்பெய்தான்.

போ +ரை.

வங்கதேசத்தரசன் அம்புகள்பட்டு இடும்பாசுரன் மண்ணைக்கவ்விக்கொ

ண்டிறந்தான். அதுகண்ட அக்கினிமுகாசுரன் வடவாமுகாக்கினியைப்போலே கிட்டநெருங்கி பெலிஷ்டமகாராஜனை நடுநடுங்கும்படிச்சண்டைசெய்வதைக்கண்ட புரூரவசக்கிரவர்த்தியும், விஷத்தைப்போலும் கூர்மையுடைய திவ்யபாணங்களை அந்த அக்கினிமுகாசுரன்மேலே மழைபோல வருஷித்தான் - என்றவாறு. (கஅ)

வன்னிவின்ஞணேறிட்டு வடிக்கணைதொடுத்து மௌலிச்
சென்னியைத்துவட்டிநோக்கிச செம்புத்திவிறைமேலெய்ய
தன்னிலொவ்வொருவரேவுஞ் சரங்களொன்றேடுதாக்கி [த்
மின்னிடிவீழ்ந்ததென்ன மேதினிதொள்ளிற்றம்மா.

போ + உரை.

சக்கிரவர்த்திவிடுத்தபாணங்களைக்கண்டு அக்கினிமுகாசுரனைவன் தனது வில்லையெடுத்து வளைத்து நாணேற்றி அம்புகளைத்தொடுத்துத்தலையசைத்து மிரட்டிப்பார்த்து விடுத்தலும், அவரவர்கள் பாணங்களும், ஒவ்வொன்றேடு தாக்கப்பட்டு மின்னலுடனே யிடிவீழ்ந்ததுபோலே பூமியைத்தொளைத்துக்கொண்டுபோயிற்று - என்றவாறு. (கக)

துற்றியவிருசிரத்தோன்றொடுகணை மன்னன்மெய்யிற்
புற்றுளேகரவமொப்பப் புக்குருவிடலுமன்றேன்
சற்றயர்ந்தெழுந்துநின்ற தகுவனைக்காணுதேங்கு
மற்றம்பன்னியுதமாப்பூட்டரிவரு மமரங்கேட்டான்.

போ + ரை.

நெருங்கிய இரண்டுதலையையுடைய அக்கினிமுகாசுரன் தொடுத்தபாணங்களானது சக்கிரவர்த்தி சரீரத்திற்புகுந்துருவிப்புற்றினிற்பாம்பு புகுந்துசெல்வதைப்போலே வெளிவருதலும், அரசன்சற்றுநேரந்தளர்ந்து மூர்ச்சையடைந்திருந்து தெளிந்தெழுந்து யுத்தஞ்செய்துநின்ற அசுரனைக்காணுமல் விசனமடைகின்றகாலத்திலே பத்துலட்சங்குதிரைகள் கட்டியதேர்வருகின்ற சப்தத்தைப் புரூரவன் கேட்டான் - என்றவாறு. (உ0)

வேறு.

"காணுதுசென் றசுரன்கவர் கடவுட்கொடி கொடுபோய்க்
கோணுதேம கூடக்குகை கோல்வான்மயன்சூழ்ந்து
வாணுற்றிசை யொளிரப்புரி மதிண்மாளிகை வைத்தே
பூணுசையி னெவரும்புகல் போகாவரண் செய்தான்.

பொ + உரை.

காணுமல் மறைந்துபோன அக்கினிமுகாசுரன் திருடிப்போன தேவஸ்திரீயைக்கொண்டுபோய் மாறுபாடில்லாமல் ஹேமகூடத்திலொரு குகையினிடத்தில் மயனுலே இடஞ்செய்விக்கப்பார்த்து ஒளியானது நாலுதிக்குகளும், பிரகாசிக்கும்படிப்பொன்மயமாய்ச்செய்தமைந்த மதிள்சூழ்ந்த உபரிக்கைக்குள்ளே வைத்துத்தான்கொண்ட பேராசையினுலே யாவர்களும் செல்லாத காவலையுஞ் செய்துவைத்தான் - என்றவாறு. (உக)

அப்பாலிறையவனைககடி யதின்வென்றிடவென்று
தப்பாவிருந்திடுந்தானவர் தம்மானனநோக்கிச்
செப்பாமுலையிடத்தானருடேர்தன்னெடுபடையு
மிப்போதிவட்கொணர்வீரென வேறிக்கணஞ்சென்முன்.

பொழி + ரை.

தேவஸ்திரீயை ஹேமகூடத்தில்வைத்தபின்னர் சக்கிரவர்த்தியை அதிசீக்கிரத்தில் ஜெயிக்கவேண்டுமென்று இறந்துபட்டவர்போகத்தப்பிநின்றவர்களாகிய அசுரர்களுடைய முகத்தைப்பார்த்து செப்புப்போன்ற தனங்களையுடைய பார்வதியைஇடப்பாகத்தில் வைத்த சிவபெருமானருளிய தேர், அஸ்திரசஸ்திரங்களை இப்பொழுதே இவ்விடங்கொண்டு வருவீரென்றதட்சணமே கொண்டுவருகின்ற தேரிலேறி க்ஷணத்திற்குள்போனுன்.
எ + று. (உஉ)

வேறு.

குன்றிடைபொடிபடவண்டர்கள் வெருளக்குலவரை கிடுகிடென
மன்றுகள் புகையெழ வெஞ்சுடர் குடகிரி மருவிட விரையுருளை
ஒன்றுபினென்றுருள் கின்றதின் மண்டலம் விண்டிட வுரகன் முடி
கன்றிட வம்பர மன்று கலங்கக் கதியிர தம்வருமால்.

பொ + ரை.

மலையின் நடுவுகள் பொடிபட்டோடவும், தேவர்கள் பயப்பட்டோடவும், அஷ்டகுலாசலபருவதங்கள் கிடுகிடென்றுஅசையவும், வெளிகளெல்லாம் புகைமூடவும், சூரியன் அஸ்தமனகிரியைத்தேடவும், வேகமாகியஉருளை

கள் ஒன்றின்பிறகொன்று உருண்டு செல்கின்றதினால் பூமிவெடிபட்டு ஆதிசேஷன் ஆயிரந்தலைகளுந்தாங்கமுடியாமல் வருந்தவும், சமுத்திரம் கலங்கிடவும், அதிகவேகமாகத்தேர்வருகின்றது - என்றவாறு. (உங)

மந்தரகிரிபுரை வண்டில்சுழன்றிட மணியொலிகணகணெனச்
சந்திரனுலகெழுதொங்கலினொளிரத் தாவியொதுங்குதல்கன்
டந்தரியிங்குநிலென்றிட வுற்கைகள் வீழ்ந்திடவாநதை குரால்
கந்தலெனுங்கலகலவொலிமன்னக் களனிடம் வந்தனனால்.

பொழிப் + ரை.

மந்தரமலையைப்போலேயிருக்கின்ற சகடைகள் உருண்டோடவும், அதிற்கட்டிய மணிகள் கணகணவென்று சப்திக்கவும், சந்திரலோகத்தை முட்டிய தேரின் கூம்பிற்கட்டிய குடைவிளங்கவும், தாவிச்செல்லுகின்றதைக்கண்ட ஆகாசவாணியும் போகாதே நில்லடாவென்றுசொல்லவும், கொள்ளிக்கட்டைகள்விழவும், ஆந்தை, கோட்டான் முதலாகியபட்சிகள்கெடுதலென்று சொல்கின்றதுபோலே கலகலவென்று சத்திக்கவும், யுத்தகளத்தினிடம் வந்துசேர்ந்தார்கள் - என்றவாறு. (உச)

வேறு.

மன்னவ னயர்வு தீர்ந்தான் மந்திரி புத்தி கூர்மை
பின்னவன் றளக்கோனன்கு பெரும்படை படரக்காண்டந்
துன்னதி ரதர்களாதி தொடர்ந்திட விடிமுழக்க
மென்னவார்ப்பரித்துச்சீறி யெய்நதனர்களத்தின்மன்னே.

பொ + உரை.

புரூரவனும் களைதீர்ந்ததுதெரிந்த மந்திரியாகிய புத்திதீட்சண்ணியனும், பின்னாலே நின்ற சேனாதிபதிகளுடனே சதுரங்கசேனைகளும் வளைந்திடவும் அஸ்திரசஸ்திரங்களையுடைய அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர்கள் தொடர்ந்துவரவும் இடியிடிப்பதுபோலே வீரர்கள் கற்சித்து அதட்டிக்கொண்டு போர்க்களம்வந்து சேர்ந்தார்கள் - என்றவாறு. (உரு)

மொய்த்தமன்றளத்தை வன்னிமுகத்தவனேக்கிநுங்கோன்
கைத்திடபில்லாதானுங் களைக்கணம் வெல்வலென்னப்
புத்திகூர்மையனிராகுப்போல் வளைந்தனனேரெட்டு
மொய்த்திசையிமிழ்த்துச்சூரன் முடியிடத்துயமறுத்தான்.

## புரூரவசக்கிரவர்த்தி சூற்றுந்தீர்ந்த வத்தியாயம். (அஎ)

பொ + ரை.

நெருங்கிய புரூரவன் றனதுசேனைகளைப்பார்த்து அக்கினிமுகாசுரன் உங்கள்தலைவன்படைகளின் வலியில்லாதவனாயினான். இனியும்மைக்கண நேரத்தில் ஜெயிப்பேனென்று சொன்னசொல்லைக்கேட்ட புத்திதீக்ஷண்யன் இராகுக்கிரகத்தைப்போலே அசுரனைச்சுற்றிக்கொண்டு நெருங்கிய நாலுதிக்குகளையும் சேனைகளாற் கட்டிக்கொண்டு அவன்றேரிற் கட்டிய கொடியையறுத்துக்கீழேத்தள்ளினான் - என்றவாறு. (உசு)

குதையிடுமம்புதன்னைக் குணத்தொனிநாணிதன்னா
லுதையவல்லரக்கர் மேற்பட்டுருவியே மாயமற்றோர்
சிதையத்தண்டுகளாற்றாக்கித் தேரினையுடைத்துவன்னி
யிதையமுங்கலங்கப் பின்னுமெய்திடுஞ் சரங்கள்கண்டே.

பொழி + ரை.

வில்லையெடுத்துவளைத்து நாணேற்றி அம்புக்குதையில் கணையைவைத்து இழுத்துத்தெறித்து ஒலியுண்டாக்கிவிடுக்கவும் வலிய அசுரர்கள் சரீரத்திற்பட்டுருவியிறந்தார்கள் வேறுள்ள அசுரர்களுமிறந்துபோகும்படித்தண்டாயுதத்தினாலடித்து நொறுக்கித்தேர்களையும் உடைத்து அக்கினிமுகாசுரன் உள்ளமும் கலக்கங்கொள்ளும்படி இன்னமும் அனேகபாணங்களை வருஷித்தான். அதை அசுரன் பார்த்தான் - என்றவாறு. (உஎ)

அழற்கணைதொடுத்துவிட்டானரசனும் புனலான்மாய்த்தான்
விழற்பணிவிட்டான் சூரன்விலக்கினான் கலுழனான்மன்
முழக்கிடும்பிரமவாளி முடக்கினான் வேலானீக்கிக்
குழப்பியமண்ணீர்போலக் கொடுங்கணைப்புரிசைதைத்தான்

பொழி + ரை.

அசுரன் ஆக்நேயாஸ்திரம்விடவும் அரசன்அதை வாருணாஸ்திரத்தால் கொன்றும், சுருண்ட நாகாஸ்திரம்விடவும் அதை கருடாஸ்திரத்தால் விலக்கியும், பின்னர் பிரமாஸ்திரத்தை விடவும், அதை சத்தியாஸ்திரத்தால் விலக்கிக்குழைத்தசேற்றில் நீர்போலச்சரக்கூடுகட்டினான் - என்றவாறு.(உஅ)

மலையிற்பெய்மாரிபோல வல்லரக்கன்மேலேவுஞ்
சிலைவிடுங்கணைகளெட்டுத் திசையினுஞ்சிதறியோடத்
துலைவில்போர்செயுந்தை தேயன்றோடணைத்தட்டிவில்லாற்
றலையெவ்வைவெய்தான்வேந்தன் கொடுந்திரட்சேனைமாள.

போ + ரை.

மலைமேலே மழைவருஷித்ததுபோலேவலிமைபொருந்தியஅசுரன்மே ல் வில்லில்தொடுத்துவிடுகின்றபாணங்கள் அஷ்டதிக்கும்போய்ச் சிந்திப் போமாகவும். முடியாதசண்டைசெய்கின்ற அசுரன் தனது புஜங்களைத்த ட்டி வில்லினிடத்திற்கொத்தாகப்பாணங்களைத்தொடுத்துவிட்டான். அர சன் படைகளெல்லாம் இறந்துபோனதுகள் - எனறவாறு. (உகூ)

சேனைகண்மாயக்கண்ட செம்மன்மந்திரிபுழுங்கி
யானைமேலேறி வாளாலவுணனைக் கொய்யத்தீயன்
மோனைகாலத்தெழும்பும் முதல்வன்போற்றழலாயோங்கி
யேனையாய்ப்போர்செய்காலையிறைவன்வா ருணத்தான் மாய்
த்தான்

போ + ரை.

சைந்யங்கள் முடிந்தஉடனே புரூரவன் மந்திரியும், கோபித்து ஆனையி ன்மேலாரோகணித்துக்கத்தியினால் அசுரனை அறுத்தலும் அக்கொடியவன் ஆதிகாலத்தில் பிர்ம்ம விஷ்ணுக்களின் பொருட்டு உண்டாகியசிவபெருமா னாகிய அக்கினிமலைபோலே வளர்ந்து தானொருவனாய்ச்சண்டைசெய்தபோ து அரசன்கண்டு வாருணாஸ்திரத்தினால் அந்த மலையுருவைக் கொன்றுவிட் டான் - என்றவாறு. (௩0)

புனல்கொடுமாய்த்தானென்னப் பொருப்பினில் வந்தெதிர்
த்தான்
கனமிகுந்தண்டின்மொத்திக் காவலனின்றான் வெய்யோன்
கனமெனப்பொருதிவந்த கணத்தினிற்குரிசில்கண்டு
மனமலைந்தனிலப்பல்லம் வழுக்குபுமாய்த்தானன்றே.

போ + ரை.

வாருணாஸ்திரத்தினாற்கொன்றுவிட்டானென்று மலைபோலேவந்து ச ண்டைசெய்யக்கண்டு பாரமாகிய தண்டாயுதத்தினாலேயடித்துத்தகர்த்தகா லத்தில் கோடியவன் பின்னும் மேகம்போலேவந்து யுத்தஞ்செய்யவும் அர சன் அதுகண்டுக்ஷணநேரத்திற்குள்ளே செய்கின்ற மாயைக்கண்டு மனங்கல க்கமடைந்து பின்னும் வாயுவாஸ்திரத்தை விடுத்துக்கொன்றான் - எ + று. (௩௧)

மாய்ந்தவன்மற்றுந்தேர்மேல் வந்துமுன்னெதிர்க்கவண்ணல்
தீய்ந்திடுமெரியாற்றுக்கச் செத்தனன் பின்னணங்கா
யோய்ந்திடாக்கவலை செய்யவுற்றழைக்கரிந்துகொல்லச்
சாய்ந்துமுன்வடிவுகொண்டு தலையுநாற்கரமுமற்றான்.

போ + ரை.

இறந்துபோன அசுரன் மறுபடியும் தேர்மேற்கொண்டு வந்தெதிர்த்து ச்சண்டைசெய்யவும் சக்கரவர்த்தியும் எரிக்கின்ற ஆக்கினேயாஸ்திரத்தினு லேமோதவும் இறந்தான். பின்னும் மோகினிபோலே உருக்கொண்டு நீங் காத மனோதுக்கத்தையுண்டாக்கவும் அவனது மூக்கையரிந்து கொன்றவுட னே பின்னும் பழயதனது உருக்கொண்டுவந்து யுத்தஞ்செய்து அவன் இரு தலையும் நான்கு கைகளும் அற்றவனாயினன் - என்றவாறு. (கூஉ)

சோர்ந்திருவாயாற் சூரன்றொல்லேமகூடம்வைத்த
வார்ந்திடுமணங்கைத்தீண்ட மருவிலென்கரங்கள்சென்று
நேர்ந்துகண்டுயிரைமாய்ப்பல் யானெனுநிகழ்த்தல்கேட்ட
கூர்ந்தசிந்தையன்கடந்து குறுகினன் சசியைக்கண்டான்.

போ + ரை.

தளர்ச்சியடைந்தவனாகியிரண்டுவாயினாலும் ஏமகூட்டத்தில் வைத்தி ருக்கின்ற பேரழகையுடைய தெய்வஸ்திரீயை ஆலிங்கனஞ்செய்துகொள்கி ன்ற கைகளற்றவனாயினேன் ஆயினும் போய் அவளைக்கண்டுதான் என்னுயி ரைவிடுவேனென்று சொல்லிக்கொண்டழுவதைக்கேட்ட புத்திதீட்சண்ணி யன் உடனேஏமகூடத்திற்சென்றுஇந்திராணியைக்கண்டான் - என்றவாறு (கூகூ)

கண்டயிராணிதன்னைச் சூழ்ந்தகாவலரைப்போக்கி
விண்டுலகோருங்காண விண்முகிற்றுவசம்வீக்கிக்
கொண்டமர்க்களம்வந்துய்ப்பக் கொடியனுமொழிந்தானொ க்கி
வண்டுடர்கற்பகத்தின் மலர்மழை பொழிந்தார்வானோர்.

போ + ரை.

ஏமகூடத்திலிருந்த இந்திராணியைக்கண்டு வளைந்திருந்தகாவலர்களை விரட்டிவிட்டு மேகத்துவசத்தைக்கட்டிய தேர்மேலேற்றிக்கொண்டு போர் க்களத்தினிடத்தில் விஷ்ணுலோகத்திலுள்ளவர்களும் பார்க்கும்படிக்கொ ண்டுவந்து விடவும் அக்கினிமுகாசுரனும் அவளைக்கண்டு இறந்தனன். உட னே தேவர்கள் கற்பகப்பூமாரிபெய்தார்கள் - என்றவாறு. (கூச)

அமரர்கடாள்வான்பன்னி யமூன்முகன் மாயக்கண்டாள்
ஏமகணம் மற்றுஞ் சூரராவிகொண் டகல வீண்டிக்

குமரியி னினங்கண்மூளை குதட்டுவ பருந்து ஞாளி
சமரியிர் சிரங்க ளுள்ளத் தசை நெய்த்தோ ருண்ணக்கண்
டாள்.

போ + ரை.

தேவலோகத்தையாளுகின்ற இந்திரன் மனைவியானவள் அக்கினிமுகா சுரன் இறந்துபோனதையும் பார்த்தாள் எமதூதர்கள் அவன் சூரர்கள் உயிர்களைக்கொண்டதையும் நெருங்கிக்கொண்டு துர்க்கையின் பரிவாரங்களாகிய சாகினி, டாகினிகள் மண்டைமூளைகளை மென்றுதின்னவும் கழுகுநாய்கள் கூடியுத்தகளத்தில்விளங்குகின்ற தலைகள் துள்ளிக்குதிக்கவும் அதன்மாம்ஸங்களையும், இரத்தங்களையும் உண்டிருப்பதையும் கண்டார்கள் - எ + று. (கூரு)

அவ்விடம் விட்டப்பாற்சென் றரசனு யாசந்தீர்ந்துச்
செவ்விவிண் ணுலகஞ் செல்லுஞ்சிறகர்தேர் கொணர்தியெ
ன்ன
கவ்வுறுமதியுணர்ந்தோன் கவரிகொண்டணைய வந்தத்
திவ்விய விரதமேற்றி த்திவபதி யிருக்கை புக்கான்.

போ + ரை.

அந்தயுத்தகளத்தை நீங்கிப்பக்கத்திற்போய் இளைப்பாற்றிக்கொண்டு மங்களகரத்தையுடைய தேவலோகத்திற்செல்லுகின்ற இறக்கையுடைய தேரைக்கொண்டுவருவாயென்று சொன்னவுடனே பெருமைபொருந்தியபுத்தி தீட்சண்யன் பட்டணத்திற்போய்ப்பட்சரதத்தைக்கொண்டுவருதலும் அந்த ரதத்தின்மேலே இந்திராணியையேற்றிக்கொண்டு சுவர்க்கத்திற்குப்போயினன் - என்றவாறு. (கூசு)

தேவர்கண்முனிவர் வாழ்த்தத் தேவர்கோன் வெற்றிசூட்டி
மூவராலீயப்பெற்ற முத்தணிமாலைசாத்த
மாவெழிலரம்பை மாதர்மங்களம் பாடத்தேர்விட்
டோவியச்சாலைவைத்தா னுத்தமன்சசியைமன்னோ.

போ + ரை.

தேவர்களும், முனிவர்களும், ஆசீர்வாதம்பண்ணவும் தேவேந்திரன் ஜெயத்தையடைந்து பிர்ம்மவிஷ்ணுருத்திரர்களால் கொடுக்கப்பட்ட முத்து மாலையைப்பூட்டிப் பேரழகையுடைய அரம்பை முதலியதேவதாசிகள்தோத்திரங்கள்பாடவும் இந்திராணியைத் தேரைவிட்டிறங்கிச்சித்திரக்கூடத்தில் வைத்தனன் - என்றவாறு. (கூஎ)

வைத்தவன்றிரும்புங்காலை வளியதீயவுணர்க்காய்ந்த
வத்திவந்துற்றுத்தேசு மறிவையுமிழந்துமேனி
யொத்திடக் கண்டுமென்ன லும்பரைத் தொழலுமன்னர்
பித்தனைப்பூசைசெய்யிற் பிறந்தைவிட்டகதுமென்றார்.

போ + ரை.

இந்திராணியை இந்திரனிடத்தில் ஒப்புவித்துத்திரும்புங்காலையில் அசுரர்களைக்கொன்ற அத்திவந்துசூழ்ந்துகொண்டது அதனால்காந்தியும், புத்தியையும் போக்கிச்சரீரத்தை வந்தடைந்ததைக்கண்ட புரூரவன் தேவர்களை நமஸ்கரித்து இது நிவாரணமாகும்வழியைக்கேட்டலும் தேவர்கள் பரமசிவனைப்பூசித்தால் இப்பாவம் நீங்குமென்று சொன்னார் - என்றவாறு. (௫அ)

அந்தநன்மொழிவினையகொற்றவ னறைவானெனன்புந்
தந்தருகமும்புனைந்தோன் சார்வரைபோதல்கூடா
தெந்தவாயேநீற்றிருமென்றிட மௌலிபூண்டோர்
தந்திகளெட்டுந்தாங்குந் தரணியிலருணையென்றார்.

போ + ரை.

அந்தநல்லவார்த்தையைக்கேட்ட அரசன்சொல்லுவான் ஓ தேவர்களே! எலும்பையும பாம்பையும் ஆபரணமாக வணிந்த சிவபெருமான் வசிக்குங் கைலைக்குப்போகக்கூடாது வேறே எந்த இடத்தில்போனால் தீருமென்றுகேட்டலும் கிரீடாதிபதிகளாகிய தேவர்கள் புரூரவாவைப்பார்த்து ஓ அரசனே அஷ்டகஜங்களாற்றாங்கிய இந்த பூமியில் அருணைசலஸ்தலந்தீர்க்குமென்று சொன்னார்கள் - என்றவாறு. (௫௯)

அக்கணம்புவியைநோக்கி யரசன்றேர் வரும்போதாங்கே
யக்கினிமுகனைச்செற்ற வத்திவந்ததுக்குமென்னப்
பைக்குதிரைத்தேர்ப்பானு மேற்றிசைப்படர்ந்துச்சென்று
மைக்கடல்செக்கர்வானம் பாவம்போல்வளைந்தவன்றே [ன்

போ + ரை.

அந்தக்ஷணமே பூலோகத்தில் இறங்கி அரசன்றேர் வருங்காலத்தில் அவ்விடத்தில் அக்கினிமுகாசுரனைச் சங்கரித்த ஹத்திநம்மையும் அடிக்குமென்று பச்சைக்குதிரைபூட்டிய தேரையுடைய சூரியனும் மேற்குத்திக்கில் நடந்து கடலையடைதலும் அவ்வசுரன்பாவஞ்சூழ்ந்ததுபோலச் செவ்வானம்பூத்தது - என்றவாறு. (௬0)

யன்னனைப்பற்றும்பாவம் மற்றெங்குஞ்சூழ்வபோலத
தென்னிலமெங்குமந்தகாரமாய்ச் செறியவந்த
வன்னவன்வனவிபூதிமலைந் தென்புவாயிற்கவ்வி
மின்னயன்சிரம்பெற்றோன்வாயினன் முற்றுமம்மா.

பொ + ரை.

அரசனைப்பிடித்துக்கொண்ட ஹத்தியானது எவ்விடத்தும் பரந்தது போலே தெட்சிணபூமியெங்கும் இருள்வந்து சூழ்ந்துகொள்ளவும் வருகின்ற அந்த அரசன் சுடலைச்சாம்பலைப்பூசிக்கொண்டு எலும்புகளைவாயிற்கவ்விக்கொண்டு முன்காலத்தில்பிரமன்றலையைக்கிள்ளியபரமேசுவரர்போல் எல்லாவற்றிலுமானான் - என்றவாறு. (சக)

பித்தனாய்க்கண்டுபாகன் பெரும்பதியடைந்திச்செய்தி
புத்திகூர்மைக்குரைத்தபோதவ னரசைக்கண்டுச்
சித்திரத்தேரில்வைத்துச் சிலருடன் றுயரத்தோடு
முத்தனைப்பூசைசெய்வா னருணைக்குவிடுத்தானன்றே.

பொ + ரை.

அரசனைப்பயித்தியங் கொண்டவனாகப்பார்த்துத் தேர்ப்பாகன் இந்திரபுரிக்குப்போய் நடந்த வர்த்தமானங்களைத் தெரியப்படுத்தவும் அது கேட்ட புத்திதீட்சண்ணியன் உடனே புறப்பட்டுப்போய் அலங்கார ரதத்தில் அரசனைக்கணடேற்றிக்கொண்டு சில பேர்களுடனே துக்கத்தோடு சிவபெமானைப் பூசைசெய்ய உத்தேசித்து அருணாசலத்திற்குச் செல்லவிடுத்தான் - என்றவாறு. (சஉ)

மன்னனைமுன்னாளாண்டோர் வானுடுவாகிக்கண்ணுற்
றென்னவாகாயம்பூத்த விதுவைகறையாங்காலந்
தன்னமிலென்றுகோழி சகுந்தமுங்கரைவகேட்டுச்
சன்னுவின்கன்னம்வந்த சாநவிநதியைக்கண்டார்.

பொழி + ரை.

இந்தப் புரூரவாவை இவன்முன் அரசாண்டவர்கள் புண்யவடிவாகிய நட்சத்திரங்களாகிப் பார்க்கவந்தது போலே ஆகாயத்திற் பூத்ததுசன் விடியுற்காலமிதுவா மென்று கோழியும், சிறுமைநீங்கியதென்று பட்சிகளும் கூப்பிடுகின்றதுகளையும் கேட்டுக்கொண்டு சன்னுமகாரிஷியின் காதிலுண்டாகிய சாநவிநதியைக்கண்டான் - என்றவாறு. (சங)

கங்கையிலாடிமன்னன் கங்கையாற்கூப்பிச்சேந்தற்
கங்கையிலளித்தாளைப்பாகங்கையில் வைத்தோயிவ்வி
கங்கையிலாயம்போல கங்கையங்கனிசெய்யென்னா
கங்கையென்றுடன்வானாற்றின் கங்கையோடத்தாற்சென்
றான்.

பொ + ரை.

புரூரவன் கங்காநதியைத்தரிசித்து ஸ்நானஞ்செய்து தலைமேல் இரு கைகளையுங்கூப்பிக்கொண்டு ஸ்கந்தருக்கு அவ்விடத்தில் சத்தியைத்தந்தருளிய விசாலாட்சியை வாமபாகத்தில் நேர்மையாகவைத்தவனே இவ்வுலகில் கைலாசம்போலே உள்ளங்கை நெல்லிக்கனியாகச்செய்தருள் எனதுபாவங்களைநீக்குக என்றுதுதித்து உடனே ஆகாயத்திலுண்டாகிய கெங்கையின் கரையை ஓடத்தால் தாண்டிப்போய்ச்சேர்ந்தான் - என்றவாறு. (சச)

வேறு.

ஓராழிகொண்டுலக மாள்வோன்கொற்ற
முற்றசுரருயிர்மாய்த்த குற்றந்தீர்ப்பான்
போராழிபெற்றவன்கட் பிண்டங்கொள்ளப்
பொறிந்தவெந்திரத்தவுணற் பிளந்தபாதன்
ஆராழியருளிடம்யா தென்றுதேட
வகோரவுருக்கொண்டதிருத் தலையூராகுஞ்
சீராழிபுனைகரனே யெனச்சொல்வான்போற்
செங்கதிரோ னெழுந்தனன்கீட் டிசையினன்றே.

பொழி + ரை.

ஒருசக்கரத்தைக்கொண்டு உலகமுழுதுமாளுகின்ற புரூரவன்சயத்தையடைந்தவனாகி அசுரர்களைக்கொன்ற பழியைத்தீர்ப்பதற்கு யுத்தத்தை முடிக்கின்ற சக்கராயுதத்தையடைந்த மஹாவிஷ்ணுவின் கண்ணைப்பிச்சையாகக்கொள்வதற்குப்பூமியிலே எழுதிய சக்கிரத்தினாலே சலந்தராசுரனை இருகூறாய்ப்பிளந்தபாதங்களையுடைய சிவபிரான் கருணைக்கடலாய் அமர்ந்ததலம் ஏதுவென்று தேடுகின்றவனைச் சிறந்த விலச்சினையணிந்த கைகளையுடையவனே! அந்தப்பாபநீக்கும்தலம் அகோரவடிவுகொண்ட திருத்தலையூராகுமென்று சொல்லவந்தவன்போலே சூரியன் கிழக்குதிக்கிலுதயமானான் (என்றவாறு) (சரு)

கடிகையிலொசனைகோடி செல்வான்பானு
காவலனோர்கடிகையிற்கா வதங்கள்செல்வான்
கொடிகளுயர்கோபுரஞ்சூழ் மதிலுங்கோட்டை
கொத்தளமுங்குலவுபதி பலகடந்து
தடிகள்கடனுசதுரங்கப் படைகள்வாய்ந்த
தனிப்புரியுந் தடம்பொழிலுந்தாவினூாந
வடிகளுறைமடம்பெருமா னூர்ந்ததேச
மனைத்துங்கண்டரசருட னகன்றானன்றே.

பொழிப்புரை.

ஒருநாழிகைக்குள்ளே கோடியோசனைசொல்லுவான் சூரியன் அரசனும் ஒருநாழிகையிலே ஒருகாதவழி செல்வானாகித் துவசங்கள் கட்டிய உயர்ந்த கோபுரஞ்சூழ்ந்த மதில்களும், கோட்டை கொத்தளங்களும், பலபட்டணங்களும், ஆற்றங்கரைகளும், அரியவழிகளும், இரதகெஜதுரகபதாதிகள் பொருந்திய மேலான பட்டணமும்தடாகமும், பூஞ்சோலையும், தாண்டிமெஞ்ஞானமுனிவர்கள்வசிக்கின்ற ஸ்தலமும், சிவபெருமான் எழுந்தருளியஸ்தலங்கள் முழுதும் தெரிசித்துப்பலதேசத்தரசருடனேதாண்டிச்சென்றான் என்றவாறு. (௬௬)

விசும்பெழுந்து விசும்புபடர்வரையின் சாரல்
விரவிவினை புரிகுறவர் குழாமுங்கோடும்
அசும்புமணி கொழியாறும் பசுத்தாய்முல்லை
யவர்தொழிலும் பரலையிரேரமரிக் காற்றும்
பிசங்கலிலாதிடுபலியும் பரதர்மேவிப்
பெருநீரினலைமயிலை பிடித்தகண்ணி
யசங்குசுவல் சுமந்தெடுஉத் தசைகளுண்ண
வரதனமும் பல்பொருளும் மாற்றல்கண்டான்.

பொழிப்புரை.

மேகங்கள் ஆகாயத்திற் சஞ்சரிப்பதுபோலச்சூழ்கின்ற மலைகளையும், அந்தமலைச்சாரலிலே குடியிருந்து தங்கள்தொழிலைச்செய்கின்ற குரவர்கூட்டங்களையும், யானைக்கொம்புகளையும், வழுவழுப்பாகியமுத்துகளை வாரிவருகின்ற நதிகளையும், பசுக்கள்கூடிய முல்லைநிலத்திடையர்செய்கின்ற தொழிலையும், பாலைநிலமாக்கள் துர்க்காதேவிக்குக்கலங்காதஉள்ளத்தவராய்ச்செய்கின்றபலியையும், நெய்தனிலமாக்கள் சமுத்திரத்திற்சென்று லோதியடிக்

கும் பெரியமீன்களைப்பிடித்து வலைகளசையும்படித்தோளிற்சுமந்து பாகஞ் செய்தெடுத்த புலால்களையுண்டிருப்பதைபும், பலவகை ரெற்றினங்களையும் அநேகசரக்குகளை விற்பனைசெய்வதையும் புரூரவன் பார்த்துக்கொண்டுசெ ன்ருன் - என்றவாறு. (௬௭)

புன்னைமடிமலரெடுத்து மேற்றிசைக்கோற்
போற்றியதுகடந்துசெலும்போது செந்நெல்
கன்னல்விளைபண்ணைகளிற் கடைஞர்போகி
கருதிவிழாநடாத்துவதுங் கண்டுபோதந்
தன்னையுமைக்கரைப்பாகங் கொடுததவண்ண
லமரண்ணுமலைநோக்கி யாங்கடுத்திட்
டென்னையுனக் கடிமைகொள்சோ ணசைலேசா
வென்றிரந்திந்திரப்புனலா டினன்கோனம்மா.

போ + ரை.

புன்னைமலரினுலும், தாழைமலரினுலும், சமுத்திரராஜனைப்பூசைசெய்து நெய்தனிலங்கள் எல்லாங்கடந்துபோகும்போது சம்பாநெற்களும், செங்கரும்புகளும், விளைகின்ற மருதநிலங்களிலே பள்ளர்கள் இந்திரனையுத்தேசித்துத்திருவிழாச்செய்வதையும் பார்த்துக்கொண்டேநடந்துபோய் உலகமாதாவாகிய பார்வதிதேவியாருக்கு அர்த்தபாகங்கொடுத்தருளியபெருமான் வசிக்கின்ற திருவண்ணுமலையைத்தெரிசித்து அம்மலையின்பக்கத்திற்சென்று என்னையுமக்கு அடியவனுகக்கொள்ளவேண்டும்சோணுசைலேசுவரரேயென்று பிரார்த்தித்து புரூரவன் இந்திரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்தான் என்றவாறு. (௬௮)

வேறு.

கம்மலர்த்தடமாடியங்கோயிலுட் காட்டுஞ்சோதியருணகிரீசனைப்
பொம்மலன்பின்வணங்கித்துதித்திடும் போதின்வான்மொழியிம்மலைசூழெனச்
செம்மல்கேட்டயன்கேசவன் காணுருச்செஞ்சுடர்மலை தன்னைவலம்வர
மும்மலங்களகற்றியருடரும் மூர்த்திமால்விடையேறியெதிர்ந்தனன்.

போ + ரை.

பின்னும் பிர்ம்மதீர்த்தத்திலும் ஸ்நாநஞ்செய்து அழகிய கோயிலுக்குத் தோன்றுகின்ற பரஞ்சோதியாகிய யருணசைலேசுவரரை மிகுந்த உள்ள

ன்போடு நமஸ்கரித்து ஸ்துத்தியஞ்செய்கின்றகாலத்தில் ஆகாசவாக்கு இம்மலையைவலஞ்செய்யென்று சொல்லக்கேட்ட புரூரவன் பிர்ம்ம விஷ்ணுக்கள் காணாதசோணசலேசமலையைப்பிரதட்சணஞ்செய்துவருங்காலையில் ஆணவகாமியமாயைகளை நீக்கித்திருவருளைச்செய்கின்ற சிவபெருமான் விருஷபாருடராயெதிர்வந்தருளினார் - என்றவாறு. (சக)

மங்கைபாகனை திருறமனனவன் வண்கரஞ்சிரம்வைத்துத்
தொழுதடிப்
பங்கயத்திற்பணிந்துவிழுந்துமுன் பத்தியாய்ப்பரஞ்சோதி
யைச்சுற்றியே
செங்கரம்விரித்தேந்திச்செய் குற்றங்கடீர்ப்பதுங்கடனே
யென்று செப்பலுங்
கங்கைவேணியன்சீரிட மாத்தலங்காணிற் றீருமென்றே
மறைந்தானரோ.

பொ + ரை.

பார்வதிஸமேதனைப்பிரத்தியட்சமானகாலத்தில் புரூரவன் தலையிற் கைகளைக்கூப்பி நமஸ்கரித்துத்தாமரை மலர்போலுந் திருவடிகளிற் பணிந்து அஷ்டாங்கத்தைமுறையேசெய்து சந்நிதானத்தில் பத்தியுடனே பரஞ்சோதிர் மயனை பிரதட்சணம்செய்து தன்இரண்டுகைகளையும் விரித்தேந்திக்கொண்டு நான்செய்கின்ற அபராதகுற்றங்களைத்தீர்த்துக்கிருபைசெய்வது உமதுபாரமென்று புரூரவன் கேட்டுக்கொண்டவுடனே கங்காதேவியைச்சடையிலணிந்த சிவபெருமான் ஸ்ரீசீர்ஷம் என்னும் ஸ்தலத்தையடைந்து தெரிசிக்கில் குற்றம் நீங்குமென்று சொல்லிமறைந்தருளினார் - என்றவாறு. (கூ)

வேறு.

என்றனன் கண்ணிற் காணாணிருந்தமன்னவன்றென்றிக்கிற்
சென்றுதேன்கூடுங்கோடுந் திரண்மணி கொழிக்குமையாற்
றின்றிறைப்புனலின் மூழ்கித்தேம்பொழில் சூழ்ந்தமுல்லை
துன்றுசீர்த்தலையூர் மன்னிச்சோதியைக்கண்ணிற்கண்டான்

பொ + ரை.

என்றுமறைந்தவரைக்கண்ணிற்காணாதவனாகிய புரூரவன் தெட்சிணதிக்கை நாடிவருங்காலத்தில் தேன்கூட்டையும், ஆனைக்கொம்புகளையும், கூட்டமாகிய முத்துக்களையும், வீசிகின்ற ஐயாற்றினருகில் வந்து அந்த அலை

களையுடைய தீர்த்தத்தில் ஸ்நாநம்பண்ணித் தேன் சொரிகின்ற பூஞ்சோலைகளையுடைய காடுகள் நெருங்கிய திருத்தலைபூரென்னும் திவ்வியஸ்தலத்தில் வந்து சேர்ந்து ஜோதிர்மயராகிய ஸப்தரிஷீசுவரரைத் தெரிசித்தான். என்றவாறு. (௬௧)

வேறு.

கண்டமாத்திரை யிற்கண்டந்தேறும
கண்டமாத்திரை காணுமாலாலத்தைக
கண்டமாத்திரைத் தோனங்கசனுதற்
கண்டமாத்திரை போற்றீதகன்றதே.

பொழி + ரை.

தெரிசித்தமாத்திரத்திலே மதனஞ்செய்யவும் பெருகிய அகண்டமாகிய பெரிய சமுத்திரத்தில் தோன்றிய ஆலாலவிஷத்தைக் கழுத்தினளவதாகச் சுருக்கிக்கொண்ட சிவபெருமான் நெற்றிக்கண்ணில் ஆகிய மன்மதனுகிய வைக்கோற்றிரைபோலே அரசன்குற்ற நீங்கிற்று. தம்அசை. எ—று. (௬௨)

பூனறுங்கடிவீசுறும் பொன்னிக்கட்
கானெருங்கும் மகாரணியந்தனின்
மீனெருங்கய மேவிருடீசனைக்
கோனுணர்ந்து குணமடைந்தானரோ.

பொழி + ரை.

மலர்களின் நல்லவாசனை வீசுகின்ற காவேரி சூழ்ந்த சோழநாட்டினிடத்தில் காட்டாறுகள் நெருங்கிய பெரிய ஆரணியத்தில் மத்ஸயங்கள் சேர்ந்த அகோரதீர்த்தக்கரையில் எழுந்தருளிய ஸத்தரிஷிசுவரரைப் புரூரவன் ஆராய்ந்து தெரிந்து மேன்மையைப்பெற்றான். எ—று. (௬௩)

செம்மலர்க்கயத் தீர்த்தத்தினுடிமால்
செம்மலங்கண் ணருச்சித்தசேவடி
செம்மவாங்குதிரிகர ணத்தொடுஞ்
செம்மல்போற்றித்தொழுதனன் செங்கையால்.

பொழி + ரை.

செவ்வியமலர்களையுடைய அகோரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மகாவிஷ்ணுவானவர் புஷ்பமாக அழகிய கண்ணையருச்சனைசேய்த திருவடிக

ளைப் புரூரவாமெய், வாக்கு, காயம் என்ற திரிகரணங்களோடும் உள்ளூரத் தேம்புதல்கொண்டு தோத்திரஞ்செய்து தனது கையாலர்ச்சனைசெய்தான். என்றவாறு. (ருச)

## வேறு.

பொழுததின்விடைமேலேறிப் புன்சடைமதியுங்கைக்கொ
மழுவொடுமுமையாளோடும் வந்தனன்கைலையாளி [ண்
பருதிலாக்கோன்கண்டஞ்சிப் பரஞ்சுடரொளியே விண்
ணோர்
தொழுதிடுமபொருளே முக்கட்சோதியே யெனத்துதித்
தான்.

பொழி + ரை.

அருச்சிக்கின்றகாலத்திலே கைலாசபதியானவர்விருஷபாரூடராகிமெல்லியசடையில் பாலசந்திரனோடும், கையில்வைத்த பரசுவோடும், இடப்பாகத்தில் வைத்த பார்வதியோடும் பிரத்தியட்சமடைந்தார் குற்றமில்லாத புரூரவன் தெரிசித்துப்பயந்தவனாகிப்பரஞ்சோதி ஸ்வரூபியே! தேவகோடிகளால் வந்திக்கப்படுகின்ற உண்மையானவனே! மூன்றுகண்களையுடைய பிரகாசனே! யென்றிவ்வாறு தோத்திரஞ்செய்தான் - என்றவாறு. (ருரு)

நித்தனே நிமலா கண்கொ ணெற்றியாய் முனியேழ் வர்க்கு
சித்தனே தலையூர் வந்த தேவனே யெமது சீவன் [ஞ்
முத்தனே யயனை ரைந்து முகத்தொரு தலையைக் கிள்ளும்
பித்தனே முதலே நின்றன் பேரொலிப் பதங்கண் டேனல்.

பொ + ரை.

அழிவில்லாதவனே சுத்தஸ்வரூபனே நெற்றியிற்கண்படைத்தவனே ஸப்தரிஷிகளும் அடைகின்ற சித்தியையுடையவனே திருத்தலையூர்த்தலத்தின்கணெழுந்தருளியவனே அடியேங்களுடைய மோட்சஸ்வரூபியே பிர்ம்மதேவன் ஐந்துமுகங்களில் ஒருதலையை நகத்தினாற்கிள்ளிய அதீதனே ஆதிமூலமே உம்முடைய திவ்யதாண்டவச்சிலம்பொசையையுடைய திருவடிகளைக்கண்டு தெரிசித்தேன் - என்றவாறு. (ருசு)

ஆதியே யமரர் போற்று மற்புத வடிவே ஞானச்
சோதியே யயன்மா றேடுஞ் சுடரொளி விளக்கே மெய்யிற்
பூதியேய் நம்ச்சி வாய புண்ணிய பூண்மு லைச்சிப்
பாதியே பரமே யுன்றன் பாதங்கள் கண்டே னென்றான்.

போ + ரை.

உலகங்களுக்கெல்லாம் ஆதியானவனே தேவர்கள் துதிக்கின்ற ஸ்வரூபியே போதரூபமாகிய ஒளியே பிரம்ம விஷ்ணுக்கள் தேடுகின்ற அக்கினி மலையானவனே திருமேனியில் விபூதியணிந்தவனே பஞ்சாசட்சரத்தையுடையவனே புண்ணியச்சொரூபனே ஆபரணங்களணிந்த தனங்களையுடைய பார்வதிதேவியார் அமர்ந்த பாதியையுடையவனே உயர்ந்தவனே உம்முடைய திருவடிகளைத்தெரிசனஞ்செய்தனன் என்றான் - என்றவாறு. (௩எ)

மன்னனிவ் வாறு போற்ற வான்மலர் மாரி பெய்யக்
கின்னரர் வீணை வல்லோர் கீதமார்த் தியம்மு ழக்க
மின்னிடை மடந்தை பாகன் மிகத்தொழு மவனை நோக்கி
யென்னரும் பணிசெய் வாயென் றேகிவிண் மறைந்தா
[னன்றே.

பொழி + ரை.

புரூரவச்சக்கிரவர்த்தி யிந்தவிதம்தோத்திரஞ்செய்யவும், ஆகாசத்திற் புஷ்பவருஷம் வருஷித்கவும், கின்னரர்களும், கந்தருவர்களும், கானங்களைச்செய்யவும், துந்துபி முழங்கவும், மின்னலைப்போலுமிடையையுடைய பார்வதிதேவியைப்பாகத்தில் வைத்த சிவபெருமானும், அதிகமாகத்தோத்திரஞ்செய்து வழிபடுகின்ற அவனைத்திருக்கண்சாத்தி ஒ அரசே! எனது திருப்பணிகளைச்செய்வாயென்றுசொல்லி ஆகாயத்திற்சென்று மறைந்தருளினார் என்றவாறு. (௩அ)

அரசனு மதன்பி னங்க ணழற்குண்டந் தன்னிற் றோய்ந்து
கரணங்க ளடக்கிப் பூசை கைகளாற் புரிந்து தாழ்ந்தே
யிரதியோ டிருக்கு நாளி லெண்ணில்யா கஞ்செய் சோணாட்
டரசெனுங்கோழி வேந்த னுழியோற் றொழுதி னைந்தான்.

போ + ரை.

சிவபெருமான் மறைந்தருளியமாத்திரத்தில் அரசன் இரங்கிப்பின்னர் அவ்விடத்தில் அகோரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து திரிகரணசுத்தத்துடன் பூசையைத்தன்கைகளாற்செய்து நமஸ்கரித்து ஆசைப்பெருக்கத்துடனே வசித்திருக்குங்காலத்தில் பலயாகஞ்செய்பவனாகிச் சோழதேசத்திற்கு அரசனென்றுசொல்கின்ற உறையூரிலிருந்து அரசாளுகின்ற சோழமகாராசன் இந்த புரூரவசக்கிரவர்த்தியைக்கண்டு வணங்கவேண்டுமென்றுநினைத்தான் - என்றவாறு. (௩கூ)

வரிபுலிக் கொடித்தே ரேறி வாகையா ரந்தோ டாங்கிப்
பரிகரி பரிச னந்தேர் பல்பணி பொன்னுங் கொண்டோர்
பருதிமன் னவன்ம ருங்குப் படர்ந்துவாய் புதைத்துத்
துங்கன்
புரிபணி யென்னை யென்றான் புரூரவன் புகல்கின் றானல்.

பொழிப்புரை.

காணவேண்டுமென்று நினைத்தபடியே புள்ளிகளையுடையபுலிக்கொடி கட்டிய தேரிலேறி வெற்றிமாலைகளைதோளிலணிந்து குதிரை, யானை, காலாள், இரதங்களுடன் அனேக ஆபரணமும் சுவர்ணமும் எடுத்துக்கொண்டொருசக்கிராதிபதியாகிய புரூரவசக்கிரவர்த்தியின் பக்கத்திற்சென்று உததுங்கச்சோழமஹாராஜன் நான்செய்யும் காரியம் என்னவென்றுகேழ்க்கப் புரூரவன் சொல்லுவான் - என்றவாறு. (சும)

அசுரரை யொறுத்த குற்ற மகற்றுஞ்சத் திருடீ சர்க்கு
வசதியொன் றிழைத்தி யென்ன வக்கணந் திருப்ப ணிக்கண்
ணசையொடு மரனா கோட்ட நாடிசசிற் பரின மைப்பான்
இசைபல மாக்க டம்மை யேவினான் வளவ னம்மா.

பொழிப்புரை.

அசுராதிகளைக்கொன்ற பழியைத்தீர்த்தருளிய ஸப்தரிஷீசுவரருக்கு வாஸஸ்தானம் ஒன்றுசெய்வாயென்றுசொல்லியதட்சணத்திலே சிவாலயப் பிரதிஷ்டையிற்பேராசையுடனே சிவபெருமானது கோயிற்செய்யுமிடத் தைச்சிற்பர்களால் ஆராய்ந்துசெய்ய அமைந்த அநேகம் ஆள்களை அனுப்பினான் சோழராஜன் - என்றவாறு. (சுக)

திகிரிமன் னவனும் போந்த செய்திதென் னவனுங் கேட்
டுகிற்சுருத்தோமே லேறித்துங்கவேம் பின்றார் பூண்டு [டுத்
நகிற்படு சுணங்கு மாதர் நாற்றிசைக் கவரி வீச
மகிபதி முன்னா வநது வன்கழல் பணிந்தா னன்றே.

பொழிப்புரை.

சக்கிரவர்த்தி தன் பட்டணத்திலிருந்து புறப்பட்டு இவ்விடத்தில் வந்ததில் நடந்த சமாச்சாரங்களைக்கேட்டுப்பாண்டியமகாராஜனும் மீனக்கொடிகட்டிய தேர்மேலேறி வேப்பமாலைதரித்து தேமல்பூத்தஸ்தாங்களையுடைஸ்திரீகள் நான்குதிக்குகளி...றன் பா...கவரிகள் வீசவும் புரூரவச்சக்கிர

வர்த்தி சந்நிதானத்தில் வந்து அவனது வீரகண்டையணிந்த பாதங்களை நம ஸ்கரித்தான் - என்றவாறு. (௬௨)

மாறனை நோக்கிச் செம்மன் மலர்த்தட மமைத்தி யென் று
கூறலும் பொதிய வெற்பன் குயிற்றுவா னமைந்தா னாக
வேறுசூழ் கொல்லி வெற்பனிதுவறிந் திறைவற் காண்பான்
றுறுபூம் பனைத்தார் வில்லிற் சார்கொடித் தேர்மேற்சென்
[றான்.

போ + ரை.

காணவந்த பாண்டிய ராஜனைப்பார்த்துப் புரூரவன் நீ இந்த புட்பங்கள் நிறைந்த அகோரத் தடாகத்தைக் கட்டுவாயென்று சொன்ன சொல்த் தலைமேல் அணிந்தவனாய்த் தடாகத்திருப்பணி செய்ய ஆரம்பிவித்தான் மான்கள் சூழ்ந்த கொல்லி மலையையுடைய சேரமகாராஜன் சக்கரவர்த்தியைப் பார்ப்பதற்குக் குலைகளையுடைய அழகிய பனைமாலையும் விற்கொடியும் பிடித்துஇரதத்தின் மேலேறிப்போனான் - என்றவாறு. (௬௩)

கன்னியர் நடஞ்செய் மாடக் கருவூர்மன் கோவைக் கண்டு
சென்னியால் வணங்கி நிற்கச் சேண்டோடு மெயில்வ
[ளைப்பா
யென்னலும் பொன்னை யள்ளிப் பொருனையோ னியற்று
வித்தான்
பொன்னிவை யைக்கோன் றமும் பொலிவுறப் பணிசெய்
[தாரால்.

போ + ரை.

ஸ்திரீகள் நாட்டியஞ் செய்கின்ற உபரிகை சூழ்ந்த கருவூர்க்கரசனாகிய சேரராஜன் புரூரவனை வந்துகண்டு சிரசு கீழ்ப்பட நமஸ்கரித்து நின்ற அவனை சக்கிரவர்த்தி நீ நமது பெருமானது மதிலைக்கட்டுவா யென்றுசொல்லிய ஆக்ஞையின் படி அநேகம் பொருளை வாரிக்கொடுத்து தாம்பரபரணி நதியையுடையவன் திருப்பணியை முற்றுவித்தான் காவேரி நாட்டினையுடைய சோழனும் வையையாற்றையுடைய பாண்டியனும் ஆலயத்தையும் தடாகத்தையும் அமைத்தார்கள் - என்றவாறு. (௬௪)

ஆறிலொன் றிறைப்புரூர வரசரே றமைக்க முன்னங்
கூறிய வாறே யீசன் கோயிலுங் குளமுங் குன்று
வாறு நல் விளக்கங் கூர வைம்முகத் தகோர மாகி
வீறுசேர்த் தலையூர் ஞான்றுந் தழைந்திட விளைத்தா ரன்றே.

போ + ரை.

ஆறிலொருபங்கு கப்பம்வாங்கி அரசுசெலுத்துகின்ற புரூரவச்சக்கிரவர்த்தி கட்டளையிட்டபடி சேரசோழபாண்டியர்களும், ஸப்தரிஷீசுவரர்திருக்கோயிலும் தடாகமும் மதிள்களும் குறைவில்லாதநதியும் மேம்பாடுபொருந்தவும் ஈசன் பஞ்சமுகங்களில் அகோரமுகத்தலமாகி விளங்குகின்ற திருத்தலையூர் எந்தக்காலத்தும் செழித்திருக்கும்படி உண்டாக்கினார்கள் எ + று. (சுரு)

கொத்திருங் கருணை பொங்குங் குங்குமாம் பிகையா ளோ
சத்திரு டீசர் சாரி தலையூரின் மாட வீதி [டுஞ்
நித்தமும் பக்கம் மாத நிறைந்தவாண் டினிலு மோயாச்
சத்தமுந் திருவி ழாவுந் தரணியோர் போற்றக் கொள்வார்.

போ + ரை.

பிழம்பாகிய அழகிய கிருபைபெருகிய குங்குமாம்பிகைத்தேவியுடனே ஸப்தரிஷீசுவரர் திருத்தலையூரென்னுந்தலத்தினது உபரிகைகளையுடைய வீதியில் பிரதட்சணமாகிய உலாப்போதலை நித்தியமும் பட்சமும் மாஸமும் பூர்ணமடைந்த வருஷமும் தவறாமல் மங்களவாத்தியகோஷமும் பிர்ம்மோத்ஸவமும் பூலோகத்தில் யாவர்களுங்கொண்டாடும்படிநடத்திக்கொள்ளுவார் - என்றவாறு. (சுசு)

கொள்ளுமப் பதியிற் செம்மல் கோயிலுங் குளமும் பாகப்
பள்ளியும் மலர்ப்பூங் காவும் பரவுபட் டணத்தி லேதன்
வள்ளல்சத் திருடி யீசன் மலர்ப்பதந் தொழுதா நந்த
வெள்ளமும் பெருக வங்கண் வீற்றிருந் திட்ட காலை.

போ + ரை.

உத்ஸவங்கள் நடக்கின்ற அந்தத்திருத்தலையூர்த்தலத்திலே புரூரவன் திருக்கோவிலும், தடாகமும், திருமடைப்பள்ளியும், பூஞ்சோலையும், பரவிய நகரத்தில் தனது பிரபுவாகிய ஸப்தரிஷீசுவரர் மலர்போன்ற திருவடிகளைச்சேவைசெய்துகொண்டு ஆநந்தக்கடலிற்படிந்து அவ்விடத்தில்வசித்துக்கொண்டுவருங்காலத்தில் - என்றவாறு. (சுஎ)

ஆழிசூழ் புவியின் மன்ன னகோரலிங் கேசற் பேணிப்
பூழிசேர் மருதம் மேய பொழிற்றிருத் தலையூர்க் கோயில்
பாழியு மமைத்து வாழும் பரிசுகேட் டெண்ணேழ் தேயச்
சூழிமால் யானை வேந்தர் துன்னினர் முன்ன ரம்மா.

போ + ரை.

கடல்சூழ்ந்தபூமிக்கு ஓரரசனாகிய புரூரவன் அகோரலிங்கமூர்த்தியையு பாசித்துக்கொண்டு சேறுசெய்கின்ற மருதநிலங்கள் சேர்ந்த பூஞ்சோலைகளை யுமுடைய திருத்தலையூர்த்தலத்தில் ஆலயம், தடாகமும், திருப்பணிகளும் செய்துவசிக்கின்றதைக்கேழ்விப்பட்டு ஐம்பத்தாறு தேசங்களிலும் உள்ள நெற்றிப்பட்டத்தையணிந்த பெரியயானைகளையுடைய அரசர்கள் சக்கிரவர்த்தி சமுகத்திற்குவந்து நெருங்கினார்கள் - என்றவாறு. (௬௮)

வேறு.

அங்கங்கலிங் கங்கன்னட மருணங்குரு கவந்தி
வங்கம்யவ னம்மாந்திரம் மகதம்மலை யாளம்
கொங்கம்புகந் தரம்பாண்டியங் குலிந்தங்காசி மீரம்
தெங்கம்புலிந் தம்பல்லவஞ் சீனங்குட கமுமே.

போ + ரை. வெளிப்படை.

அங்கதேசம் முதலானவர்களும் வந்து சேர்ந்தார்கள். எ—று. (௬௯)

கருசங்கே ரளம்மாளவங் காந்தாரம்ம ராடம்
பெருஞ்சிங்களங் கொல்வஞ்சூர சேனம்பெறி லாடம்
இருங்குந்தள நேபாளமோ டிலகுஞ்சோ னகமும்
அருங்கூர்ச்சரங் காசந்திரா விடமங்கிரா டமுமே.

போ + ரை. வெளிப்படை.

கருசதேச முதலான அரசர்களும் வந்தார்கள். எ—று. (௭௰)

சகமொட்டியஞ் சவ்வீரங்கோ சலஞ்சாலவங் துளுவம்
மிகுபோடக மிடதங்குரு விதர்ப்பம்பாஞ் சாலம்
தொகுசிந்துவங் காளம்மச்சஞ் சோழங்காம் போசம்
பகுகேகயங் கன்னுடம்பப் பரநாடரு முற்றூர்.

போ + ரை. வெளிப்படை.

சகதேய முதலாகிய அரசர்களும் வந்து சேர்ந்தார்கள். எ—று. (௭௧)

## வேறு.

ஒத்தன ரைம்பத் தாறு தேயமன் னருமொருங்கு
பொத்திய தமுத வாரி புக்குபு மதிப்பார் போலும்
முத்தன மாதைப் பண்டு முக்கணு யகன்ம ணந்த
வத்திரு நாளு மொக்கு மார்திருத் தலையூ ரன்றே.

போ + ரை.

ஐம்பத்தாறு தேசராசாக்களும் சேர்ந்தவர்களாகி ஒன்றுகூடியது பாற்கடலில் தேவாசுரர்கள் கூடிக்கடைய வந்ததுபோலவும், மும்மூலைத்தடாதகைப்பிராட்டியாரைக் கயிலகசபதியானவர் விவாகஞ்செய்கின்ற அந்தத் திருக்கல்யாண உத்ஸவம்போலவும், பொருந்தித் திருத்தலையூர்த்தலமானது விளங்கும். என்றவாறு. (எஉ)

வந்திடுந் தேய தேய மன்னர்மன் னேறு தாழ்ந்திட்
டெந்தமக் கிறையே யென்ன வெச்சரிக் கைகள்வி ளம்பச்
சந்திர குலத்து வேந்தன் றண்மையுங் களிப்புந் தந்த
வெந்தையிங் கிருக்கும் வாற்று லெனக் கது விருப்ப மென்
[றான்.

போ + ரை.

கூட்டமாக வருகின்ற தேசத்து ராஜாக்களெல்லாம் சக்கிரவர்த்தி பாதங்களை வணங்கியெங்களுக்குத் தலைவனேயென்று தோத்திரம்பண்ணி எச்சரிக்கைசொல்லி நிற்பவர்களைப்பார்த்து சந்திரகுலோத்பவனாகிய புரூரவன் அரசர்களை அருளையும், மனோபிஷ்டங்களையும், அடைந்த சந்தோஷமும் தந்தருள்கின்ற எமது பிதாவாகிய சிவபெருமான் எழுந்தருளியபடியினாலே எனக்கும் இங்கிருப்பதில் விருப்பமென்று சொன்னான். என்றவாறு. (எ௩)

அம்மொழி வினவும் வேந்த ரகோரலிங்கந் தாழ்ந் தெங்கட்
கிம்மையு மொழித் துன்பாத வினையரு டருக வென்று
மும்முதல் வணைத்து திதது முடியிறை யவன்முன் வந்தே
யெம்மையூர்க் கேகக நல்க வெனவிடை பெற்றுச் சென்
[றார்.

போ + ரை.

அந்த வார்த்தையைக்கேட்ட அரசர்களெல்லாம் அகோரமூர்த்தியை யுபஸ்கரித்து எங்களுக்கு இப்பிறப்பின்றுன்ப முதலாகிய பிராரத்துவங்களை

நீக்கி உமது பாதாரவிந்தம்அடைகின்ற அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து மூன்று மூர்த்திகளுக்கும் முதல்வனைத் தோத்திரம்பண்ணிக் கிரீடம் அணிந்த சக்கிரவர்த்தியைச் சமுகத்தில் வணங்கிநின்று எங்களை ஊர்க்குப் போகும்படி உத்தரவு செய்திடுவீரென்ற அரசர்களுக்கு விடைகொடுத்தனுப்பவும், தங்கள் நகரஞ்சென்றார்கள். என்றவாறு. (எச)

தேயதே யத்தி ராசர் சென்றபின் றிகிரி மன்ன
னேயமோ டீசர் பூசை நிறையொடும் புரிநா ளொன்றிற்
பாயமான் மழுவும் பற்றிப் பாசிழை யுமையோர் பாகந்
தோயச்செஞ் சடையா னேற்றிற் றோன்றிட வணங்கிக்
[கண்டான்.

பொழி + ரை.

இராஜர்களெல்லாம் தங்கள் தங்கள் பட்டணத்திற் சேர்ந்த பின்பு சக்கிரவர்த்திராஜன் அன்புமிகுந்து சிவபூசையைச் சிவாகப்படிச் செய்கின்ற காலங்களிலொருநாளிலே தாவுகின்ற மானையும் பரசாயுதத்தையும், கைகளிற்பிடித்து பொன்னுபரணமணிந்த பார்வதிப்பிராட்டியாரை வாமபாகத்திலும் வைத்தவராகித் தூர்ச்சடியானவர் இடபாரூடராய்க் காட்சிதரவும் கண்டு நமஸ்காரம் பண்ணினன். என்றவாறு. (எ௫)

வணங்கிவா னவர்கோன் றந்த வளவிய தரளத் தாம
மணங்கம ரிடத்தார்க் கார்த்தே யடிமைநின் னபயமென்றே
யிணங்கரசனையுன் றேச மிந்திர புரிக்கே கென்று
மணங்கமழ் குழலாள் பங்கன் மறைந்திடக் கவன்றான்
[மன்னன்.

பொ + ரை.

இடபாரூடரை நமஸ்கரித்து தேவேந்திரன் கொடுத்த முத்துமாலையைத் தெய்வப்பெண்கள் தலைவியாராகிய பார்வதியை இடப்பாகத்தில் வைத்த சிவபெருமானுக்கணிந்து அடிமையாகிய யான் உமக்கு அடைக்கலமென்று பொருந்தி நிற்கின்ற புரூரவனைநோக்கி ஓ அரசனே! உன் இடமாகிய இந்திரபுரிக்குச் செல்லுவாயென்று சொல்லி மறைந்தனர் பெருமான் அக்காலத்தில் அரசன் கவலையடைந்திருந்தான். எ—று. (எசு)

அத்தனார் நிகேத னத்தை யன்பொரு வாது சுற்றி
நித்தநின் பதமென் னெஞ்சி னிலைத்தரு ளென்று பேரிச்
சத்தமோ டவ்வூர் னுள்ள றனைவலம் வருபு ளத்திற்
கொத்தமில் களிப்பி னோடுங் குறித்தன னூநீசி மன்னன்.

பொழி — ரை.

ஸப்தரிஷீசுவரருடைய திருக்கோயிலைப் பிரதட்சணஞ்செய்து ஙித்தியஸ்வரூபியே! உமது திருவடிகள் அடியேனுள்ளத்தில் உறுதியாகத்தங்கும்படி யருள்புரிவீரென்று பேரி முதலாகிய வாத்தியகோஷங்களோடு அப்பதியை வலம் வந்து தனது இருதயத்திலே எல்லையில்லாத சந்தோஷம் அடைந்தவனாய் வடக்குத்திசைக்குச்செல்ல உத்தேசித்தான் புரூரவன். என்றவாறு. (எஎ)

வேலிச்சோ ணுட ேைடு மிருவரும் விடைபெற் றேகு
நாலிவெண்ணகையுங் கொண்டு நன்மதி நுட்ப ேைடுங்
காலிசூழ் முல்லை நெய்தல் கடந்துதன் பதிக்கட் சென்று
மாலிகை மகுடஞ் சூடி வட்டம்வீற் றிருந்து வாழ்ந்தான்.

பொழி — ரை.

வேலியாகிய நன்செய்கள் சூழ்ந்த சோழதேசத்தரசனேடு சேரபாண்டியர்களையும் விடைகொடுத்தனுப்பிய பின்பு முத்துக்கள்போலே தந்தபந்திகள் பிரகாசிக்க மந்தகாசங்கொண்டு புத்திதீக்ஷண்யனுகிய மந்திரியுடனே பசுக்கூட்டங்கள் மிகுந்த முல்லை ஙிலங்களையும், நெயதல் ஙிலஙகளையும்தாண்டித்தன் பட்டணமாகிய இந்திரபுரியை அடைந்து பூமாலை சூடப்பெற்ற ரத்நகிரீடமணிந்து சிம்மாதனத்திலிருந்து அரசாட்சிசெய்து வாழ்ந்திருந்தான். என்றவாறு. (எஅ)

வேறு.

வார்புன் சடை யீசன்பணி வினைகா ரண மிதுவா
லேர்பொங்குமெய்ம்மடவாருப ரிகையிற் றரு விணர்கொய்
தார்தென் றிருத் தலையூர்க் கய மதினின் றுருத்திரஞ் சொல்
சீர்தங் கடி யவர்கா தையுஞ் செவிக் கொண் மினென்
றுரைத் தான்.

பொ — உரை.

நீண்டுமெலிந்த சடை முடியினையுடைய ஸப்தரிஷீசுவரர் திருப்பணி செய்த கதையிதுவாகும். இனி அழகுமிகுந்த சரீரத்தையுடைய ஸ்திரீகள் உபரிகையிலேறிக் கற்பகமலர்களைப் பறிக்கும்படி யுயர்ந்திருக்கின்ற அழகிய திருத்தலையூர்த்தலத்தின்கண் அகோரதீர்த்தத்தின் மத்தியில் ஙின்றுகொண்டு ஸ்ரீருத்திரபாராயணஞ் செய்கின்ற பெருமை தங்கிய அடியவரா

இய உருத்திரபசுபதியாரது கதையையுஞ்சொல்கிறேன் கேளுங்கள் பாண்டவர்களேயென்று தால்ப்பியமுனிவர் சொல்லத்தொடங்கினர். என்றவாறு. (௭௧)

## புரூரவசக்கிரவர்த்தி குற்றந்தீர்ந்த வத்தியாயம்

முற்றிற்று. ஆ உசுஉ.



## அ-வது உருத்திரபசுபதியார் பேறுபெற்றவத்தியாயம்



வேறு.

வள்ள வாய்ச் செழுங் கமலமித் திலத் தொடுமே வயலிற்
றெள்ளுஞ் சாலியுஞ் செங்கழைத் தரளம் வேய் மணியுந்
துள்ளும் வாழைமுத் தாபலஞ் சுத்தியின் றிரட்சி
தள்ளு நீர்வளத் தடம் பணை சூழ்திருத் தலையூர்.

பொ — ரை.

கிண்ணம்போலும் முகத்தையுடைய செழித்ததாமரையின் முத்தும், நன்செய்களிலுண்டாகிய நெல்முத்தும், செங்கரும்பின் முத்தும், மூங்கில் முத்தும், வாழையின் முத்தும், சங்கத்தின் முத்தும், உதிர்க்கின்ற நீர்வளம் பொருந்திய விசாலமாகிய வயல்கள் சூழ்ந்த திருத்தலையூர். எ—று. (க)

சாம மேமுத ஞன்மறை சாத்திர மாறு
நேம மேவவு பாசன நித்திய கருமஞ
சோம வாசபே யம்பவுண் டரீகமே சோதிட்
டோம முங்கரு டச்சய னம்புரிந் துறைவார்.

பொ — ரை.

சாமம், எதிர், இருக்கு, அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் வேதாந்தம், வைசேஷிகம், பாட்டம், பிரபாகரம், பூர்வமீமாம்ஸை, உத்திரமீமாம்ஸை என்னும் சாஸ்திரங்களாறும் நியமமாகச் செய்கின்ற ஔபாஸநம், நித்தியகற்மங்கள், ஸோமயாகம், வாசபேயம், பவுண்டரீகம், சோதிட்டோமம், கருடசயனம், முதலிய யாகங்களைச்செய்து வசிப்பார்கள். என்றவாறு. (உ)

சூழு மப்பதி யந்தணர் குலத் தெசுர் வேதந்
தாழி லாப்பதஞ் சடை கிர மங்கனந் தப்பாச்
சூழல் செய்துசெஞ் சுடர் தனைக் கண்டிட வெண்ணி
வாழு மோர்பசு பதி யெனும் மறையவ னுமால்.

பொழி + ரை.

மஹாப்பிராம்மணுள் வசிக்கின்ற அந்த ஸ்தலத்தில் பிராம்ஹணகுலத்தில் எஜுர்வேதத்தில் குறைவில்லாத பதமும், கிரமமும், ஜடையும, கனமும் தவறுமல் ஆராய்ந்து பரமேசுவரரைத் தெரிசனஞ்செய்யவேண்டுமென்று நினைத்து வசிக்கின்ற ருத்திரபசுபதியாரென்று பெயருள்ள ஒரு பிராம்மணனிருந்தார். என்றவாறு. (௩)

அந்த வந்தண னையெட்டை யிரட்டித்து மிரண்டிற்
றெருந்தி டும்பிரச் சினங்களுட் டொகுத்தும்பின் விரித்து
மெந்தை யாருரு நோக்கில னேக்கமுற் றுறைநாண்
மைந்தர் போற்றிகழ் சநகமா முனிவரன் வந்தான்.

பொ + ரை.

அந்த எசுர்வேதியாகிய உருத்திரபசுபதியார் தன் வேதத்திற்பிரிந்த எண்பத்திரண்டுப்ரச் நங்களிலும் சாங்கோபாங்கமாகச் சுருக்கியும் விரித்தும் கூறியும் மெது பிதாவாகிய பெருமானைக் காணவில்லையேயென்று கவலை கொண்டிருக்குங் காலத்தில் குமாரப்பருவமாக எந்நாளும் விளங்குகின்ற ஸ்ரேஷ்டராகிய ஸநகமஹாமுனிவரெழுந்தருளினர். எ—று. (௪)

உற்ற வம்முனி தனையுவந் தாசன மிட்டுப்
பெற்ற மேன்மையோ னிறைஞ்சிப்பின் வலமிடம் வந்து
பெற்ற மூருஞ்சத் திருடியீ சன்பதப் பேற்றிற்
குற்ற மற்றுறைந் திடுங்கதி கூறெனக் கேட்டான்.

பொ + ரை.

தம்மிடத்திற்கு வந்த அந்தச்சநக முனிவரைக்கண்டு மகிழ்ந்து ஆசனங் கொடுத்திருந்த பின்னர் பெருமைபொருந்திய உருத்திர பசுபதியார் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்துப் பிரதட்சணம் செய்து நின்று இடபாரூடராகிய ஸப்தரிஷீசுவரர் திருவடிப்பற்றின்கண் குற்றநீங்கியிருக்கும் மார்க்கத்தைச் சொல்லீரென்று கேட்டார். என்றவாறு. (௫)

வேறு.

மாமறை விசிட்ட னுக்கு மாதவ முனியு ரைப்பான்
வாமமெல் லியட்குத் தந்த மாபரஞ் சுடரி னேற்ற
மாமெசு ருவினு லாங்காண் டத்திடை யுருத்தி ரத்தி
னுமமைந் தெழுத்தென் றென்று நமச்சிவா யங்களம்மா.

பொ + ரை.

விசேஷமாகிய எஜுர் வேதமுணர்ந்துயர்ந்த ருத்திரபசுவதியாருக்குப் பெரிய ஸநகமுனிவர் சொல்லத்தொடங்கினுர். இடப்பாகத்தைப் பார்வதியாருக்குக் கொடுத்தருளிய அழகையுடைய பரஞ்சோதியாகிய சிவபெருமான் மேன்மையைச்சொல்வதாகிய எசுர்வேதம் நாலாம் காண்டத்தின் மத்தியிலே சொல்லப்படுகின்ற சிருத்திரத்தினிலே பெருமானது நாமமாகிய பஞ்சாட்சரமென்று பொருந்திய நமசிவாய என்பன ஆகும். எ—று. (௬)

அம்மறை மொழியை யத்தி யயநஞ்செய் யாத நூலோர்
உம்மையி னீச யோநி யுதித்துப்பன் னுளு மூன்று
வெம்மைவை வச்சு தக்கோன் வீழ்கதி நூக்க நாயான்
விம்மிடப் புரிவ தன்றி விதிலிகி தமும்வந் தேறும்.

பொ + ரை.

அந்தவுயர்ந்த வேதத்தை அப்பியஸிக்காத பிராம்மணர்கள் வருபிறப்பிலே தாழ்ந்த சண்டாளயோனியிலே பிறந்து பலநாள் வருந்திக் கோபத்தையுடைய எமதருமராஜனுல் நரகத்தில் தள்ளப்பட்டு நாய்கள் கடிக்க அழுவதல்லாமலும் பிர்ம்மன் எழுத்தும் விருத்தியடையும். எ—று. (எ)

சோதி மாமறை யிகழ்ச்சி செய் துச்சவெஞ் சினரை
யேதி பெற்றதென் கிங்கர ரிடித்து வன் குறட்டாற்
பீதி கூர்ந்திடத் தாலுவைப் பிடுங்கி யெஃகிய
மூதி யங்குருக் கயவெழுத் தழுவுற வொழிப் பார்.

பொழி + ரை.

சிவபெருமானுக்குரிய வேதத்தை நிந்தை செய்கின்ற தாழ்வாகிய கோபிஷ்டர்களை தண்டாயுதமேந்திய இயமன்றூதர்கள் இடித்து வலியகுறட்டினுல் பயங்கொண்டலறும்படி அவர்கள் நாக்கைப்பிடுங்கியுருக்கு ஈயங்களைத் துருத்திகொண்டூதியும் அந்த இடத்தில் உருகிய இருப்பு ஸ்தம்பத்திற் கட்டிக்கொள்ளும்படி நீக்கிவிடுவார்கள். என்றவாறு. (அ)

## வேறு.

இருக் கெசுர் சாம வேத மெனு மூன் றி னடுவ ணின்ற
பெருக் கிடை யுருத்தி ரத்திற் பேசிய நமச்சி வாயந்
திருக்கு மூன் றுடைய மாசத் திருடீசன் றன்னை யெண்ணார்
செருக் கிடு மெமன்வி னைக்குச் சேர்வது திண்ண மன்றே.

### பொ — ரை.

இருக்கு, எஜுர், சாமம் என்னும் வேதங்களுக்கு மத்தியிலிருக்கின்ற பெருகிய எசுர்வேதத்தின் நடுவேகிடந்த ஸ்ரீருத்ரத்தில் சொல்கின்ற நமச்சிவாய என்னுந்திரிநேத்திரதாரியாகிய ஸப்தரிஷீசுவரரைச் சிந்திக்காதவர்கள் கருவமிகுந்த எமதருமன் செய்கின்ற செய்கையிற்சேர்வது நிச்சயமேயாகும். என்றவாறு. (௯)

யுகக் கடை யினிலு மோயா துருத்திர நாத னைந்து
முகத் திலொன் றகோர மான மூர்த்திசத் திருடி லிங்க
மகத் தினிற் காணா யோரி யலைகடற் சுழன் று காலன்
றகத் தெரி நரகி லாழ்ந்து சதகோடி காலம் மேக்கார்.

### பொ — ரை.

யுகாந்தரத்திலும் நீங்காத ருத்திரமூர்த்தியினது பஞ்சமுகங்களில் ஒன்றாகிய அகோரமூர்த்தியாய் விளங்கும் ஸப்தரிஷீசலிங்கஸ்வரூபத்தைச் சிந்தை யெய்யாதவர்கள் பிறப்பாகிய அலைகடலில் கலங்கிப்பின்னர் எமனால் வேகமாயெரிகின்ற நரகத்திலழுந்தி வெகுகாலம் கரையேறமாட்டார்கள். என்றவாறு. (௰)

துதை முகத் தொன்ற மர்ந்த தொன்றிருத் தலையூர் செல்லார்
சுத மெனும் யோரி புக்குச் சஞ்சரித் துழன் று வைவச்
சுதன் விதிக் குறவு மாவர் தூயவன் றனையி கழ்ந்தோர்
மதமழீஇ ரௌர வத்துக் காளராய் மயங்கிச் சோர்வார்.

### பொ — ரை.

நெருங்கிய ஐந்து முகங்களிலொன்றாகிய அகோரமுகரூபியாகி எழுந்தருளிய திருத்தலையூரென்னுந் தலத்தின்கண் போகாதவர்கள் நூறு என்று சொல்கின்ற அநேகம் பிறப்பிற்பிறந்து திரிந்துவருத்தமடைந்து பின்பு எமதருமன் செய்கருமங்களுக்கும் சம்பந்தப்படுவோர்கள் அந்த மூர்த்தியை யிகழ்

ந்தவர்களும் தனது சந்தோஷம்கெட்டு இரரௌவத்தில் அவதிப்படுவதற்கே ஆளாகி மயங்கித் தளர்ச்சியடைவார். எ—று. (௧௧)

கருணை யின் மறலி தூதர் கட்டும்பா சத்துட் சிக்கி
யிருள் கடு வெயிலி னேக விடரிடக் கன்முட் டைக்கக்
குருதி கொப் புளிப்பச்சூலங் கொண்டுதாக்கிடுவர் பின்வை
தரணி யாநதியிற் றள்ளத் தாங்கிலா துழல்வர் மன்னோ.

பொ — உரை.

தயவில்லாத எமன்றூதர்கள் கட்டியிழுக்கின்ற பாசத்துள் அகப்பட்டு இருட்டிலும், கொடியவெய்யிலிலும், போகவும், பரற்கற்கள் இடறவும், முட்கள் காலிற்றைக்கவும், இரத்தம் பீலிடும்படி சூலாயுதத்தினலடித்துப் பின்பு வைதரணி நதியிலே தள்ளவும் சகிக்கமுடியாமல் கலங்கித்துடிப்பார்கள். என்றவாறு. (௧௨)

நீர்குடி மேகம் போல நீனிறப் பகட்டிற் காலன்
நார்கொடு வீக்கித் தண்டை நாட்டவே பிறவி முற்றுஞ்
சூர் செய்த சொற்று விக்கச் சித்திர குத்தன் சொல்லிப்
பீர்கொளத் தூதர் மொத்திப் பெருநரகினின் மாய்ப்பாரால்.

பொ + ரை.

நீருண்ட மேகம்போலே கருமையாகிய எருமைக்கடாவிலேறி எமன் தனது பாசத்தினற்கட்டி மஸ்தகத்திலே தண்டத்தை நிறுத்திக்கேட்கும்போது தான் அநேக சென்மங்களிற் பிறவுயிர்களுக்குத் துன்பஞ்செய்ததுகளைச் சொல்வித்துத் தெரிந்த சித்திரகுத்தக்கணக்கரால்ச் கேட்டுத்தெரிந்து வருத்தமடையும்படி எமதூதர்கள் பெரிய நரகத்தில் அடித்துத்தள்ளிக்கொல்லாமற் கொல்வார்கள். என்றவாறு. (௧௩)

இளந்திங்க ளெயிற்றின் கால னிடுந்திறற் காளாய் நிற்போர்
தளஞ்சடைத் தலையோன் றன்னைத் தரித்திடா வகத்தோ [ராமால்
களங்கில்சத் திருட சற்கண் டடிபணிந் தவர்கள் கையால்
உளங்கழ றிடுநா வாற்செய் யூறெலாம் வெருளு மன்றே.

பொழி + ரை.

பிறைச்சந்திரன்போலே வக்கிரதந்தங்களையுடைய எமனது தண்டனைக்கு ஆளாயிருப்பவர்கள் கூட்டமாகிய சடைகளையுடைய தலைவனாகிய

சிவபெருமானை மனதிற் சிந்திக்காதவர்களாகும். குற்றமில்லாத சப்தரிஷீ சுவரரைத் தரிசித்து வழிபாடு செய்தவர்கள் கைகளாலும், மனத்தினாலும், பேசுகின்ற நாவினாலும் செயகின்ற தீமைகளெல்லாம் பயந்தோடும். என்ற வாறு. (௧௪)

மட்டுட னூன்பொ சிப்போர் மாதவர்க்கிடுக்கண் செய்வோர்
வட்டநீ ருடைப்போர் வீட்டில் வன்னிவைத் திடுவோர் [தம்மைத்
துட்டகிங் கரரி டித்துத் தூண்டின் முண் ணரகிற் றள்ளிக்
கொட்டவே யலறிச செல்வர் கொள்பவ நுகர வாமால்.

பொ + உரை.

கள்ளுடனே இறைச்சிகளையும் உண்பவர். தவத்தைச்செய்பவர்களுக்குத் துன்பஞ்செய்தவர், வளைத்த எரிநீரையுடைப்பவர், குடியிருக்கும் வீட்டில் நெருப்புவைப்பவர்கள் இவர்களைக் கொடூரமான எமதூதர்கள் இடித்துத்தூண்டிமுள்ளாகிய நரகத்தில் தள்ளிவிடுவார்கள் செய்தபாவசஞ்சிதம் புசிக்கும்படி. என்றவாறு. (௧௫)

கருப்பவிச் சின்னஞ் செய்தோர் காவலர்க்கவதி சூழ்ந்தோர்
குருப்பிரி யையைப் புணர்ந்தோர் கோசிசு விகங்கங் கொன் [றோர்
விருப்புறு மனையைக் கூடு மிவரைக்கற் செக்கின் வீட்டிப்
பொருப்பினின் றுருட்டி நஞ்சைப புகட்டுவர் காலதூதர்.

பொ + ரை.

கருப்பத்தை வேறுபடுத்துகின்றவரும், அரசர்கட்கிடுக்கண் செய்தவர்களும், குருதாரத்தைச்சேர்ந்தவரும், பசு, குழந்தை, பட்சி இவைகளைக் கொன்றவரும், பிரிய மிகுந்ததாயைச்சேர்ந்தவரும் ஆகிய இவர்களை எமதூதர்கள். கல்லாலாகிய செக்கிலரைத்தும் மலையுச்சியிலிருந்துருட்டி விஷத்தைப்போசனஞ் செய்யும்படி பூட்டுவார்கள். என்றவாறு. (௧௬)

அசத்தியங் கிளந்தோன் வாதி னடர்ந்துபொய்ச் சான்று [சொற்றோன்
சுசித்தெரி வையை யழித்தோன் சூதினாற் பொருள்க வர்ந் [தோன்
பசித்துற வைத்துண் டோனிப் பாவிவா யினைப்பி ளங்கி
யொசித்துமெய் சிதறக் கொட்டி யுருட்டுவர் தூதர் மாதோ.

பொ + ரை.

பொய் சொன்னவன் வியவகாரத்தில் நடுநின்று பொய்ச்சாட்சி பேசினவன், கற்பினையுடைய ஸ்திரீகளைக்கெடுத்தவன், சூதாடிப்பிறர்பொருளை அபகரித்தவன், வீட்டின் வெளித்திண்ணையில் ஒருவர் பசித்திருக்கத்தான் மாத்திரம் புசித்தவனும், ஆகிய இப்பாவிகளை வாலைய முகத்தினின்றும் பேர்த்து முறுக்கிச் சரீரம் பதற அடித்து நரகத்திற்றள்ளுவார்எமதூதர் என்றவாறு. (கஎ)

மும்மல நிழலில் விட்டோர் மூத்தமங் கையாதோட சோரந் [தோர்
செம்மலாக் கொமபு கொய்தோர் சிவமுறை செய்து விட டோர்
மும்மதக் கடவுட் போற்றோர முக்கிய நோன்பு விட்டோர
உமமெனச் செனித்தி ழிநத ஊழலாழ்ந திடுவர மன்னோ.

பொ + ரை.

வாயில்நீர், இருமலங்களை நிழலிலே விட்டவர்களும், தனக்கு மூத்த ஸ்திரீயை ஸங்கமஞ்செய்தவரும், செவ்விய புட்பக்கொம்புகளை நறுக்கினவரும், சிவபூசைசெய்து விட்டவரும், கெஜமுகக்கடவுளைப்போற்றாதவரும், வேண்டிய விரதமிழந்தவரும், இவர் தாமே செய்த குற்றத்தைச்சம்பவிக்க வராகிப்பிறந்து ஈனமாகிய நரகிலழுந்தி வருந்துவர். என்றவாறு. (கஅ)

சாலேதோப் பலேததா தாகச சலிலமு மளிக்கார் வாடி
சீலநந் தனவ னங்கள் தேவர்கோ யிலேய ழிப்போர்
கோலவே திகையிற் கூட்டுங் குலமக ளிரைவிட் டோரை
யாலமே யென்னச் சீறி யருநர கழுத்து வாரால்.

பொழி + ரை.

தற்மசத்திரம், தோப்பு இவைகளைக் கெடுத்தவரும், தாகமென்றவருக்குத் தண்ணீர் கொடாதவரும், பூந்தோட்டம், சுத்தமாகிய நந்தவனம், தேவாலயம் இவைகளைச்சேதித்தவரும், கல்யாணத்திட்டாணியில் பாணிக்கிரகணம் செய்த ஸ்திரீயைவிட்டவர்களும் ஆகியஇவர்களை விஷம்போலே சீறியெமதூதர்கள் கொடுமையாகிய நரகத்திற்றள்ள வருந்திவார்கள். என்றவாறு. (கக)

எதிகுரு மறையோர் கங்கை யிகழ்ந்துண்டு நீங்கி னோந்தோர்
பிதிர்திலோ தகம்வி டார்கைம் பெண்களைக் கலந்தோர நன்
மதியிலோ ரிவரை யூழின் வன்னர கார வீழ்த்தி
யிதிபடர் திடரி லேற்றி யிழுப்பராற் பாச மார்த்தே.

பொழி + ரை.

ஸந்நியாஸிகள், ஆசாரியர், பிராம்மணர், கங்காநதி, இவைகளை நிந்திப்போர் உண்டவிடத்திற்றீங்கு நினைத்தவர், பிதிரர்களுக்குத்திலோதகம் விடாதவர், அமங்கலியைச் சேர்ந்தவர், உபகரிப்பதில் புத்தியில்லாதவர், இவர்களை வி திப்படி நரகிற்றள்ளிப் பிசாசுகள் நடக்கின்றமேட்டில் எமதூதர்கள் பாசத் தாற்கட்டி யிழுத்தலைப்பார். என்றவாறு. (உ௰)

கணவற்கு முன்பு சித்தாள் கருவழி கள்ளி மற்றோர்ப்
புணர்வதற் கமைந்தா ணஞ்சை யூட்டிய புற்கை யிட்டாண்
மணமகன் மக்கட் கொன்ற மாதரை யழற்றம் பத்தோ
டணவிடச் சீறித் தூத ராட்டுவர் கடுக வன்றே.

பொழி + ரை.

புருஷனுக்கு முன்னேயுண்டவளும், கருப்பத்தையழித்த கள்ளியும், ம ற்றுபுருஷர்களை ஆலிங்கனஞ்செய்தவளும், விஷத்தைக்கலந்த கூழையருத் தியவளும், கல்யாணஞ்செய்த புருஷனையும், பிள்ளைகளையும், கொலைசெய்கி ன்ற ஸ்திரீகளையும் அக்கினி ஸ்தம்பத்தோடு கட்டிக்கொள்ளும்படிக் கோபித் து அதட்டி நடத்துவார். விரைந்து எமதூதர்கள். என்றவாறு. (உக)

மாமுனி யிவ்வா றுடி மாபவக் கடல்விட் டேக
நீமவா றுரைப்பல் ருண்ட நீரினுட் படிந்து நீற்றை
நேமமோ டக்கம் பூண்டு நிகழுருத் திரஞ்செ பித்தே
யேமனைக் கடிந்த தாள ரிருஉசற் றெழுதி கேட்டே.

பொழி + ரை.

சிரேஷ்டராகிய சநகமுனிவர் இந்தவிதம் சொல்லிப் பெரிய செனனக் கடலை நீங்குவதற்குப் பிரகாசமாகிய வழியைச்சொல்வேன் அகோரதீர்த்த த்தில் ஸ்நாநஞ்செய்து விபூதியை ஆசாரத்துடனே உருத்திராட்சத்தையும் தரித்துக்கொண்டு விளங்குகின்ற ஸ்ரீருத்திரம் ஒன்றையே செபித்துக்கொ ண்டு காலனை ஸம்ஹரித்த திருவடியையுடையவராகிய ஸப்தரிஷீசுவரரை வழிபாடு செய்வாய் என்றுபின்னருஞ் சொல்வார். எ—று. (உஉ)

தொன்றமர் தலையூ ரானைத் தொழுதிடப் பவங்க டீர்ந்து
துன்றிய நரக நீங்கித் துய்க்குவர் பரத்தி லின்பம்
என்றுமுட் களிசெல் வத்தோ டிம்மையின் மகடூஉச் சேமந்
தின்றுமெஞ் ஞானச் சோதி சிறந்திடு மவர்பா லென்றார்.

பொழி + ரை.

புராதனமாகிய திருத்தலையூர்த்தலத்தில் அகோரமூர்த்தியை வழிபடுவோர்கள் பாவங்களை நீங்கி நெருங்கிய நகரத்தினின்றும் கரையேறி மறுமைக்கண் பேரானந்தத்தையனுபவிப்பார்கள். அதுவல்லாமல் இம்மையிலும் எக்காலத்தும் உள்ளமகிழ்ச்சியோடு ஸ்திரீகளின்பத்தையும் அனுபவித்து ஞானப்பிரகாசமும், அவர்களை வந்தடையும் என்று பின்னும் சொல்வார். என்றவாறு. (உ௩)

மாசில்சத் திருடியீசன் மலர்ப்பதந் தரிசித் தோர்கள்
பாசபந் தங்க ணீங்கிப் பலகலை யுணர்ந்து மாடந்
தேசுநன் மைந்தர் சுற்றஞ் சிறந்திட நுகர்ந்து பின்னர்ப்
பாசிழை யரம்பை யின்பும் பதவியு மார்வர் மாதோ.

பொ + ரை.

அநகராகிய ஸப்தரிஷீசுவரர் தாமரைபோலுந் திருவடிகளைத் தெரிசனஞ்செய்தவர்கள் மும்மலங்களினது கட்டுகள் நீங்கி வேதசாஸ்திரங்களையுணர்ந்து உபரிக்கிரகங்களுடன் பிர்ம்மதேஜசும், நல்லமக்களும், பந்துக்களும் மேன்மைபொருந்தும்படி அனுபவித்துப் பின்பு பொன்னுபரணமணிந்த தேவரம்பை யின்பமும், மோட்சத்தையும் அடைவார்கள் என்று பின்னும் சொல்லத்தொடங்கினார். என்றவாறு. (உ௪)

ஈரெட்டாண் டளித்த சத்த விருடீசன் றனையுள் வைத்தோர்
நேரிட்ட செறுநர் வென்று நினைப்பவை கொள்வர் தப்பார்
வாரிட்ட முலையார் மன்னர் வானவர் வசிய மாவர்
நீரிட்ட கழுநி சேரு நீங்கிடுந் துயரம் மன்னே.

பொழி + ரை.

மார்க்கண்டேயருக்கு என்றும் பதினாறு வயதருளிய ஸப்தரிஷீசரை மனதின்கண் சிந்திப்பவர்கள் எதிர்த்து வருகின்ற சத்துருக்களையும செயித்து எண்ணியபொருளையும் தப்பாமற்கைக்கொள்வர் ரவுக்கையணிந்த ஸ்தனங்களையுடைய ஸ்திரீகள், அரசர், தேவர்கள், வசியமாகுதலன்றியும் நீர்

தங்கிய நன்செய் நிலங்களும் வந்து சேரும் ; துக்கநிவிர்த்தியுமாகும் என்று சொன்னார். என்றவாறு. (௨௫)

வாரிநஞ் சுண்ட சுத்த மாவிரு டீசற் போற்றி
நேரிடம் வலம்பு ரிந்தோர் நிருபர்தஞ் சேனைக்கோனாய்
வேரியங் கொற்ற மாலை வேய்ந்துநீ டூழி வாழ்வார்
நாரிபா கன்க லந்தை நாமுரைத் தடங்கி டாவால்.

பொ + ரை.

பாற்கடலில் உண்டாகிய விஷத்தையுண்ட பெரிய வல்வத்ரிஷீசரை ஸ்துதித்து நேராகச் சோமசூத்திரப்பிரதட்சிணமும் செய்தவர்கள் அரசர்களின் சேனாதிபதிகளாகிப் பரிமளிக்கின்ற வெற்றிமாலையைச்சூடி நீடூழிகாலமும் வாழ்வார்கள். பார்வதி தேவியாரை இடப்பாகத்தில் வைத்தருளிய சிவபெருமான் பெருமையை என்னாற் சொல்லியடங்காதென்று சொன்னார். என்றவாறு. (௨௬)

மாமுனி வகுப்பக் கேட்ட மாமறை வலாளன் சொல்வான்
பூமியி னுதித்த போழ்தே பொறுப் பசி வினையு றக்க
மாமனு சாரந் தூய்மை யுவாவெனு நிலையங் காட்டி
யீமமே சேர்வ தல்லா னிம்மெய்யெற் றெனவுஞ் சொல்
[வான்.

பொ + ரை.

பெருமை தங்கிய ஸநகமுனிவர் எடுத்துச்சொன்னவையெல்லாங் கேட்டு வேதமுணர்ந்த ருத்ரபசுபதியார் சொல்லத்தொடங்கினார். இந்த பூமியில் சென்மித்த காலத்தே பொறுக்கக்கூடாத பசி, இன்பம், துன்பம், நித்திரை, ஆகிய அனுசாரம், ஆசாரம், ஆசையென்கின்ற நிச்சயத்தைக் காண்பித்தும், மயானத்திற்சேர்த்து விடுகின்றதல்லாமல் இந்த சரீரத்தினால் பின்பு என்னகுமென்று சொல்லலும் ஸநகமுனிவர் சொல்லத்தொடங்கினார். என்றவாறு. (௨௭)

வேறு.

யுகக்கடையிற் புனன்மிதப்பச் சினைப்பொருளு முதற்பொ
மொரக்க மூழ்கித்
[ருளு

தொகுத்தபரப் பிரமமதா மப்பிரமந் தனிற்கானற்
றோன்று நீரின்
நிகழ்ச்சியினிற் சிற்சத்தி நீரதின்வான் சதாசிவமு
நின்றுண் டாமால்.

பொ + ரை.

யுகாந்தத்தில் ஸப்தஸமுத்திரங்களும் பொங்கி உறுப்பின் காரணமாகிய எல்லாச்சீவர்களும், சீவர்களுக்குக் காரணமாகிய அண்டசராசரங்களும் ஒன்றுபட்டுப் பிண்டமாகிப் பின்னர்த் தகதகவென்றெரிகின்ற வடவாமுகாக்கினியாலெரிந்து பிரளயகாலமுண்டாகித் தானேதானாய்த் தணிவடைந்து ஒன்றிலொன்று தத்துவங்கள் சுருங்கிச் சுத்தமான பரப்பிர்ம்ம மாத்திரமாகிய அப்பிரமத்தில் கானலிலே தோன்றுகின்ற சலத்தைப்போலே பராசத்தியாகிய சிற்சத்தியின் குணங்களினால் ஆகாசமும், அதற்கு அதிபதியாகிய சதாசிவமுமுண்டாகும். எ—று. (உஅ)

வேறு.

வானதின்மா ருதமகேச் சுரனுந் தோன்று
மாருதத்தில் வன்னியுருத் திரனுந்தோன்று
மீனமிலங் கியிற்புனன்மா லுதிக்கு நீரி
னிரும்புடவி யயனுதிக்கு மம்மணீரு
மானவளா ருய்க்காலம் பலசென் றுதி
யயர்ந்தரனை யுளத்தெண்ணி யருள்பெற் றப்பா
ஞனரலை வளைபுவனங் காணபோக
நவில்யாக்கை முதற்சிருட்டி நயந்தா னம்மா.

பொழி + ரை.

ஆகாசத்தில் வாயுவும், அதற்கு அதிபனாகிய மகேசுவரனுமுண்டாவர் அந்த வாயுவில் அக்கினியும், அதற்கு அதிபனாகிய உருத்திரனுமுண்டாவார் அந்த அக்கினியில் அப்புவும், அதற்கதிபனாகிய விஷ்ணுவும் உண்டாவர். அந்த அப்புவில் பிருதிவியும், அதற்கதிபனாகிய பிர்மாவும் உண்டாவர். அந்த பிருதிவியும் [illegible] சேருகவே வெகுகாலஞ்சென்ற பின்பும் இருந்த பிரமன் பரமேசுவரனைச் சமாதியிலிருந்து அநுக்கிரகமடைந்து பின்பு [illegible] சமுத்திரங்கள் சூழ்ந்த புவனமும் [illegible] சொல்லுகின்றான் [illegible] செய்யத்தொடங்கினான் [illegible]

ஆதிபரா சத்தியருள் பிரமனுக்கு
மைம்பான்கோ டிப்பாழி யகிலந்தன்னு
ணீதியின கரத்தொகையை யைந்துகோடி
நின்றவதிற் றிடரேழு மதிற்பொற்பூமி
பாதியறு பானுலா மிலக்கந்தூநீர்
பாற்கடனு லெட்டிலக்கந் ததியிரெட்டுக்
கோநிலவி யெட்டிலக்கந் கள்ளோர்நான்குங்
குற்றமிலிக் கிரதமிரண் டிலக்கமாமால்.

பொ + ரை.

ஆதியாகிய சிற்சத்தியினிடத்துண்டாகிய பிரமதேவர் சிருஷ்டித்த ஐம்பதுகோடி விஸ்தீர்ணமாகிய பிரயஞ்சத்திலே முறையாகவே முயற்சியுடைய சேற்று நிலங்களிருபத்தைந்து கோடியும், தப்பின்ற அச்சேற்றுநிலத்தில் ஸப்தத்வீபுகளும், அது சூழ்ந்த கடல்களும், அது சூழ்ந்த சொர்ன பூமியும், அதிற்பாதியாகிய சுத்தநீர் அறுபததினுன்கிலட்சத்தில் க்ஷீராப்தி முப்பத்திரண்டு லட்சமும், தயிர்க்கடல் பதினறு லட்சமும், ஸர்ப்பி எட்டு லட்சமும், சுராக்கடல் நான்கு லட்சமும், கெடுதலில்லாத இட்சு இரண்டி லட்சமும், முறையே புஷ்கரத்தீவும், சான்மலித்தீவும், சாகத்தீவும், கிரவுஞ்சத்தீவும், பிலட்சத்தீவும், அந்த அந்தக்கடலையடுத்துண்டாகும். எ—று. (௫௰)

உவர்க்கடலோ ரிலக்கமதிற் சம்புத்தீவு
முதுவளைந்த மாமேரு மலையவற்றி
னிவப்புறுமொன் பதுகண்டங் குலாசலங்க
ணீகமமைத் தொருநான்கு தோற்றமாய
பவத்திலெழு பேதத்தெண் பத்து நான்கு
பரவிலக்க யோனிகளும் படைத்தவைக்குச்
சிவத்தருளாற் சராசரத்துட் சிலர்க்குஞானஞ்
சித்திபெறும் வகையாற்றிச் சிறந்தானன்றே.

பொ + ரை.

உப்புக்கடல் லட்சம் யோசனையும், அதைச்சூழ்ந்த சம்புத்தீவும், அது சூழ்ந்த மஹாமேருவும், அதுகளில் மேலான ஒன்பது கண்டங்களும், கைலை இமையம், மந்தரம், விந்தம், நிஷதம், ஏமகூடம், நீலகிரி என்னும் ஸப்த குலாசல பர்வதங்களையும், மேகங்களையும் உண்டாக்கியும் நாலு தோற்றமும், ஏழுபேத சீவர்களும், எண்பத்துநான்கிலக்கயோனி பேதமும் உண்

டாக்கியும் அவைகளுக்குச் சிவபெருமான் கடாட்சத்தால் சராசரங்களிற் சிலபேர்களுக்கு ஞானமடையும்படிச் செய்துவைத்தும் சிறப்பையடைந்தான் பிர்ம்மதேவன். எ-று. (௩௧)

விதியளிக்கத் திதிக்கவரி தீர்க்குமாறு
விளங்குருத்தி ரனுமறைக்க மகேசன்றானு
பதியவரு ளனுக்கிரகஞ சதாசிவற்கும்
பரிப்பவிய னுலகுமுதன் மூன்றிடத்துந்
திதிசுதர்கந் தருவரச்சு வினிகள் விண்ணோர்
திகழ்பிதிர ரிருக்குமிடஞ் செய்பபூமி
யதின்மனித ரூர்வனவு நடப்பதா வரங்க
ளமைநதுபறப் பனசங்க மமுபாமாறே.

பொ + ரை.

பிரமதேவர் சிருஷ்டிக்கவும், மஹாவிஷ்ணு இரக்ஷிக்கவும், உருத்திரர் சம்ஹரிக்கவும், மாஹேசுவரர திரோபாவஞ் செய்யவும், சதாசிவர் அனுக்கிரகிக்கவும், ஸ்வர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும் மூன்றும் அதிலுள்ள அசுரர், வித்தியாதரர், அச்சுவினிதேவதைகள், தேவர்கள் விளங்குகின்ற பிதிர்க்கள், இவரிருக்கு மிடமும், செவ்விய பூமியில் உள்ள மனிதரும், ஊர்வனவும், நடப்பவைகளும், அசரங்களேயும், பொருந்திப் பறக்கின்றவைகளேயும், சரங்களேயும் உண்டாகும் வழி இதுவாகும். எ-று. (௩௨)

இந்திரன்பொன் னுடாளப் பிதிரர்க்கேம
னிறையவனு யிச்சகத்தைச் சேடன்றாங்கச்
சந்திரசூ ரியரொடுதா ரகைகள்வானிற்
சக்கரம்போற் பொன்மேரு சுற்றப்பெற்ற
வுந்திவந்தோ னெழுபிறப்புங் காண்பேனென்ற
வுலகாயு தன்மயக்க முற்றுநாத
விந்திரண்டுஞ் செறிந்துபிண்ட முதித்தபோதி
னேடணையான் மயங்கிவுளர்ந திடுவரன்றே.

பொழி + ரை.

ஸ்வர்க்கத்தைத் தேவேந்திரனுளவும், பிதிர்க்களுக்கு எமதர்மன் தலைவனுகவும், இந்த ஜெகங்களே ஆதிசேஷன் சுமக்கவும், சந்திர சூரியர்கள் நட்சத்திரங்கள் இதுகள் சக்கரம் போலே மகாமேருவைச் சுற்றும்படி யுண்டா

க்கியமஹாவிஷ்ணுவின் நாபிக்கமலத்தில் வந்தவனுலாகிய எழுவித செனன ங்களையும் அறிவேனென்ற ஆணவத்தை யடைந்த உலகாயுதன் மதமாகிய ம யக்கத்தில் விழுந்து நாதம், விந்துவாகிய இரண்டும் சேர்ந்து பிண்டமாய்க் கருத்தரித்துதித்து ஈஷணாத்ரயத்தினல் மயக்கங்கொண்டு உலகில் வளர்வ ர். எ—று. (௯௯)

வேறு.

இவ்வா றுதித்த வுலகுதனி லியன்ற திதிமைந் தர்கண்மேரு
வொவ்வா வவுண ராய்முற்றும் விதியின் சிருட்டி யளித்தழி
க்குரு
செவ்வாய்த் திருமால் கடலொதுங்கத் தேவரகலச் செய்த
னராய்ச்
செவ்வே தலைவ ராயிருந்துஞ் சியமுனுவா வெனமாய்ந்தார்.

பொழி + ரை.

இந்த விதமுண்டாகிய வுலகத்தில் பொருந்திய திதிமக்களாகிய அசுர ர்கள் மகாமேருவைப்போலே உவமை சொல்லக்கூடாத சரீரபுஷ்டி வலியி னை யுடையவர்களாய் பிர்மசிஷ்டியும், ரட்சணையும், சங்காரமும், செய்பவர் களாய் செவந்தஅதரத்தை யுடைய மஹாவிஷ்ணுவானவர் கடலிலொளிந்து கொள்ளவும், தேவர்களைப் பயந்தோடச் செய்து செவ்வையாகிய தலைமை பெற்றிருந்தும், சிங்கத்தின் முன்யானை போலேமடிந்து போனார்கள். என்றவாறு. (௯௪)

சிறந்த வெள்ளிக்கயிலையமர் தேவைத்திருமால் பிரமனேடுந்
துறந்தோ ரிலிங்க மாயுதிப்பச் சபித்தார் பிருகுளவோனைப்
பிறந்து தசக முறையலையச்சபித்தார் பெரும்பாற் கடல்
கடையப்
பிறங்கு மமுத மமரருணப் பெற்றான் பரமன் விடத்தினையே.

பொழி + ரை.

மேலான கைலாசமலையிலெழுந்தருளிய சிவபெருமானை பிர்ம்மவிஷ் ணுக்களுடன் தாருகாவனத்திருடிகள் இலிங்கமாக ஆவிர்ப்பவிக்கும்படிச் ச பித்தார்கள் திருத்துழாய் மாலையணிந்த மஹாவிஷ்ணுவைப்பத்துத்தடவை பிறந்தலையும்படிக்கும் பிருகு முனிவர் சபித்தார். பெரிய பாற்கடலை மத னம் பண்ணவும் உண்டாகிய அமுதத்தைத் தேவர்களுணணவும், சிவபெரு மான் விடத்தையும் உண்டார். எ—று. (௯௫)

அருகர் புத்தர் சாத்தமெனு மாதி வாமம் வைணவமும்
பெருகுறு சைவ மெனவாறும் பேத சமைய மாமனைத்து
மொருவ னாகி யுருவில்லா துள்ளும் வெளியு மோங்கி நின்ற
சுருதி முடிவா மதிற்சைவஞ் சுயமே பெரிதாய்ச் சிறந்திடு
மால்.

போ + ரை.

அருகமதம், புத்தமதம், சாக்தமென்று சொல்கின்ற ஆதியாகிய வாம மதமும், வைஷ்ணவமதமும், வளருகின்ற சைவமும் என்று ஆறு விதமாகப் பேதப்பட்ட ஸமயங்களாகிய எல்லாமும் தனித்தனிக்கொள்கையாகி ஏக வஸ்துவாய் உருவமொன்றுமில்லாமல் உள்ளும் வெளியிலும் மேலாகி நிறைந்திருக்கின்ற வேதமுடிவாகும், அவைகளிற் சைவசமயம் இயல்பாகவே மேலாய் விளங்கும். எ—று. (௬௬)

ஆதியொருவன் குலத்துதித்து மனேககுலமென் றவரவர்க்குச்
சோதிமுனிவர் தவவலியாற் றொன்னூல் பலவாய் வகுத்திடப
நீதிபெறவே வருமவற்று ணின்றஞான மொன்றன்றோ
வேதக்கொடியாய் கேட்டியென விளம்புகின்றான் சநகனரோ.

போ + ரை.

பூருவத்தில் ஒருவன் குலத்திலேயுண்டாகியிருந்தும் அவரவர்களுக்கு அநேக குலங்கள்போலே தோற்றும்படி தேஜோவான்களாகிய பிர்ம்ம இருஷிகள் தங்கள் தபோவல்லபத்தால் பழையசாஸ்திரங்களை அநேகமாகப் பிரித்துச்செய்தார். அந்த நூல்களிலமைத்த விதிப்படியே உலகம் நடக்கின்றன அவைகளுக்குள்ளே ஞானமென்பது ஒப்பற்றதல்லவா! வேதத்வஜதத்தையுடையவனே கேட்பாயென்று பின்னுஞ்சொல்லத்தொடங்கினார் ஸநக முனிவர் என்றவாறு. (௬௭)

வேத னளித்த வெவ்வுயிர்க்கும் மேலாந்தேவர்க் கவிர்ப்பாக
வீதஞ்செயுமா னிடப்பிறப்பின் மேருசூழ்சம் புத்தீவிற்
றீதுநிகழாப் பிரமகுலஞ் செனித்தன்மிகவும் பெரிதன்றோ
கோதையுடனெங் கோனமர்ந்த கோசபிண்டக் குணநுவல்
வாம்.

போ + ரை.

பிரமதேவனால் சிருஷ்டித்த எவ்வகைப்பட்ட ஜீவர்களுக்கும் மேலான பிறப்பாகிய தேவர்களாகும் அந்த தேவர்கட்கு அவிர்ப்பாகத்தை வீதப்படி கொடுக்கத்தகுந்த மனுஷ்ய ஜென்மங்களுக்குள் மகாமேருவைச் சூழ்ந்திருக்கின்ற சம்புத்தீவில் குற்றம் விளங்காத பிரம்மகுலத்தில் பிறத்தல் பெருமை மிகுதியல்லவா பார்வதீஸமேதனுக எமது தலைவர் எழுந்தருளிய கோசத்தின் சுருக்கத்தைச் சொல்வேன் என்று சொல்லத்தொடங்கினர். (௯அ)

உசித்தவிந்து நாதமிரண்டுருண்டுவாயு வழனீர்மட்
கதித்துப்பிண்டம் பொறியுறுப்புங் கைகாலுடன்மற் றுயி
ராகி
விதித்தமுறைமைப் படிமண்ணில் வீழ்ந்தேயன்ன மமுது
ண்டு
பதிக்கவளர்பா லியங்குமரம் பன்னெவ்வனம்வார்த் திகமா
மால்.

போ + ரை.

உண்டாகின்ற சுக்கிலசுரோணிதங்களிரண்டும் ஒன்றாகத்திரண்டு பிண்டமாகி வாயு, அப்பு, மண், அக்கினியிதுகளைப்போல மிகுந்து கூடிக்கண் மூக்குச்செவிவாய் மெய்யுடனே கைகால்களுடைய தாய் உயிர்ப்படைந்து சிருஷ்டி ஸ்திதி ஸங்காரம் திரோபவம் அனுக்கிரகங்கட்குட்பட்ட அமைப்பினனுகி யிந்தப்பூமியில் பிறந்து அன்னம், பால்களை யுண்டு தரித்திருக்கும்படி பால்யம், குமாரம், சொல்கின்ற எவ்வனம், வார்த்திகமென்னும் பருவங்களும் நடந்துவரும் என்றவாறு. (௯௯)

வேறு.

பூதமெனும் புடவிகந்தம் புனலிரதந் தேயு
பொருந்துருவா யுவிற்பரிசம் புட்கரத்திற் சத்தம்
நீதிலப்பூ தத்தினுக்கைம் மாத்திரைகா ரியமாய்ச்
சிறந்தவொரு மாத்திரைக்குங் குணங்கண்மூன் றுகி
வாதில்சத்த மாத்திரையுஞ் சாத்துவிக முன்னே
வளரறிவா மதிற்செவியும் ராசசவஞ் சத்தில்
நீதியிற்ச மானனும்பின் வாயுபரி சத்தில்
நின்றசாத் துவிகாம்ச நினைமனமெய் யாமால்.

போ + ரை.

பூமியிற்செனித்துப் பலவகை வடிவையும், இருகந்தத்தையும், ஐந்து வண்ணத்தையும், அறுசுவையையும், எட்டூறுகளையுமுடைய இந்த ஐந்து குணவஸைதகளையும் பொருந்திய மனுஷியசரீரத்தில் பஞ்சபூதங்களென் கின்ற பிருதிவி கந்ததன் மாத்திரையும், அப்பு ரசதன்மாத்திரையும், தேயு ரூபதன் மாத்திரையும், வாயு பரிசதன் மாத்திரையும், ஆகாசம் சப்ததன் மாத்திரையும், குற்றமில்லாத இந்த பஞ்சதன் மாத்திரைகளுமுண்டாவத ற்கு ஒவ்வொரு பூதங்களிடத்துங் காரியமடைந்தும் ஒவ்வொரு மாத்திரைக் கும் குணங்கள் மூன்றாகி வருகின்ற வழக்கில் சப்ததன் மாத்திரையின் ஸா த்வீகாம்சத்தின் சமஷ்டி வியஷ்டியில் ஞானவிவேகமும், அதில் சப்தமாகிய காதும் இராஜஸாம்சந்தொகுத்த ஸ்தூலத்தில் முறையே சமானனும், ஸ் தூலத்திலே வாயுவும் பரிசதன் மாத்திரையில் நிலைபெற்ற சாத்துவீகாம்சம் தொகுத்த ஸ்தூலத்தில் நினைக்கப்படுகின்ற மனமும், ஸ்தூலத்திலாகிய சரீ ரமுமாகும். எ— று. (சம)

சத்தியிர சசினில்வியா னனுந்தொகலிற் கரங்க
டந்துருவிற் சத்துவமுற் புத்தியொடுங் கண்கள்
சித்திதொகும் வியட்டியிலு தானன்செல் கால்கள்
தெரிந்திரத மாத்திரைசாத் துவிகமதிற் சித்தம்
ஒத்தவியட் டியின்னுவு மவ்வஞ்சத் தபான
னுறுங்குய்யங் கந்தஞ்சாத் துவிகமுன்னுங் காரம்
மத்தவாக் கிராணமிரா சசத்தினிற்பி ராண
வாயுவுடன் பின்குதமும் வந்தவர லாறே.

போ + ரை.

ஸ்பரிசதன் மாத்திரையில் இராஜஸாம்சத்தில் வியானனும், ஸமஷ்டி யிலாகிய கைகளும், சத்துவாம்சரூபதன் மாத்திரையில் புத்தியும், அந்த ஸ் தூலத்திற்கண்களும், ரஸாம்சம் தொகுத்த ஸ்தூலத்தில் உதானனும், அந்த ஸ்தூலத்தில் கால்களும், ரஸதன் மாத்திரையாகிய ஸத்வாம்சத்தில் சித்த மும், ஒக்கின்ற ஸ்தூலத்திலே நாக்கும், இராஜஸாம்சத்தில் அபானனும், அந்த ஸ்தூலத்திலேபொருந்திய குய்யமும், கந்ததன் மாத்திரை ஸத்துவா ம்சந்தொகுத்தலில் அங்காரமும், அந்த ஸ்தூலத்தில் களிப்பைக்கொண்டு உறிஞ்சுகின்ற மூக்கும், இராஜஸாம்சம் தொகுத்த ஸ்தூலத்தில் பிராணவா யுவும், அந்த ஸ்தூலத்தில் விசாரிக்கின்ற குதமும், உண்டாகிய காரணமா கும், என்றவாறு. (சக)

அறிவுசமா னன்றொடங்கி வாக்குறுத லாலே
யறைகின்ற சத்தத்தைக் காதினாற் கொள்ளு
நெறிமனது வியானனுட னியன்றிடவே கையா
னேர்தல்பரி சத்தையவ யவமதனி லறியுங்
குறிகொள்புத்தி யானதுதா னன்றுடர்ந்து மிகவே
கொள்பாத நடக்குமுருக் கண்ணதனால் வாங்கி
மறிசித்த மபானமுடன் மேட்டிரத்தினாலே
யாநந்தம் ரசநாவா லறிதருவ வன்றே.

பொ + உரை.

அறிவானது சமானவாயுவுடன் சேர்ந்து வாக்கினாலே பேசுகின்ற சத்தத்தைக் காதினாலேயறியும். வழியிலே செல்கின்ற மனமானது வியானவாயுவுடன் சேர்ந்து கையினாலே கொடுத்தலையும், தொடுதலை உடம்பினிடத்தும் அறிகின்ற குறிப்பாகிய புத்தியானது உதானவாயுவுடன் சேர்ந்து காலினாலே நடக்கின்றதையும், ரூபங்களைக் கண்ணாலேயும் அறிகின்ற சித்தமானது அபானவாயுவுடன் சேர்ந்து மேட்டிரத்தாலே ஆநந்தத்தையும், நாவால் இரசத்தையுமறிந்திருக்கும். எ—று. (சஉ)

எழுகின்ற பிராணனோடுங் குதத்தினா னீக்க
விழிகந்தந் தனைமூக்கா லறிந்துறுமே யொன்றொன்
றழியொன்றி யறிவைவிளக் காமலே யொன்றி
லொன்றுபிறழ்ந் தறிவறிய வொட்டாமற் பின்ன
ரழிவுசெயி ராகமுதற் பத்தின்மூன் றுலி
யாவுமழிந் தகமகண்ட வறிவணுவ தாகிச்
சுழிமுனைபி னொளியின்விழி நோக்கின்ற ஞாநச்
சுடரொளியைச் சேராமற் சுழலவைக்கும் மன்னே.

பொழி + ரை.

எழுந்திருக்கின்ற பிராணவாயுவுடனே அகங்காரஞ்சேர்ந்து குதத்தினால் மலசெலங்களைக்கழிக்கும் துர்க்கந்தம் நற்கந்தங்களை மூக்கினாலறியும் சப்தாதி விஷயங்களை சுரோத்திராதிகளறிந்து சுரோத்திராதிகளை மனதியந்தக் கரணங்களறிந்து சகலத்தையுமறிவிக்குமாதலால் அந்தக்கரணசகாயமின்றி யொன்றை யொன்றறியமாட்டாது. அதினாலே வருகின்ற சாக்கிர - சொற்பன - சுழுத்தி - துரியம் - துரியாதீதம் என்னும் ஐந்தவஸ்தைகளிலும்பட்டு அறிவை விளக்காமல் ஒன்றோடொன்று பேதமாகி அழிவுசெய்கின்ற இரா

காதிபதின்மூன்றுதுற் குணங்களினுலும் அழிந்து மனம் அகண்டமான அணுவாகி மூலாதார ஸ்வாதிஷ்டான மணிபூரக - அனுகத - விசுத்தி - ஆக்ஞையென்னும் ஆருதாரங்களின் மேலாகியதுவாதசாந்தமாகிய ஸஹஸ்ரகமலத்தில் முட்டிவருகின்ற சுழுமுனையிலே விளங்குகின்ற பரஞ்சோதிப் பிரகாசத்தை இடைபிங்கலைகளாகிய நேத்திரங்களினுலே பார்த்து ஜோதிர்மயத்திலேலயிக்காமல் கலங்கச்செய்யும். என்றவாறு. (௬௩)

வேறு.

ஆறு பத்துவி னுடிகள் கொள்வதாங் கடிகை
யாறு பத்தொரு தினமதிற பாதியோர் திங்க
ளாறு கொண்டய னம்மொரு பகலம ராகட்கீ
ராறு திங்களோ ராண்டதி னூறுமா னிடர்க்கே.

பொழி + ரை.

இப்படியுண்டாகிய மனிதர்க்கு அறுபது விநாடிகொண்டது நாழிகையொன்று, நாழிகை அறுபதுகொண்டது தினம், தினம் முப்பதுகொண்டது மாதம், மாதம் ஆறுகொண்டது அயனம், அந்த அயனமானது தேவர்களுக்கொரு மத்தியான்னம், அந்த அயனமிரண்டாகிய பனிரெண்டு மாதங்கள்கொண்டது ஒரு வருடம், இப்படி நூறுகொண்டது ஒரு மனுஷ்யனுக்கு ஆயுள் நிர்ணயமாகும். என்றவாறு. (௬௪)

ஆண்டு நூறினி லவத்தையு மைந்தனு பவிப்பார்
ஆண்டி லக்கநாற் பத்துமூ வாயிர மிருபான்
நீண்ட நாலுக நேர்ந்திடு மாயிரம் பகலாய்ப்
பூண்ட வேதனே ராண்டிற்பன் னுன்கரி பொன்றும்.

பொ + ரை.

பூர்ணயுளாகிய நூறு வருஷத்திற்குள் பாலியம், கௌமாரம், எவ்வனம், வார்த்திகம், ஜெரையென்னுமைந்த வஸ்தைகளும் அனுபவிப்பார்கள். அப்படிக்காகிய வருஷம் இலட்சத்தினுற்பத்து மூவாயிரங்கொண்டது ஒரு சதுர்யுகம் அந்த சதுர்யுகம் ஆயிரம்கொண்டது பிரம்மதேவன் ஒரு பகல் அந்தப்பகலும்கொண்டது ஒரு தினம், இப்படி நூறு வயதுகொள்வதில் அவனொருநாளிற் பதினுன்கு இந்திரர்கள் அழிந்துபோவார்கள். எ—று. (௬௫)

அளித்தி டுமயன் செனித்திடல் கோடியா மரிக்குக்
களித்த வோர்பகல் கண்டமால் சோடியுற் பவித்து
விளிக்கு நேரமா மேழிரு டிசனும் விமலற்
கிளிக்கு நேரமா யெய்ந்திடு மோநமச் சிவாயம்.

பொ + ரை.

ஸர்வமுஞ் சிருஷ்டிக்கின்ற பிர்ம்மதேவன் கோடி ஜென்மங்களெடுத் தால் அரியாகிய மஹாவிஷ்ணுவுக்கும் மகிழ்ச்சியாகவிருக்கின்ற ஓர் நாளா கும் அப்படிக்கொண்ட வருஷங்கள் முடிந்த மகாவிஷ்ணுவின் ஜென்மமுடி வுகாலமானது ஸப்தரிஷீசரென்றும் பெயரையுடைய விமலருக்குச் சிரித் திருக்குங் காலங்களாகப்பொருந்திய ந, மசி, வாய என்னும் பஞ்சாட்சரங்க ளாகும். எ—று. (௬௬)

வேறு.

இந்தவாறு சொற்றசோதி யிருடிவா ஞெளிப்பவும்
பந்தவாச மற்றுயர்ந்து பசுபதியி றைவன்முன்
வந்தவாவி யுட்கரங்கு வாவிடக் கழுத்தள
வந்தவாது ருத்திரம் மறைந்தசிஃறி னத்தினே.

பொழி + ரை.

இந்தப்படி அண்டபிண்டோற்பத்தியும், பாபதெண்டனை புண்யமோ ட்சங்களும, வேதபுராணங்களும், உனக்குள்ளே அனுபவமாகவேண்டுமெ ன்றுபதேசித்த ஜோதிஸ்வரூபியாகிய ஸநகமுனிவர் ஆகாயத்தில் மறைந்த வுடனே பசுபதியார் பந்தமாகிய வாசனைகளொழிந்து மேன்மைபெற்று நா தனுகிய ஸப்தரிஷீசர் சந்நிதி முன்னுகவந்து அந்த அகோபதீர்த்தத்துளிற ங்கி யுச்சியிற் கைகள் குவியக்கழுத்தளவினதாகிய ஜலத்தில் நின்று நீங்கா மல் ஸ்ரீருத்திரத்தைப்பாராயணஞ் செய்துகொண்டு வருகின்ற சில தினங் களிலே. எ—று. (௬௭)

பொறிபு லன்க ளொன்றி யீசன் பூசை மஞ்ச னத்தினை
யறிவு கொண்டு ருதிரத்தை யனுமெனும்மு ரைத்திடத்
திறிமுதல்வ னுமையினேடுஞ் செங்கண் மால்வி டையினிற்
செறிக ணங்க ளமரர் சுற்றத் திங்கள் சூடி வருகுமால்.

பொ + ரை.

பொறி புலன்களடக்கி யொருவழிப்படுத்திச் சிவபெருமானுக்குப் பூ ஜாவிஷயமாகிய திருமஞ்சனத்தை அறிவினல் முற்றுஞ்செய்து ஸ்ரீருத்திர

த்தை இரவும் பகலும் அன்புடனே சொல்லித்துதிக்கும்போது பிர்ம்மவிஷ்ணு ருத்திரர் என்னும் மூவர்களில் முதல்வனாகிய பெருமான் பார்வதி தேவியாரோடும் செவந்த கண்களையுடைய பெரிய இடபாரூடராய் நெருங்கிய சிவகணங்கள் தேவர்களும் சூழும்படி சந்திரசூடராகிய ஈசுவரன் எழுந்தருளினர். எ—று. (௬அ)

வேறு.

வானவர் புட்பமாரி வான்முகிற் கந்தமாரி
ஞானவே தியனனந்த நயநநீர் மாரியோடும்
மீனவன் குலத்துதித்த மின்னிடை வல்லிபங்க
னூனமில் கருணைமாரி யொன்றுறப் பொழிந்தவன்றே.

பொ + ரை.

தேவர்கள் பொழிகின்ற கற்பகப்பூமாரியும், ஆகாயத்துலாவுகின்ற மேகங்கள் பொழிகின்ற சந்தனமாரியும், அந்த ஞானவானாகிய ருத்திரபசுபதியார் விருஷபாரூடரைத் தெரிசனஞ்செய்கின்ற பேரானந்தத்தினால் கண்களில் உண்டாகும் ஆநந்தபாஷ்பவாரியும், பாண்டியன் குலத்துதித்த மின்போலுமிடையினையுடைய தேவியை வாமத்தில் வைத்தருளிய பெருமானது குறைபாடில்லாத கிருபாமாரியும் சேர்ந்து பெருகும்படிக்குப் பொழிந்தது. எ—று. (௬௯)

பசுபதி யாரையீசன் பக்கலி னிருத்திருத்ர
பசுபதி யென்றுநாமம் படைத்திட நிறுவியன்றே
பசுபதி காக்கும்வெள்ளிப் பருப்பத மடைந்தார்மாத்த
பசுபதிந் தவர்க்கருட்கண் பயத்திடு மய்யனம்மா.

பொழி + ரை.

நேரில்வந்து பசுபதியாரை ஈசன் தன் பாரிசத்திலழைத்திருத்தி ருத்ரபசுபதியென்று உலகத்திலே நாமதேயம் பெறக்கடவதென்று சொல்லிவிட்டுப்பசுநாயகனாகிய நந்திகேசுவரரால் காக்கின்ற கயிலாசமலையினிடத்தில் அப்பொழுதே சேர்ந்தார். மகாத்தபசிலழுந்தினவர்க்குக் கிருபாகடாட்சத்தைச்செய்கின்ற ஆதிக்கம் பெற்றமூர்த்தி. எ—று. (௭௰)

மாமறை முறையாலய்யன் மலர்ப்பத மடைந்தவாறு
நாமிசைத் தனம்பின்வேதி நளினியின் மாண்புங்கேண்மின்
சேமமிங் கருளச்சொல்வே மென்றவர்த் தொழுதுசாற்றி
வீமனோடைவர்வேண்ட விளம்பினன் முனிவனன்றே.

பொழி+ரை.

ஸ்ரீருத்திரகிரம பாராயணத்தினலே உருத்திரபசுபதியார் பரமசிவன் றிருவடியையடைந்த வரலாற்றை நாம் உங்களுக்குச் சொன்னோம். இதன் பின்பு ஓமகுண்டமாகிய அகோர தீர்த்தத்தின் பெருமையையும் கேளுங்கள் சொல்கிறேனென்றலும் அவரை நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ்செய்து வீமசேனன் முதலாகிய பஞ்சபாண்டவரும் பிரார்த்திக்கத் தால்ப்யமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ—று. (௩௧)

## அ-வது உருத்திரபசுபதியார் பேறுபெற்றவத்தியாயம்

முற்றிற்று. ஆ ௩௧௬.



## ௬-வது அகோராக்கினி குண்டதீர்த்த மகிமையுரைத்த வத்தியாயம்.

கொய்த வச் சிரந்துகளிர்க்கக் குண்டமா கியும்வேடன்றன்
மெய்தனைச் சுத்திசெய்தும் வேதியர்க் கருளளித்தும்
வையகத் துள்ளதீர்த்த மவற்றுளின் முதன்மைபூண்ட
துய்யவன் னங்கடோயுங் கயத்ததை சொல்லற்பாற்றே.

பொ+ரை.

அறுந்த தலைகள் உண்டாக ஓமஞ்செய்த அகோராக்கினிகுண்ட தீர்த்தமாகியும், கொலைசெய்த வேடன் குற்றங்களை நீக்கித்தேகத்தைச் சுத்திபண்ணியும், பசுபதியாருக்கு ருத்திரபசுபதியாரென்று அழியாப்பத்தைத் தந்தும், பூமியிலுள்ள தீர்த்தங்களெவற்றினும் மேம்பாடுடைய பரிசுத்தமான அம்ஸங்கள் சஞ்சரிக்கின்ற தடாகத்தின் பெருமையைச்சொல்லும் பகுதியாகமாட்டாது. எ—று. (௧)

பொன்னுல கினில் வான் கங்கை பூவுலகினின்மூ வேணி
யன்னமே வயனு லோகத் தாநந்த தீர்த்த மென்பு
பன்னக மணிந்த சோதிப் பரமனு ருலகின் ஞாநச்
சின்னமாம் பிரம ஞாந தீர்த்தமு மிதற்கொவ் வாதே.

போ + ரை.

தேவலோகத்திலே ஆகாயகங்கையும் பூலோகத்திலே திருவேணியும் ஹம்ஸவாகனனாகிய பிரமனுலகில் ஆனந்ததீர்த்தமும், எலும்பையும், பாம்பையுமணிந்த பரஞ்சோதிமயமாகிய பரமேசுவரருலகில் ஞானவிசித்திரமாக விளங்குகின்ற பிரமஞானதீர்த்தமும் இந்த தீர்த்தத்திற்குச் சமதை சொல்லக்கூடாது - என்றவாறு. (உ)

புவிபொருப்புடன்மரங்கள் புன்மூளைத்தோற்றிமம்போற்
பவமறுமனையதீர்த்தம் படியுமத்தடத்துண்மூழ்கித்
தவமுனியரனைப்போற்றத் தந்திடுமின்பமோக்கங்
கவனவக்கினியிற்பாவங் கடிந்திடுமொருங்கின்மன்னோ.

போ + ரை.

பூமியும்; மலையும்; மரமும்; புல்லின் முனையிற்றோன்றுகின்ற பனித்துளியிலடங்கிக்காண்பதுபோலே பாவங்கள் எல்லா நீங்கிப்போகின்ற தீர்த்தநிறைந்த அந்த அகோரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தவஞ்செய்கின்ற முனிவர்களாலே துதிக்கின்றகாலத்தில் மோக்ஷ இன்பத்தையும் கொடுக்கின்றது. காட்டுத்தீயைப்போலே ஆடுகின்றவர்கள் வினைகளைச்சேரவே எல்லாம் களையவல்லதாகும் – என்றவாறு. (௩)

மும்மலங்கெடுக்குஞ்சீவன் முத்தியுங்கொடுக்குந்தீமை
தும்பிடுமருள்பெற்றோங்கித் தொக்கிடுஞ்சுழுனைச்சோதிப்
பொம்மல்கொளானந்தத்திற் புணர்ந்திடவியற்றும்மூல
மும்மதக்களிற்றைக்காட்டு மூழ்கவிக்கயத்துண்மாதோ.

போ + ரை.

ஆணவ, காமிய, மாயையென்று மூன்று மலங்களையும் நீக்கும்; சீவன் முத்தியையும் கொடுக்கும்; பாவங்களை விடுவிக்கும்; ஈசுவரபிரசாதத்தினாலே சுழுமுனை திறந்து பொலிவுபெற்ற அகண்டசோதியிலும் சேரச்செய்யும், மூலாதாரத்திலிருக்கின்ற மும்மதங்களையுடைய கணேசரையுங் காண்பிவிக்கும் இந்த அகோரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் - என்றவாறு. (௪)

வேறு.

அரனார்சொத்துக்காசித்த வையன்ஞாளிமுகமாகித்
தரணிமருவும்வெவ்வேறு தீர்த்தம்படிந்துந்தணவாமன்
மரபுநீவிப்பலநாட்பின் வந்தேயகோரதீர்த்தத்துட்
சிரமேபடிந்துந்தெரிசித்துந் தீர்ந்துசுகமும்பெற்றானால்.

பொ + ரை.

ஒரு பிராம்மணன் சிவபெருமான் சொத்துக்கு ஆவல்கொண்டு - நாய் ஜென்மமடைந்து பூலோகத்திலுள்ள ஸ்தலங்களிலுள்ள புண்ணியதீர்த்தங் களெல்லாம் போய் ஸ்நாநம் பண்ணியும், நீங்காமல் குலங்கெட்டு வெகுநாட் சென்றபின்பு சென்று அகோரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து தெரிசித்ததி ஞல் நாய்முகம்தீர்ந்து இம்மையிலே சுகமும் மறுமையிலே முத்தியுமடைந் தான் - என்றவாறு. (௫)

ஈசன்கோயிலரமகளை யிச்சித்தரசன்கிளிமுகமாய்த்
தேசுநீங்கித்தலங்களெலாஞ் சென்றுதீராதிதுகேட்டு
வாசமலிந்தநீர்த்தடத்து வநதுபடிந்தேழிருடீசன்
கேசமௌலிப்பதம்போற்றிக் கிள்ளைத்தலைதீர்ந்தரசாண்
டான்.

பொ +ரை.

சிவபெருமான் கோயிற்கைங்கரியஞ் செய்கின்ற ருத்திர கணிகையை யிச்சைப்பட்ட ஒரு அரசன் கிளிமுகத்தையடைந்து தன் ஒளிநீங்கி அநேகம் தீர்த்தங்களிலாடியும் தீராமல் இத்தீர்த்தத்தின் பெருமையெல்லாங் கேழ் விப்பட்டுப் பரிமளமிகுந்த இந்த குண்டதீர்த்தத்தில் ஸ்நாநம்பண்ணி ஸப்த ரிஷீசராகிய சடாமகுடத்தை யுடையவரைத்துதித்து தன் கிளித்தலை தீர்ந் து அரசாட்சி செய்து வாழ்ந்தான் - என்றவாறு. (௬)

புரமூன்னெரியச்சிரித்தோன்றன் பொன்னின்மவுலியிரத்தி
னத்தைப்
பெருகவிலைக்குக்கொள்வணிகன் பெற்றவிழிகளற்ருன்பின்
பொருமியேகியலைந்தெங்கும் போக்கிலாமலவன்றலையூர்ப்
பரமன்குண்டப்புனல்படிந்து பழயவிழிபெற்றருளடைந்
தான்.

பொ + உரை.

திரிபுரானை யெரித்தருளிய சிவபெருமானது பொன்ஞலாகிய ரெத்னகி ரீடத்தைப்பெருவிலைக்குவாங்கிய ஒரு வசியன் தன்கண்களிழந்து பின்புதே ம்பித்திரிந்து சென்று எந்தவிடங்களிலுந்தீராமல் அவன் திருத்தலையூரில் அகோரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து முன்போற் கண்களைப்பெற்று அவன ருளையும் பெற்ருன் - என்றவாறு. (௭)

வேறு.

மட்டருந்திவெண்டுகிறனைத் திருடியும்மதுவுண்
டிட்டுணுக்கமுற்றோர்களு மொருவிலாவினையோர்
வட்டவன்முலைமங்கையின் மயங்கியேதுடரு
மட்டகாசருமாடிட வகன்றிடுங்கயத்தே.

பொ + உரை.

கள்ளைக்குடித்தும்; வெள்ளைவஸ்திரங்களைத்திருடியும்; சாராயமுங்குடித்து உள்ளம் நடுங்கியவர்களும் நீங்காதவியாதியையுடையவரும்; வட்டமாகியகுதுக்காய்போலும் தனங்களையுடைய ஸ்திரீகளிடத்தில் மயக்கத்தையடைந்து தொடரும் பெருநகையையுடையவரும்; இந்த அகோரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்யில் விலகிப்போகும் - என்றவாறு. (அ)

குக்கிமண்டிடக்குடிகெடுத் தவரொருவற்குங்
கொக்கினன்னமுமளித்திடார் குன்மர்கள்வன்னி
வைக்குமன்னவன்மதிகெடும் பயித்தியவகையோர்
ஒக்கவிக்கயத்தாடிட லொழிவதுநிசமே.

பொ + ரை.

வயிறெரியும்படி யொருவரைக் குடிகெடுத்தவரும், ஒருவருக்காயினும் மாங்காயவ்வளவு அன்னங்கொடுக்காதவரும், குட்டமுதலாகிய வியாதியுடையவர்களும், வீட்டில் அக்கினிவைத்தவரும், புத்திகேடாகிய பயித்தியவகையோர்களும், இவர் எல்லோரும் இந்தஓமகுண்டதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்யில் நீங்குவது உண்மையாகும் - என்றவாறு. (௯)

ஏரித்திண்கரையுடைப்பவ ரடையுநீரிழிவும்
போரிற்கோவினைக்கைவிடும் மகோதரப்புன்கண்
நாரிக்கீந்திடும்பாகனு ரடியரைநகுவோன்
பூரிக்கிடநோயும்படு மாடியபொழுதே.

பொ + ரை.

ஏரி குளங்களின் கரையையுடைக்கின்றவரடைந்த நீரடைப்பும், யுத்தத்தில் ராசாவைக் கைநழுவவிடுகின்றவர்களடையும் மகோதரமும், வாமபாகத்தைத் தேவியாருக்குக் கொடுத்தருளிய சிவபெருமானடியாரை நிந்தித்தவரடைகின்ற மிகுதியாகிய புழுக்கள் நெளிகின்ற வியாதியும், அகோரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்தால் நீங்கும் அப்பொழுதே - என்றவாறு. (௰)

தந்தைதாய்குரு தாரவத் திகளொடுவேத
நிந்தைகோவளத்துரோகவ த்தியுஞ்சிசு நீக்கன்
முந்தைபஞ்சமாப்பாதகங் கண்முதனீங்கு
மெந்தைமுன்றிலகோரதீர்த் தத்தின்மூழ்கினர்க்கே.

பொழி + ரை.

தகப்பனுர், தாயார், ஆசாரியர், பத்நி இவர்கள் கொலேயும், வேதநிந்தையின் தோஷமும், பசுவினைக்கொல்கின்ற கெடுதலாகியஹத்தியும், சிசுஹத்தியும், பழமையாகவருகின்ற பஞ்சமகாபாதகங்களும், எமது பிதாவான சிவபெருமான் சந்நிதியிலாகிய அகோரதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்யில் நீங்கும் - என்றவாறு. (௰௧)

ஏவறுட்டனும்பில்லிபை சாசங்களென்னுந்
தாவில்சாகினிடாகினி பிரமராக்கதமுந்
தேவன்முன்முறைப்பாடுக டிருட்டியோமனுமே
கூவியோடிடுமிவ்வகோ ரத்தின்மூழ்குநர்க்கே.

பொ + ரை.

ஏவல்களும், துஷ்டக்ரகமும், பில்லி சூனியங்களும், பிசாசுகளாகிய இடமில்லாத சாகினி டாகினிகளும், பிரமராட்சசங்களும், தெய்வத்தின் முறைப்பாடும், திருஷ்டியும், ஓமல்களும், இந்த அகோரகுண்டதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்தால் கூக்குரலிட்டு ஓடிப்போகும் - என்றவாறு. (௰௨)

அருணன்முன்னெழுந்தாடிட வச்சுவமேதம்
பெருகுமிந்திரைநோக்கிடும் பிரமமாம்பகலி
லுருவுதோய்ந்திடவந்தியின் மூழ்கினேரொருவா
திரதிபோகமுற்றிடுவரா லிதன்றகைபெரிதே.

பொழி — ரை.

அருணோதயத்தின் முன்னெழுந்து ஸ்நாநஞ்செய்யில் அசுவமேதபலனுண்டாகும் மத்தியானத்தில் ஸ்நாநஞ்செய்தால் லக்ஷ்மீகடாட்சமுண்டாம் சாயரட்சாகாலத்தில் ஸ்நாநஞ்செய்தால் மன்மதனும் ரதிதேவியும்போல போகபோக்கியத்தை யனுபவிப்பார். ஆதலால் இந்த அகோர தீர்த்தத்தின் பெருமை மேலானதாகும் - என்றவாறு. (௰௩)

வேணியோணமும்படியயம் மூழ்குவோர்வினைகள்
நாணியோடிடுமைந்திலீ ரைம்முறைநண்ணிப்
பாணிதோய்ந்திடிற் பரவுமெய்ஞ்ஞாநமீரெட்டில்
வாணிநாவினில்வந்தவர் மகிபுரந்தாள்வார்.

பொ — ரை.

ஈசன் சடையிலணிந்த கங்காநதியும் படிகின்ற குண்டதீர்த்தத்தில் ஐந்துதடவை ஸ்நாநஞ்செய்யில் வியாதிகளெல்லாம் வெட்கியோடும் பத்து ஸ்நாநஞ்செய்தால் பிர்ம்மஞாநமுண்டாகும் பதினாறுதடவை ஸ்நாநஞ்செய்யில் ஸரஸ்வதிகடாட்சமுண்டாகி உலகத்தை ஒருகுடையிலரசாட்சி செய்வர் - என்றவாறு. (௰௪)

பந்தபாசமற்றிடுங்குண்ட நீரினுட்படிந்தே
சிந்தமொன்றிவிபூதிருத் திராக்கம்மெய்செறித்து
மெந்தைகோயிலையிடம்வலஞ் சூழ்ந்துமுன்வணங்க
நந்தியேறுபுநாரிபங் காளர்வந்தருள்வார்.

பொழி — ரை.

பந்தமாகிய ஆசாபாசங்களை நீக்குகின்ற அக்கிகுண்டதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து விபூதிருத்திராட்சங்களைத் தேகம்முழுவதுந்தரித்து ஏகாக்கிரசித்தத்துடனே யெமது பிதாவாகிய ஸப்தரிஷீசுவரராலயத்தை ஸோமசூத்திரவிதிப்படி வலஞ்செய்வோர்களுக்கு தேவியாரைப்பாகத்தில் வைத்தருளிய பெருமான் இடபாரூடராய் எழுந்தருளிவந்தருள்செய்வார் - என்றவாறு. (௰௫)

குடத்தின்செங்கதிர்கொள்ளவெண் மதிமகத்துறைய
மிடற்றிலாலம்வைத்திடுமவன் புனல்விளையாடி
நடத்துந்தெப்பவிழாவினி னளினன்மாலமரர்
தொடர்ச்சியாமதுகண்டவர் தோய்வர்செம்பதமே.

பொழி — ரை.

சூரியன் கும்பராசியிற்சேர்ந்த மாசிமாதத்திலும் பௌர்ணமியிற்சேர்ந்த மகாநட்சத்திரத்திலும் நீலகண்டமூர்த்தியாகிய ஸப்தரிஷீசுவரர் நீர்விளையாடல்செய்து நடத்துகின்ற தெப்போத்ஸவத்திலும் பிரமதேவர், மகாவிஷ்ணு, தேவர்களுந்தொடர்கின்ற அந்தத்தெப்போத்ஸவத்தைத் தெரிசனஞ்செய்தவர் எல்லாப்பதங்களுமடைவார் - என்றவாறு. (௰௬)

பவமறும்புனன்மூழ்கியே பசுபுவிபொன்னு
நவரத்தினமாடையு நல்கினுவலத்தைத்
தவமிகுந்தவர்க்கீந்திடும் பயன்றனினிமிர்ந்து
சிவபதங்களைகாணியாய்ச் சிறந்திடுமவர்க்கே.

பொழி + ரை.

பாபங்களை நீக்குகின்ற அந்த அகோரகுண்டத்தில் ஸ்நாநஞ்செய்து பசுமாடும், பூமியும், ஸ்வர்ணமும், நவரத்நமும், வஸ்திரமும், தானஞ்செய்தால் சம்புத்தீவாகிய இந்த பூமிமுழுதும் தவமிகுந்த பிர்ம்மநிஷ்டர்களுக்குக் கொடுக்கின்ற புண்ணியத்தைப்போலே புண்ணியம் மேலிட்டுச் சிவபதவியே உரிமையாகிச் சிறப்பையடையும். அப்படிச்செய்வோர்க்கு - என்றவாறு (௰௭)

அத்தலத்துரோமங்களை யகற்றிநீராடிச்
சத்தமாமுனியீசன்முன் றருப்பணமீசா
னத்தராதியீரெழுபதந் திலோதகநாடிற்
கொத்தொடுங்குலங்கும்பிவிட் டடைகுவர்பதமே.

பொழி + ரை.

அந்த திருத்தலையூரென்னுந் தலத்திலே க்ஷௌரஞ்செய்துகொண்டு ஸ்நாநஞ்செய்து ஸப்தரிஷீசுவர் சந்நிதியிலுள்ள அகோர தீர்த்தக்கரையில் பிதிரர்களை யுத்தேசித்து ஈசானாதி சதுர்தெசபாதங்களில் தர்ப்பணத்தைத் திலோதகத்தாற் செய்தால் அவர் குடும்பமுங் குலமும் நரகத்தைத் தாண்டி நற்கதியடைவார் - என்றவாறு. (௰௮)

தவமுனியிந்தவாறு சாற்றியேபின்னிதன்மேற்
சிவமுகமைந்தாற்பொங்கிச் சிதறிநாவலத்திழிந்து
பவமகற்றிடுமையாற்றின் பண்புரைத்திடவைவோரு
நவநிதியடைந்தார்போலக் கேட்டனர்நகையினன்றே.

பொ + ரை.

தால்ப்யமுனிவ ரிந்தவிதஞ்சொல்லி இதன்மேலாகிய பஞ்சமுகங்களினின்றும் பெருகிச்சிந்திச்சதுரகிரியினின்றிறங்கிப் பாவங்களை நீக்குகின்ற ஐயாற்றினது பெருமையைச்சொல்ல ஆரம்பிவிக்கவும் நவநிதியைப் பெற்றவர்கள் போலே பஞ்சபாண்டவர்களும் களிப்புடனே கேட்கத்தொடங்கினர் - என்றவாறு. (௰௯)

௩-வது. அகோராக்கினிகுண்டதீர்த்தமகிமை யுரைத்தவத்தியாயம்
முற்றிற்று. ஆக ௱௱௫.



வேறு.

மாசிடும்பிரயாகையுண் மூழ்கிடமகரந்
தேசுகங்கையிற்றோய்ந்திடச் சோணபத்திரையி
லேசில்சிங்கத்திலாடிடப் பெற்றவரிருமை
பேசுமன்னவராக்கினே யத்தைடைபேறும்.

பொழி + ரை.

பிரயாகையில் மாசி மாதத்தில் ஸ்நாநஞ்செய்யவும், கங்கையில் தை மாதத்தில் ஸ்நாநஞ்செய்யவும், சோணபத்திரையில் ஆவணி மாதத்தில் ஸ்நாநஞ்செய்யவும், பெற்றவர் பெருமைகளை ஆக்நேயபுராணத்தில் அவர்கள் பதவிகளையும் சொல்லப்படும் - என்றவாறு. (க)

கடகபானுவிற்கடுகுகோ தாவிரியாறுங்
குடகுசெல்லுங்கோலிரவியிற் காவிரிநதியும்
வடகசுன்னியிற்பெண்ணைமார் கழியினில்வேணி
குடமுலாமிரவியும்படி வார்முதுகுன்றம்.

பொழி + ரை.

கடகரவியில் விரைந்துசெல்கின்ற கோதாவிரிநதியும், மேற்கிலிருந்தோடுகின்ற துலாரவியில் காவேரிநதியும், உல்லாசமாகிய கன்னிரவியில் கிருஷ்ணவேணிநதியும், கும்பரவியில் விருத்தாசலத்தில் மணிமுத்தாநதியிலும் ஸ்நாநஞ்செய்வார் - என்றவாறு. (உ)

மேடத்திங்களிற்றாமிர பருணியும்விசாக
மாடகங்கொழித்திடுநந்தி யசலத்திற்பாலி
மூடமோவியவாலவா யாவணிமூலந்
தோடகம்மலிவைகையிற் றோய்ந்திடும்பயனும்.

போ + ரை.

மெஷரவியில் தாமிரபருணி நதியும், விருஷபரவியில் சொர்னம் வீளகின்ற நந்தி மலையினிடத்திற் பாலிநதியும், தமிழ்ச்சங்கநீங்காத மதுரையில் வைகை நதியில் சிங்கரவிமூலத்திலும் ஸ்நானஞ்செய்த பலனும் - என்றவாறு. குளகம். (௩)

மீனவாதித்தனுத்திரத் தடையுவெள்ளாறு
மூனமற்றகார்த்திகையினிற் கருடவாற்றுறைவும்
பேனமோடலைபெருகுஞ்சே யாற்றினில்வாணி
ஞானமிக்குகம்பானதி யாடியநலனும்

பொழி — ரை.

மீனரவியில் உத்திரம் சேர்ந்ததினத்தில் சுவேதநதியும்; குறைவில்லாத கிருத்திகாரவியில் கருடநதியும்; நுரைகளோடும் அலைவீசுகின்ற சேயாற்றிலும்; வாக்கும், ஞானமும் கொடுக்கின்ற கம்பாநதியும் இவைகளில் ஸ்நாநஞ்செய்த பலனும் - என்றவாறு. குளகம். (௪)

அமரர்தேசிகனரிதனி லேறுமாசியினிற்
கமலம்விள்ளுஞ்செங்கதிர்மக நாளினிற்குடந்தை
சமமவ்வோணமுந்தலையுவாப் பதம்பினருக்கன்
இமயிலாமதிகூடிரா மேச்சுரந்தோய்வும்.

பொழி + ரை.

வியாழபகவான் சிம்மராசிக்குவரும் மாசிமாதத்தில் தாமரையை மலர்விக்கின்ற சூரியவாரம்சேர்ந்த மகத்தில் கும்பகோணத்திலும், திருவோணத்தின்நடுவும் பௌர்ணமியின் முன்னும் வியதீபாதத்தின்கடையும் சூரியனும் சந்திரனுங்கூடிய தினத்தில் இராமேசுரத்திலும், ஸ்நாநஞ்செய்தபலனும் - என்றவாறு. குளகம். (௫)

அப்பயன்களெல்லாமருள் செய்திடுமையாற்
றுப்புனலொருமுறையினிற் றோயமேலோர்பாற்
செப்பருங்கலைஞாநவீ டுறைந்தவர்செல்வ
மொப்பொணாதெனவுரைத்தனன் பாண்டவர்க்குவந்தே.

பொ + ரை.

அந்தநதிகளில் ஸ்நாநஞ்செய்த பலன்களெல்லாம் ஐயாற்றில் ஒருதரம் ஸ்நாநம்செய்யில் தந்தருளும் அதுவுமல்லாமல் பெரியோரிடத்தில் உபதேசம்பெற்றுச்செல்லுதற்கரிதான கலைக்ஞாங்களையடைந்து மோட்சத்தையும் சேர்கின்ற அவர்கள் சிவானுபூதியைச்சமதை சொல்லப்படாதென்று பாண்டவருக்குத் தால்ப்பியமுனிவர் சொன்னார் - என்றவாறு. (௬)

சருவமாதுருநான்மறை யம்மறைதனக்குக்
குருவதாகுங்காயத்திரி கொள்ளும்வேதியர்க
ளுருமுன்னுன்குசகத்திரங் கிருச்சிரமொன்றாய்
வருவதாற்பஞ்சபாதக நீங்கிடும்மன்றே.

ஸகலங்களுக்கும்வேதம் மாதா அந்தவேதங்களுக்கு மாதா காயத்திரி அது உபதேசம்பெற்றவர் பிராம்மணர் அவர்கள் பன்னீராயிரம் உருச்செபி த்தல் ஒருகிருச்சிரம் ஆகும் அந்தப்பலன் ஈங்குண்டாவதனால் பஞ்சமகாபா தங்களும் நீங்கும் - என்றவாறு. (எ)

அந்தமாநதிமூழ்கிட வப்பலனைந்தாஞ்
சந்தமாயுகிர்கோடும்பொன் சாத்தியாவொன்று
தந்தவப்பலனைந்தரும் பிடுமையாற்றதனிற்
றெருந்தஞ்செய்திடவென்றனர் சோதிதாற்பியரே.

போ + ரை.

அழகையுடைய ஐயாற்றில் ஸ்நாநஞ்செய்யில் அந்த கிருச்சிரம் ஐந்து கொண்டபலனைத்தரும் அலங்காரமாகக் கொம்பும் குளம்பும் சொர்னத் தாற்செய்த ஒரு பசுவைக்கொடுத்தலாலாகிய பலனையும் கொடுக்கும். ஐயாற் றுத்தீர்த்தத்தில் சரீரசம்பந்தத்தினல் என்று பாண்டவர்க்குத் தால்ப்யமு னிவர் சொன்னர் - என்றவாறு. (அ)

பொன்னருவியையாற்றினின் புனல்படிந்திட்டே
மின்னணிந்தமெய்யீசனை வேண்டியேபணிவோன்
றன்னிறையொருதட்டினி லாடகங்குவித்துப்
பன்னுமாமறையவற் களித்திடும்பயனுமால்.

போ + ரை.

சொர்னத்தை அரித்தோடுகின்ற ஐயாற்றின் இனிய தீர்த்தத்தில்ஸ்நா நஞ்செய்து தேவியாரைத்திருமேனியில் வைத்தஸப்தரிஷீசுவரரைத்தியா னித்து வழிபாடுசெய்பவனது மாட்சிமையானது தன்னையும், பொன்னையும் ஒருதட்டில் நிறைசெய்து அத்தியயனஞ்செய்த பிராம்மணனுக்குக்கொடுத்த தினலாகியபலனாகும் - என்றவாறு (கூ)

ஆயிரத்திருநூறெனுங் கழஞ்சியா டகத்தாற்
றூயநற்பசு வமைத்ததுட்புக்குபு செனித்தே
யீயுமப்பய னிப்புனன் மூழ்கவே யெள்ளா
காயமட்டறக் கூப்பிச்செய் தானமுங் கடுக்கும்.

போ + ரை.

ஆயிரத்திருநூறு கழஞ்சியென்னும் பதினாலாயிரத்தினூறு பணவி டைப்பொன்னினல் பரிசுத்தமாகிய நல்லபசுவைச்செய்து அதற்குட்புகுந் து வெளிவந்து அதைத்தானஞ்செய்கின்ற பலனையிந்த ஐயாற்றில் ஸ்நான,

ஞ்செய்தால் கொடுக்கும் அல்லாமலும் ஆகாயமட்டும் எட்குவியலைக்கொட் டித்தானஞ்செய்வதினலாகும் பலனையுமொப்பாகும் - என்றவாறு. (௰)

திங்கள்வாரத்திற் றலையுவாச் சேரிற்பிப்பலத்தைத்
தங்கியேபணிந் திடம்வலம் வரும்பலன் ருனும்
துங்க மாம்பிர தோடஞ்செய் சோமசூத்திரமும்
பங்கையத்தினை யாற்றிலா டியபய னுமால்.

போ + ரை.

சோமவாரமும், அமாவாசையுஞ்சேர்ந்ததினத்தில் அசுவத்தமரத்தை நமஸ்கரித்துப்பிரதட்சணம்செய்தபலனும், மேலாகிய பிரதோஷகாலத்தில் ஸோமசூத்திரப்பிரதட்சிணபலனும், தாமரை மலர்கின்ற ஐயாற்றில் ஸ்நாந ஞ்செய்த பலனேயாகும் - என்றவாறு. (௰௧)

வேறு.

திண்டேரேறும்பகீரதனுற்செய்யுந் தானந்தனைவாங்கிக்
கொண்டேபோமந்தணன் வெகுநாட்கோரவலகையாய்த்தி
ரிந்தோர்
பெண்டேபிடித்துப்பிரியாமற் பேதையெங்குமலைந்துபினர்ப்
பண்டேவருகுமையாற்றிற்படியப் பழமையாகினளால்.

போ + ரை.

வலியதேரிலேறுகின்ற பகீரதமகாராஜாவினுற் செய்கின்ற தானத்தை வாங்கிக்கொண்ட பிராம்மணன் பலநாள்வரையில் பிசாசுருவமெடுத்துத் திரிந்து ஒரு பெண்மகளைப்பிடித்துத் தன்னையெப்போது நீங்காததாகி அப் பெண்மகள் பின்பு பழமையாகவே வருகின்ற ஐயாற்றில் ஸ்நாநம் செய்தபி ன் பழய தனது ஸ்வரூபத்தை யடைந்தாள் - என்றவாறு. (௰௨)

வேறு.

அந்தின்மாநதிமரபறைந் திட்டவம்முனியும்
நந்தியேறுசத்திருடியீ சன்னிடநயந்த
தந்திமத்தகத்தனக்குங்கு மாம்பிகையார்த
முந்திமாண்பையுமுரைத்திடக் கேட்டனரன்றே.

போ + ரை.

அவ்விடத்திலாகிய ஐயாற்றினது கிரமத்தைச்சொல்கின்ற வம்முனிவ ரும், இடபத்திலேறுகின்ற சிவபெருமானிடப்பாகத்தில் பேராசையடைந்த

யானை மஸ்தகம்போலே ஸ்தனங்களையுடைய ஸ்ரீகுங்குமாம்பிகைத்தேவியா ரது மேலான பெருமையையுஞ் சொல்லவே பாண்டவர்கள் கேட்கின்றார் கள் - என்றவாறு. (௰௬)

## ௰-வது ஐயாற்றின்விசேடமுரைத்தவத்தியாயம் முற்றிற்று. ஆ ௬௫௪.



## ௰௧-வது தேவியார் மகிமை தெரித்த வத்தியாயம்.

வேறு.

*சோலைமா டத்துஞ் மாதா தூங்குமஞ்சத்திலன்பர்*
*லீலையா லுறுத்துபூணுமிரத்தின வாரம்பச்சை*
*மாலையும்வீசவீதி மாடெலாம் பரவத்தங்கள்*
*சேலையைக்கொடியிற்கட்டுந் திருத்தலையூராமன்றே.*

பொ + ரை.

பூஞ்சோலைசூழ்ந்த உபரிகையின்மீது தொங்குகின்ற ஊசலிலே தனது அன்பரோடுஞ் செய்கின்ற மதனலீலையில் உறுத்துகின்றதென்று பொன்னா பரணமும், இரத்நஹாரமும், மரகதமணிமாலையும், எறிந்து வீதிப்பக்கங்க ளெல்லாமிறைந்திருக்கவும், ஸ்திரீகள் தங்கள் உயர்ந்தசேலைகளைத் துவசக் கொடியிற்கட்டுகின்ற அவ்வளவு செல்வவளமிருந்ததாகும் திருத்தலையூர் - என்றவாறு. (௧)

*அப்பதியுமையாளால மணிமிடற்றரனைநோக்கி*
*யெப்பொழுதினுமோவில்லா வீசனின்னன்றியுண்டோ*
*செப்பருநித்தியச்சிற் சொருபத்தின்செம்மலெற்குத்*
*தப்பறவருள்விரென்னச் சங்கரன்சாற்றலுற்றான்.*

பொழி + ரை.

அந்தஸ்தலத்திலெழுந்தருளிய குங்குமாம்பிகைத்தேவியார்காளகண்ட மூர்த்தியாகிய ஸப்தரிஷீசரை நோக்கி எந்தகாலத்திலும் அழிவில்லாமலி ருக்கின்ற நாதன் உம்மையல்லாமலொருவரிருக்கின்றார்களோ இல்லையே நீ ரே ஆதலால்சொல்லுதற்கரிதான நித்தியமாகிய சிற்சொருபலட்சணப்பெரு மையைச் சொல்லவேண்டுமென்று கேட்கவே சிவபெருமான் சொல்லத் தொடங்கினார் - என்றவாறு. (௨)

வேறு.

அண்டமென்னுமிவற்றுளெம் பூதத்தான்யாவும்வளர்ந்தோங்கி
மிண்டன் மண்ணொன்றதிற்பத்து மேவுமுதகநூறுதிறங்
கண்டவழல்காலாயிரம்வான் கந்தமயுதமாநிறைந்த
வண்டமெண்டிக்கனைத்துமொன்று யிருப்பேமியாமென்
றுரைத்தனனால்.

போ + ரை.

உலகமாகிய இந்த பிரபஞ்சபேதங்களில் பஞ்சபூதங்களினால் பிரபஞ்ச சிருட்டியின் சமஷ்டியில்கடினமாகிய மண் ஒருபங்கும், அதிலே நீர் பத்துப் பங்கும்; அக்கினி நூறுபங்கும், வாயு ஆயிரம்பங்கும், ஆகாசம் பதினாயிரம் மடங்கும் நிறைந்திருக்கின்ற நாமரூபப்பிரபஞ்சயாகிய அண்டகோடிகளும், அஷ்டதிக்குகளும், எல்லாம் ஒன்றாகி நாமே யெங்கு நிறைந்திருக்கிறோ மென்றார் - என்றவாறு. (௩)

சார்ந்தமண்ணீரழல்காற்றுந் தனியாமாகாயங்களிவை
யார்ந்தபிண்டமாயமைந்த வைந்துமொன்றுக்கெட்டாகிக்
கூர்ந்தநாலுந்தானாகிக்கோச நாலுமறுநான்கிற்
சேர்ந்துவிடயமுதித்தெழும்புஞ் சீவன்முத்தர்க்கேலாவே.

போ + உரை.

அடைகின்ற ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி இந்தப்பூதங்கள் ஐந்தும் பிண்டமாகியும், உள்ளவதிலுட்பிரிவாகிய பூதமொவ்வொன்றுக்கு எட்டுப்பங்காகி விரும்பிய அதில் நான்குபங்கும் தானாகிய கோசங்களைந்தும் இருபத்துநான்கு தத்துவங்களாய்ச்சேர்ந்து அஸ்தியாதி மோகபரியந்தமுள்ள புறக்கருவியாகிய இருபத்தைந்தும், உளக்கருவியாகிய ஞாதாதியுபஸ்தபரியந்தமிருபத்தைந்தும், இப்படிக்காகிய விடயங்களுற்பத்தியாகி அவித்தையினாலே ஆவரண மாயபிரபஞ்சத்தைத்தானென்று தோற்றிவைக்கும் இந்த ஆவரணமென்கிற விடயங்கள் நம் ஜீவன் முத்தர்களைச்சேராது - என்றவாறு. (௪)

சோதிவடிவேபிரமமதுதோய்ந்தான் மாயைதனிலீசன்
ஆதியுலகமாயனைத்துமவித்தை சீவனானதுவால்
கோதில்சிவகாரணத்தினின்மூக் குணமும்பிரபஞ்சமுநாசம்
நீதிசிவகாரணத்தினின்ற கரணமொரோசம்.

போ + ரை.

சோதியாகிய பிர்ம்மசொரூபத்தினிடத்திலே மாயாபிரதிபலிதமுண்டாகில் ஈசுவரன் ஸகலலோக பிரபஞ்ச சீவராசிகளுந்தானென்கின்றது.

அவித்தையே சீவனுக்குக்காரணமாதலால் குற்றமில்லாத ஈசுவர காரணத்திலே திரிகுணுதி பிரபஞ்சநாசம் - சீவகாரணத்திறைலே அந்தக்கரணங்கள் முதலான விட்சேபம்நாசம் - என்றவாறு. (ரு)

ஈசன்றனக்குத் தூலவுடலீரேழுலகமென்னும் விராட்
டேசிலாச்சூக் குமவுடல மிரணியகற்பஞ் சீவனுக்கே
தேசினறிவிலுதித்த மனஞ்சேர்ந்த ஞாநகருமங்கள்
கேசமெலும்பு புறக்கருவிகேளீர் தூலவுடலாமால்

பொ + ரை.

அந்த ஈசுவரனுக்கு ஈரேழுலகங்களே ஸ்தூலவுடலாகியவிராட்டென்னப்படும். குற்றமில்லாத சூட்சுமசரீரம் சீவர்களைசிருஷ்டிக்கின்றபிர்ம்மதேவனென்னும் ஹிரண்ய கெற்பனுகும். அந்த சிருஷ்டியிலகப்பட்ட சீவனுக்குஸ்தூலவுடலானது புறக்கருவியாகிய மயிர், தோல், மாம்ஸம், நரம்பு, எலும்பு முதலான மோகபரியந்தமேயாகும் - என்றவாறு. (சு)

ஐந்துகுகையாஞ் சீவனுக்கே யன்னமயங்க ளதின்பேரண் மண்
ணைந்தும் மேல்சூக்குமமதின்மே லாகுங்கார ணம்மெனவும்
வந்தவவியத் தம்மேலாமதின்மேற்சுத்த மாமகத்திற்
றிருந்தஞ் செய்சைதன்னியத்திற் சுத்தந்தானே பரிசுத்தம்.

பொ + ரை.

சீவனுக்கு ஸூக்ஷ்மசரீரமாவது தன்னிற் பிரகாசிக்கின்ற அறிவினுண்டான அந்தக்கரணம் நாலு, சுரோத்திராதியிந்திரியம் ஐந்து, இந்த இருபத்தினென்குமாகும். பிண்டமாகிய ஜீவனுக்கு ஆநந்தமயமுதலாகிய அன்னமயபரியந்தம் ஐந்துகுகைகளாகும். அந்த அன்னமயமே பிருதிவியினுலேயாகையால் கோசங்கள் ஐந்திற்கும் பிருதிவியாதிபஞ்சபூதஸ்தூலம் பெரிது. இந்தஸ்தூலத்தை ஸூக்ஷ்மசரீரம் வியாபித்திருப்பதினுலே சூட்சுமமாகிய ஹிரண்யகற்பமே பெரிதாகும். அதைக்காரணம்வியாபித்திருப்பதினுலேகாரணமே பெரிதாகும். அதில் அவ்வியாகிருதம் பெரிதாகும். அந்த அவ்வியாகிருதத்தை மகாகாரணமாகிய ஜீவஅவியக்தம் வியாபித்திருப்பதினுலே அவ்வியக்தமே பெரிதாகும். அந்த அவ்வியக்தத்தைச் சுத்தபூதம்வியாப்பியமானபடியினுலே அந்தசுத்தமென்னும்மகத்தே பெரிதாகும். அந்த மகத்தைச் சைதன்னியம் வியாபித்திருப்பதினுலே மகத்துக்கும் மகத்தே பரிசுத்தமாகுமென்று சொன்னர் உமாதேவிக்கு ஈசுவரன் - என்றவாறு. (எ)

குகையைந்தென்றீர் சீவனுக்குங்குகைக்குமேலாம் விராட்
டென்றீர்
சிகையிரணிய கருப்பமென்றீர் செப்பிமேலவ் வியாகிருதந்
தொகையவ்வியத்தமதின்மேலாஞ் சுததமகத்தேசைதனியத்
தகையுமென்றீரெனவினவுந் தையற்கையர்விரித்துரைப்பார்

பொழி — ரை.

ஜீவனுக்குமேலானது பஞ்சகோசம் பெரிதென்றீர் கோசங்களுக்குப்பெரிது விராட்டென்றீர் அதற்குமேலானது இரணியகற்பமாகிய மனது உதிக்கின்ற பிரமதேவனென்றீர் அதற்குமேலானதுதானெனப்பண்ணுகின்ற விஷ்ணுவென்னும் அவித்தையாகிற அவியாகிருதமென்றீர் இதற்குமேலானது சருவவியாப்பியசிவமாகிய அவியத்தமென்றீர் அதற்கு மேலானது சுத்ததத்வமென்னும் மகத்தென்றீர் ஆகையாற் சுத்ததத்துவமென்னுமகத்தின் பிரபாவங்களைச்சொல்லவேண்டுமென்றுகேட்கின்றதேவியாருக்குச்சிபெருமான் சொல்லத்தொடங்கினார் - என்றவாறு. (அ)

சுத்ததத்து வம்மகத்தைச் சொல்வேமிவ்வண்டம்போலக்
கொத்தமில்லா வண்டங்கள் கோடிபலவா மவற்றின்மே
னித்தமுளவாயிரங்கோடி நீட்சியமுதக்கடனடுவே
துத்திமணித்தீ வொருகோடியகலமாகச்சூழ்நதிடுமால்.

பொ — ரை.

சுத்ததத்துவமென்னும் மகத்தினது இடமும், உருவமும், குணமும் எப்படியென்றால் ஐம்பதுகோடியோசனை விஸ்தீரணமுள்ள இந்த அண்டத்தைப்போலே இன்னம் விஸ்தாரமுள்ள அண்டங்கள் அநேகங்கோடியுண்டு அதுகளுக்கெல்லாம் மேலாகியவிடத்திலே ஆயிரங்கோடியோசனை விஸ்தீரணமுள்ள அமுதக்கடலோடுங்கூடிய அண்டமொன்றுணடு அதன்நடுவே நெருங்கியிருக்கிற மணித்தீபென்று நூறுகோடியோசனை விஸ்தீரணமுள்ளது - என்றவாறு. (க)

அகண்டதீவுட்டருச்சோலை யாடகத்தாலையைந்து
நிகழுமெயில்கோபுரநூறு நீண்மேடைகளும் மணியின்மை
சுகமாம்வாவி நதிதோயச் சூழ்மூன்றிலக்கஞ்சுற்றுன்பான்
அகன்மூண்டகச்சிந்தாமணியின் வீடாயிரமோசனையன்றே.

பொழி + ரை.

விசாலமாகிய மணித்தீவில் கற்பகத்தருக்களநேகமாகவிருக்கும் அந்தச்சோலையிலே பசும்பொன்னுலமைந்திருக்கிற இருபத்தைந்து சுற்றுமதில்க

ளும், நூறுயோசனையுயர்ந்த கோபுரங்களும், விஸ்தாரமாகியமேடைகளும், நவரத்நங்களாலிழைத்தபடிகள்சூழ்ந்த வாவிகளும், அமுதம்வழிந்தோடுகிற நதிகளும், சூழ்ந்த வதின்மத்தியில் மூன்றுலட்சம்யோசனைவிஸ்தாரமுள்ள ஒன்பது சுற்றோடுங்கூடிய தாமரைப்பூவைப்போல விளங்குகிறவதற்குள் ஆயிரம்யோசனை விஸ்தாரமுள்ள சிந்தாமணியாலாகிய வீடொன்றிருக்கு மென்று பின்னும் சிவபெருமான் சொல்லத்தொடங்கினார் - என்றவாறு. (௰)

ஆகுநால்வாய்க்குணதிசையி லாமுநாயங் கோடியிரண்
டாகுங்காம கிரிபீடத்ததனோடெண்மூன் றுயிரரு
மாகுந்தெற்கோரையிரண்டு மதனோடிரண்டு மதிகார
மாகுமதுபூரணபீடத் தெய்துமாறைந் தாயிரமே.

பொழி + ரை.

சகலமுங்கொடுக்கின்ற சிந்தாமணியாலாலாகிய வீட்டிற்கு நாலுவாசலும், அதில் கிழக்குவாசற்காவலாகிய ஆம்நாயசத்திகள் இரண்டுகோடியும் இதற்கு நாற்பத்திரண்டு சத்தியதிகாரமாகிய குருத்திரயாதி யிருபத்தினுலாயிரம் பீடத்தோடுங்கூடிய காமகிரி பீடம்விளங்கும். இதன்றெற்குவாசலாகியவர்கோடி இதற்கும் அதிகாரசத்திகளோடுங்கூடிய முப்பதினுயிரம் பீடத்துடன் பூர்ண கிரிபீடம் விளங்கும் - என்றவாறு. (௰௧)

பின்னுமதனிற் கோடிசத்தி பெற்றுவிளங்குங்குடதிசையின்
மன்னுஞ்சாலந் திரபீட மதனோடெட்டெட் டுறுஞ்சித்தர்
மின்னுமூவாயிரத்தோடு மேலாஞ்சத்தி யொடுங்கோடி
பன்னும்வடபாலிருகோடி பருமொட்டியாண பீடமிதே.

பொழி + ரை.

பின்னரும் அதின்மேல் வாசலில் கோடிசத்திகளும் அதற்கதிகாரியாகிய அறுபத்துநாலுகலைக்ஞானங்களுமுணர்ந்த சித்திசத்தி மூவாயிரம் பீடத்தோடுங்கூடிய ஜாலந்திரபீடம்விளங்கும் - இதின்வடக்குவாசலாகியவர்கள் இரண்டுகோடி சத்திகள் அதிகாரமாகிய மூவாயிரம் பீடத்துடனே யொட்டியாணபீடம் விளங்கும் - என்றவாறு. (௰௨)

உரைத்தவதனோ டொருமூன்றுயிரமூர்த்துவத்திற்பரிவாரந்
துருக்கங்கோடா கோடிசத்தி சூழ்ந்துசுற்றொன்பதனோடு
மிருக்குநூறுயோசனையி னெழிற்சக்கரமு மதினணங்கின்
நெருக்கம்பஞ்சா முறையமெனு நிருபசத்திமும்மூன்றே.

(௱௪௪) தேவியார்மகிமைதெரிந்தவத்தியாயம்.

போ + ரை.

இதனுச்சிக்கோட்டையிலே மூவாயிரஞ்சத்திகளும் பரிவாரம் கோடா கோடிகளோடுஞ் சூழ்ந்துஇருப்பார். அதினுள்ளே ஒன்பது சுற்றோடும் நூறுயோசனை விஸ்தாரமுள்ளதாகிய காந்தியையுடைய சக்கிரமொன்று விளங்கும். அதில் தெய்வங்களின் கூட்டமும் ஆவரணசத்திகள் கோடா கோடிகளும் பஞ்சாமுநாயசத்திகளும் சூழ்ந்திருப்பதல்லாமல் அவர்களுக்க திபராகிய ராஜசத்திகள் ஒன்பது பெயர்களாகும் - என்றவாறு. (௰௩)

அதனுட்கோடியருக்கணைப்போ லமைந்தபீடத்தைவர்களுந்
துதைபமெதுவாகியசுத்தந் துலங்குவடிவுஞ்சொலவொண்ணாச்
சிதமின்பாலாய்ச்சிவயோகஞ் செய்யுந்தொழிலாயமர்ந்திடுநற்
கெதியேயதனைக்கண்டிலதாய்க் கேடின்மகத்தாம்பரமசிவம்.

பொழி + ரை.

அப்படியிருக்கின்ற சக்கிரத்தின் நடுவே கோடிசூரியப்பிரகாசம்போன்ற பீடமானதும் அதில் மஞ்சமாகவே பஞ்சகர்த்தர்களும் விளங்குவார்கள். நெருங்கி மெதுவானதும் சுத்தம் விளங்குகின்ற சௌந்தர்யத்துடனே ஞானமே பெண்வடிவமாய்ச் சிவயோகஞ்செய்யுந் தொழிலாகிச் சுகாநந்தபோகவதியாய்க் காணுதற்கெட்டாத தாய் நித்தியமாய் நிருவிகற்பமாய் சுத்தசத்வமென்றும் மகத்தாய் விளங்கும் பரமசிவம் - என்றவாறு. (௰௪)

தானேதானுயுதித்தொடுங்கு மதுவேநாலுவேதத்துந்
தானேயுரைக்கின்றதுமதுவே சடஞ்சூக்குமமென்பதுமதுவே
தானேகாரணத்துயிர்கட் குயிராய்ப்பிரகாசமுமதுவே
தானேயண்டசராசரமா தாவாய்நிறைந்தெட்டாததுவே.

போ + ரை.

தானேதானுய்த்தோன்றியும் ஒடுங்கியும் நான்குவேதங்களிற் சொன்னதுவும் ஸ்தூலசூக்கும வுயிர்கட்குக்காரணமாகிய வுயிரும் சோதிப்பிரகாசமும் அண்டசராசரங்களுக்கு மாதாவாகி யெங்கும் பரிபூரணமாகி மனோவாக்குகளுக்கெட்டாததுமாகிய பரமேசுவரனுமதுவாகும் - எ + று. (௰௫)

சாவித்திரிகாயத்திரி சம்பற்கரிகுருகுல்
யாவற்புதைபதுமாவதி யையைநரசிங்கி
தேவத்திருநீலக்களி சிரேணுகைதுர்க்கை
காவுக்குரைபரியூர்தியும் நாடும்வெகுகோடி.

போ + ரை.

அப்படி விளங்குகின்ற பராசத்தியினிடத்திலிருக்கின்றவர்கள் சாவித்திரி, காயத்திரி, சம்பத்கரி, குருகுல்யை, அற்புதையாகிய பத்மவதி, பத்திர காளி, நாரசிம்மி,-தெய்வமாகிய நீலகண்டி, இரேணுகை, துர்க்கை, வாக்வாதினி, அசுவரூடி முதலானவர்கள்போல் கோடாகோடி சத்திகளாகும் - என்றவாறு. (கசு)

அணிமாதிக ளுடன்யோகினி யநந்தந்தே ளூர்வோள்
பணியேபுரி யணங்கும்பல பதுமணே கோடி
மணிமாதுடன் மால்கோடிம கேசையரன் கோடி
துணியுக்கிர சதருத்திரர் சூழும்வெகு கோடி.

பொழி + ரை.

சித்துமயமாகிய அணிமாதியஷ்டசித்திமகாசத்திகளுடனே யிருக்கின்ற யோகினி சத்திகள் அனந்தங்கோடி. இரதாரூடிகள் பலகோடி. பணிவிடை ஸ்திரீ சத்திகள் பலகோடி. ஏவற்குரிய சத்திகள் பலகோடி. இதுவல்லாமலும் மேன்மை பெறுவதற்குத் தொழுவோர்களாகிய சரஸ்வதியும், பிரமதேவரும், கோடாகோடி - அழகிய இலட்சுமியுடனே விஷ்ணுவும், கோடி. மாகேசுவரியுடன் மகேசுரர்கோடி. தீர்க்கமாகிய சதருத்ரர்கள் கோடிகளும் சூழ்ந்திருப்பார்கள் - என்றவாறு. (கஎ)

விடவானலங் கணமாதர்கள் விறல்வீரபத் திரியும்
வடுகிகேத் திரபாலியும் மதனன்குமரனுமே
படர்சாத்தனே டெண்பாலகர் பனிமேயான்சுடர் கோடி
கடிமேவிய வெண்பைரவர் கனகின்னரர் கோடி.

போ + ரை.

வடவாக்கினிபோலே கணஸ்திரீகள், வலிமையுடைய வீரபத்திரி, வடுகி, க்ஷேத்திரபாலகி, அஷ்டதிக்பாலகர், சந்திரன், சூரியர், மன்மதன், சுப்பிரம்மணியர், - பூலோகம் காக்கின்ற சாஸ்தா, கோடாகோடிகள் அஷ்டபைரவர், கந்தருவர், கோடாகோடிப்பேர்கள் சூழ்வார்கள் - என்றவாறு (கஅ)

உரகாங்கனே சூர்மாதரு வாவேறுவோர் கோடி
துரகாருடை யருள்வேண்டியே சூழ்சண்மதர் கோடி
வரகாமியர் சிருட்டித்தொழில் வாய்ந்தோர்பல கோடி
கரகாம்புதி கருணூரசங் கண்டோர்வெகு கோடி.

பொழி + ரை.

நாகஸ்திரீகள், தெய்வஸ்திரீகள், கஜாரூடிகள், கோடிப்பேர்கள்; அசுவாரூடிகள், கிருபைக்குவேண்டிப் பணிவிடை செய்கின்ற ஷண்மதஸ்தர்கள் கோடி. வரப்பிரசாதத்தையிச்சித்தவர், சிருஷ்டி காரியம் வேண்டிப்பெற்றவர் கோடி - கங்காப்பிரவாகம்போலும், ஸமுத்திரம்போலும், கிருபாரஸத்தைப் பெற்றவர்கள் கோடிப்பேர் சூழ்ந்திருப்பார்கள். (கக)

அதுவேமகத் ததுவேபரை யதுவேசுத்த மாமே
யதுவேகதி யதுவேபல வண்டந்தரு மாறும்
அதுவேசுழி முனையின்வளி யனுபோகசு வாசத்
துதியாவொரு பண்டாசுர னுறுமாட்சிமை பகர்வாம்.

பொ + ரை.

அவ்வாறு விளங்குகின்ற மகதத்துவமதுவே. பாராசத்தியுமதுவே சுத்தமாகும். அதுவே மோட்சமும், சகல அண்டசராசரங்களுந்தருவதும் அதுவாகிய பராசத்தியின் சுழுமுனையின் மார்க்கமாய் உசுவாச நிசுவாச ஸ்வானுபூதியில் உண்டாகி ஒரு பண்டாசுரனென்றுள்ள அவனது மாட்சிமையைச் சொல்வே னென்று பின்னும் சிவபெருமான் சொல்லத்தொடங்கினர்-என்றவாறு. (உ௰)

வேறு.

ஐம்பான்கோடி யோசனையிவ் வண்டத்தகல்பல் லண்டத்து
டம்பாலண்டத் தளித்தன்முதற் றனையல்லால் வேறில்லென்
றன்பாற்சிவ தயாபரனு யாண்டுபலவாய் நெறிசெலுத்தி
யின்பாற்கணங்கள் சூழ்ந்திருப்ப வெல்லாம்பெற்றன் றரசளிப்பான்.

பொ + ரை.

ஐம்பதுகோடி விஸ்தீரணமாகிய இந்த அண்டத்திலும் விசாலமாகிய பலவண்டங்களுக்குள்ளே தனதாகிய ஒரு அண்டத்தை. ஆக்கல், அளித்தல், அழித்தல். முதலிய தொழில்களைத்தானே செய்து தன்னை யன்றி வேறொரு கர்த்தாவில்லை யென்ற வெண்ணத்துடன் எல்லாப்பிராணிகளிடத்தும் விச்வஸித்ததயையையுடையவனாய் வெகு வருஷம் நீதியுடனே யின்பமயமாகிப் பரிசனர்கள் சூழ்ந்தேவற் செய்ய - முழுவதுமடைந்து ஆண்டிருந்தான் - என்றவாறு. (உக)

அவனினதிக மைந்தர்களு மவருக்கதிக வமைச்சர்களும்
அவரின்வலிய சேனைகளு மதற்குத்தக்க வதிபர்களா
மவமில்விடவக் கிரன்விடங்க னணிகொண்டயன்மால் செய
ல்தாங்கி
யவனிமுதலைம் பூதமுந்தா ளுகியிறைமை புரிந்தனனே.

பொழிப்புரை.

அவ்வாருகிய பண்டாசுரனைக்காட்டிலும் வலிய அவன் பிள்ளைகளும், அவர்களின் வலிய-மந்திரிகளும், அவர்களின் வலியராகிய சைந்யங்களுக்குத்தகுதியாகிய விஷவக்கிரன், விடங்கன், என்னும் சேனுபதிபர்களும், சூழ்ந்து கொள்ளப் படைகளை வகுத்துக்கொண்டு பிர்ம்ம, விஷ்ணுக்களினது செயலைத்தானே வகித்துக்கொண்டும்-பிருதிவி முதலாகிய பஞ்ச பூதங்களுந்தாளுகச்செய்தும் ஆண்டு வந்தான் - என்றவாறு. (௨௨)

கொடுங்கோன்மன்னர் குடைநிழற்கீழ்க் குடிபோற்சுரர்கள்
வெருவுற்று
நடுங்காவிரிந்தா ரலைக்கடலு ணண்ணுமுனிவிர் தவமகற்றி
நெடுங்காலங்கற் றுணர்ந்தமறை நியமயாக முதல்வினைகள்
விடுங்காணெனலும் விட்டகன்றார் வெய்யோனிருந்தா ளிட
ந்தனையே.

பொழிப்புரை.

கொடுங்கோலரசன் அரசாட்சிசெய்கின்ற ராஜ்யத்திலிருந்தகுடிஜனங்களைப்போலே தேவர்களெல்லாம் பயந்து நடுக்கமுற்று ஓடிச்சமுத்திரத்தில் ஒளிந்துகொண்டார்கள் - முனிவீரே! இனியுங்கள் தவங்களை விட்டுவிட்டு நீண்டகாலமாகப்படித்தவேதம், ஓமம், நியமம், யாகங்கள் முதலிய கருமங்களையும் நீக்குங்கள் என்றுசொன்னஉடன் எல்லாவற்றையுமவனிருக்குமண்டலங்களின்மட்டு நீங்கினார்கள் என்றவாறு. (௨௩)

துயரம்புக்கு வெருவண்டத் துலகிலமர்மாலயன்கோடி
யயனிற்சென்று மகத்தருள்யோ கமர்தல்கண்டோர் சிறையி
ருந்து
செயல்யாம்பெறுவதெதுவென்று தெரிக்குமவர்க்கின் பூத
வுதனை
[illegible] மமுதளித்துக் கொண்டாளவுனன் செகதி
ன்மே.

சுத்ததத்து வத்தலங்கள் சூழ்ந்துசூர னுயிருரன்
சத்தயாதி கரணமாறித் தானடத்தல் கோடவே
பித்தமுற்றி டச்செயம்பெ றப்பதாதி மாதுகண்
டத்தம்வாங்கி விற்சிலீமு கந்தொடுத்த திர்த்தனள்.

பொ + ரை.

சுத்த தத்துவமாகிய புவனத்திலும் சென்று பரவி பண்டாசுரன் அவ்வுலகச்சீவர்களின் விவேகத்தை சப்த முதலாகிய புலன்கள்மாறி அந்தக்கரணங்கள் பேதப்பட்டுப் பயித்தியங்கொள்ளும்படிச்செய்து செயம் அடைந்திருப்பதை சேனாதிபதியாகிய மாயாசத்தி கண்டு ஆக்கிரமித்து வில்லை வளைத்து பாணங்களை விடுத்து ஆரவாரித்தனள் - என்றவாறு. (உஎ)

கைப்பிடித்த முதல்வீர கண்டவோசை கணகணென்
றொப்பினீல வெற்பையன்ன வோங்கன்மேற்சம் பற்கரி
செப்பொணாத கோடிகோடி செல்வமாத ரிறகர்கொண்
மைப்புரத்த யத்தின்வீர சத்திவானின் வந்தனள்.

பொழி + ரை.

அநேக விதமாகிய ஆயுதங்களைக் கைகளில் வைத்திருக்கின்ற வீரமகா சத்தியின் வீரகண்டாமணியோசை கணகணவென்று சப்திக்கவும், சமதை சொல்லக்கூடாத நீலபருவதத்தையொத்த யானையின்மேல் ஏறிக்கொண்டு சம்பத்க்ரியென்னும் சத்தியுடனே கணக்கிட்டு முடியாத கோடி கோடி ஸ்ரீ சத்திகள் இரக்கைகொண்டு பறக்கின்ற நீலப்புரவியிலேறிச் சூழ்ந்து வரவும் வீரமஹா சத்தியும் ஆகாசமார்க்கமாக வந்தனள் - என்றவாறு. (உஅ)

சக்கராயு தத்திறேடு தாங்குபல்ப டைகளும்
மிக்கவண்டில் பூண்டதேரும் வேந்தர்வேந்த ணுக்கினு
சக்கரத்தினூழிகொண்டு தாவும்வைய மூர்ந்துபல்
லக்குரோணி வானிசூழ வண்டமார்த்தெழுந்தனர்.

பொ + ரை.

சக்கராயுதம் முதலாகிய அநேகஆயுதங்களும், மிகுந்தசக்கராகாரமாகிய வண்டில்பூண்ட ரதங்களும், சக்கிரவர்த்தியினது ஆஞ்ஞாசக்கிரம்போலும் செல்லுகின்ற ரதாரூடிகளுடனே அநேக அக்குரோணியாகியசேனைகள் சூழ்ந்துவரவும், அண்டங்களிலும், ஆரவாரங்கொள்ளும்படி யெழுந்தார்கள் என்றவாறு. (உகூ)

மேருவைச்செவிக்கணிந்த வீரசத்திநித்திலத்
தாரசைத்து வெண்குடைதரித்தலைத்த திக்குமேழ்
வாரிநீரடங்கலும்மி மச்சிதாப்படக்குலாய்
வீரமாதர் பீலிவீச வேய்வர்போகி யணியினே.

போ + ரை.

மகாமேருவையே காதுகளுக்குப்பொன்னோலையாகத்தரித்த வீரமகாசத்திகள் முத்துமாலைகளணிந்தும் சுவேதசத்திரம் பிடித்தும், அலைவீசியொலிக்கின்ற ஏழுகடல் நீரையும் பனித்திவலைபோலே ஆகும்படிச்சூழ்ந்துகொண்டு அஷ்டமாநாகங்களையும் மாலைபோலே தரிக்கின்றவீரமாதர்களும் வளைந்தார்கள் - என்றவாறு. (௬௰)

நிமுருமண்டமதையெடுத்து நெடுவிசும்பின் வீசிடும்
மமர்கழங்கி னுவிநீர்தெளிக்குமந்தலைக்கொளும்
மிமிரும்மஞ்சை யுடுவின்வேநதை யெங்கும்கந்தம் வீசவே
சுமனமாரி வீசியார்க்குஞ் சூலிகோடி கோடியே.

போ + ரை.

நெருங்கிய வண்டங்களைக்கையால்வாரி நீண்ட ஆகாசத்திலே கழற்சிக்காய்போலே வீசியெறிவார்கள். சிலர் வாசனைநீரைத்தெளிப்பார்கள், சிலர் அழகியதலையிலே ஒலிக்கின்ற மேகத்தையும், சந்திரனையும் தரித்துக்கொள்ளுவார், சிலர் பரிமளம் வீசும்படி புட்பமாரிபொழிவார்கள் இப்படியாகக்கோடிகோடி சத்திகள் வந்தார்கள் - என்றவாறு. (௬௧)

அலகைவெங்கொடியுயர்த்த வாளியூர்தி காகளம்
உலவுசண்ட பேரிடிண்டி யுருமுவின்முழக்கிடும்
ஒலிவிராவ வேவல்செய்யும் யோகினிக்கணங்களும்
வலவைதுற்கை காளிகோடி வயிர்பிடித்திரைக்குமால்.

போ + ரை.

பேய்க்கூட்டங்கள் துவசங்கள்பிடித்துவரவும் துர்க்கையின் சத்திகள் எக்காளம், ஓயாதசண்டபேரி, டிண்டிமம், இந்தவாத்தியங்கள்மேகத்தினிடிபோலே முழக்குகின்ற ஓசைபரவவும், ஏவல்செய்கின்றகாளியின்சத்திகள் டாகினி, சாகினி, துர்க்கை காளிகளும் கொம்பூதி ஒலிக்கின்றார்கள் - எ + று. (௬௨)

இந்தினைப்பி ளந்துவைத்தெ னத்துலங்கெ யிற்றினர்
நந்தொலித்தி டக்கரங்க ளாயிரம்ப டைக்குநர்
விந்தைவேறு செய்கபாலி வீரசூர மாதர்கண்
மைந்துளத்த மைவராகி வடுகிகோடி கோடியே.

பொழி + ரை.

சந்திரனைப்பிளந்து பதித்ததுபோலே பற்களையுடையவர்களும்; ஆயிர ங்கைகளிலும் ஆயிரம் சங்கங்களை பிடித்தூதுகிறவர்களும்; மாயாசத்தியைச் செய்கின்ற காபாலிகளும், வீரசத்திகளும்; சூரசத்திகளும, கடினசித்தத் தையுடையவராகியும், துர்க்கைகளும் அனேகம் கோடிக்கணக்கிற் சூழ்வார் கள் - என்றவாறு. (௬௩)

கொக்கரித்த தட்டுவார் குயின்மடங்கல் போலுமா
ரக்கணத்தில் வெறிகொள்விட்டி லலவனைப்பி டித்தலிற்
புக்குபண்ட வவுணன்சேனை வீரபோரக்க டுத்தொலி
மிக்கிடக்க ருள்வளைநத வாற்மாக்கண் வீறினர்.

பொழி + ரை.

கெற்சித்து அதட்டுவார்கள். மேகத்தினிடிபோலே வீரவெற்றியைக் கூறிக்கொண்டு வீரசத்திகள் வளைந்த தட்சணத்தில் கலக்கமடைந்த விட்டி ற்பூச்சி சூரியனைப்பற்றுதல் போலே புகுந்து பண்டாசுரன் சேனாதிபதிகள் சேனைகளுடனே யுத்தகளத்தைச்சேர்ந்து இருள் மிகுதியாய் வளைந்தது போலே சண்டையில் முயற்சிகொண்டனர் - என்றவாறு. (௬௪)

தலையுவாவி னெய்யுமம்பு தாக்கணங்கு கண்டுவிற்
குலையவைத்தி சைத்துவாளி கோடிகோடி தாக்கிட
நிலையிழந்து பண்டன்சேனை நீறெழுத்த டிந்திடத்
தலையிழந்து முடலழிந்து தரையில்வீழ்ந்து ருண்டவே.

பொழி + ரை.

அமாவாசையின் இருளைப்போலே அசுரன் பிரயோகஞ்செய்கின்ற பா ணங்களைக்கண்டு, கண்டவர் நடுங்கும்படி வீரசத்திகள் வில்லை வளைத்து அ ம்புகளைக் கோடி கோடியாகத்தொடுத்து விடுக்கவும், அதினல் பண்டாசுர ன் யுத்தஞ்செய்கின்ற நிலமைதப்பிச் சேனைகள் நீருகும்படி குறையச் செ ய்வதினல் அநேகந்தலைகளை யிழந்து சரீரம் கெட்டு பூமியில் விழுந்து புர ண்டதுகள் - என்றவாறு. (௬௫)

வேறு.

சேனைம டிந்திட நோக்கிவி டங்கன் றேரினி லார்ப்பரியாப்
பானுவி ராகுதொ டர்ந்தது போலப்பகவதி யநிகங்கண்
டானிபு ரிந்திடு வேனென விழிசொரி யனலொடு வில்லைவ
ளைத்
தூனமி லொன்றுபி னொன்றுது டர்ந்திட வோட்டினன்
வாளிகளே.

பொ+ரை.

பண்டாசுரன் மந்திரி சேனுபதியாகிய விடங்கனென்பவன் தனது சைன்யங்கள் மடிவதைப்பார்த்து ஆரவாரித்துச் சூரியனை இராகுப்பிடிக்கத் தோடர்வதுபோலே, வீரசத்தியின் சேனைகளைப்பார்த்து இதோ நாசஞ்செய்துவிடுகிறேனென்று கண்களில் அக்கினி கணங்கள் சொட்டவும் வில்லைக் கையிலெடுத்து வளைத்து ஒன்றுபின் ஒன்று தொடருய படியடுக்கடுக்காக அநேக பாணங்களைப் பிரயோகித்தான் - என்றவாறு. (௯௬)

வல்லமர் செய்திடும் மந்திரி விடுகணை வடுகிகண் மெய்யுருவி
யல்லல்பு ரிந்தன முத்திரு ணிச்சூ ரானவள்கண்டு கையில்
வில்லொலி செய்துச ரங்களை யெய்யவி டங்கன்மெய் பட்டி
டலும்
கொல்லென வீழ்ந்துநி லத்தினு மூன்றே குருதிகள் கக்கி
னனே.

பொழி+ரை.

வலியயுத்தத்தைச்செய்கின்ற விடங்கன்விடுகின்ற பாணங்கள் துர்க்கா சத்திகள் மெய்யிற்பட்டுருவித்துன்பஞ்செய்யவும், அதுகண்ட முத்திருணியென்கிற தெய்வசத்தியானவள் தன்கையிலேவில்லையெடுத்துக்குணத்தொனிசெய்து பாணங்களை விடுக்கவும், அதுகள்மேலேதைத்துருவிப்போகவும் விடங்கன் சப்தத்துடனே நிலத்தில் விழுந்து ரக்தங்களைக்குபீலென்றுகக்கினன் - என்றவாறு. (௯௭)

அண்டமு ருண்டுகி டப்பது வென்னவி டங்கன மிழ்ந்தவிதங்
கண்டனன் விடவக் கிரனதி கோபக் கனலெழ விரதமதிற்
கொண்டெயி றிதழூற நொடியினி லாவரி கோடிகளெய்திட
லும்
விண்டுபின் னேக்கவ ராகிவி லேற்றிவி டுத்தனள் சரமாரி.

போ + ரை.

அஸ்திரமானது பூமியில் உருட்சையாகக்கிடத்தல்போலே விடங்காசுரனிறந்த விதத்தைப்போர்க்களத்திற்கண்டு விஷவக்கிரன்மிகவும்கோபமடைந்து அக்கினிப்பொறிகள் சிந்தவும் இரதத்தின்மேலேறிக்கொண்டு பல்லைக்கடித்து நிமிஷத்தில் கோடிபாணங்களையேவுதலும், முத்ருணிசத்திபயந்து திரும்பிப்போகவும், அதை வராகிசத்திகண்டு வில்லைவளைத்து அநேகபாணங்களைவருஷித்தாள் - என்றவாறு. (௬அ)

மண்ணொடு விண்ணினின் மண்டிட விடுகணை வடவழன் மொய்த்தனபோல்
நண்ணவு மொன்றுட னொன்றிற வொன்றுவிண் ணுடுற வவைகண்ணுற்
றண்ணல்வராகிக லங்கிப் பரையென வங்கமெ ணெண்கோடி
துண்ணென யோகினி யென்றவர் சூழ்ந்தனர் துன்றிய வடுகளமே.

போ + ரை.

பூமியினிடத்தும், ஆகாசத்திலும், அதிகமாக அசுரன்விடுகின்ற பாணமானது வடவாக்கினியைப்போலேசென்று ஒன்றுடனொன்று பட்டுச்சிதையவும், ஒன்று தேவருலகிற் செல்லவும், அப்படிச்செய்கின்ற விபாபதத்தைப்பார்த்துவராகிசத்தி மனங்கலங்கிப்பராசத்தியைத்தியானிக்க அநதப்பரையின் ஆக்ஞையினால் அறுபத்துநாலுகோடி சேனைகள் துண்ணெனவே சூழ்ந்துகொள்ளயோகினிசத்திகள் யுத்தகளத்தில் வந்துசேர்ந்தார் - எ + று. (௬௧)

உற்றவர் விடவக் கிரனுயி ரொருநொடி யொருவிட வவனுடலம்
பற்பம தாகவ ரைப்பக் கண்டனன் பண்டா சுரன்மைந்தர்
செற்றமு டன்கடு வேனின்ம டங்கலின் சேனைக் குவடோடு
மற்புத நிற்புத யாளிக் கரிபரி யதனொடு மமருற்றார்.

போ + ரை.

அறுபத்துநாலுகோடி யோகினி சத்திகளுடனே வராகிசத்தியானவள் ஒருநொடி காலத்திலே யுத்தஞ்செய்கின்ற விஷவக்கிராசுரன் சேனைப்போக்கி அவன் கைகால் முதலிய அவயவங்களைப் பொடியாகக் காலகளினாலே தேய்த்ததைப்பார்த்தும் பண்டாசுரன் குமாரர்கள் கோபத்தோடு கடுங்கோ

டையிடிபோல எழுந்திருந்து சேனைக்கூட்டங்களும் அற்புத விற்புதமென்கிற யாளிகளும், யானைகளும், குதிரைகளும் அதுகளோடும் வந்து சண்டை செய்தார் - என்றவாறு. (௪௰)

சிற்பரை யருகுற வாலைய ணங்குவி சித்திர ரதமேறிப்
பற்பக ரப்படை யால்வெகு வெள்ளம் பட்டிட வேபுரியாத்
தற்பமு டன்வரு மைந்தரு ரத்திற் றுக்கினள் பிரமசரம்
வெற்பினி டித்தது வென்னவு மண்ணினில் வீழ்ந்தவர் மா
யந்தனரால்.

பொழிப்புரை.

பராசக்தியின் பக்கத்தில் வருகின்ற அசுரனைக்கண்டு வாலாம்பிகையானவள் விசித்திரமாகிய ரதத்தின்மேலேறிக்கொண்டு தனது தாமரை மலர்கள்போலும் கையினால் அநேக அஸ்திரசஸ்திரங்களால் வெகு வெள்ளங்களை யதஞ்செய்து அதிக கறுவங்கொண்டு வருகிற அசுரன் மக்களுடைய மர்மஸ்தலத்தில் பிரமாஸ்திரத்தையெடுத்து விடுவித்தாள், அது மார்பிற்பட்டு மலையினிடிவிழுந்ததுபோலே மண்ணில் வீழ்ந்து அசுரர் மரணமடைந்தார்கள் - என்றவாறு. (௪௧)

மைந்தரும் மந்திரி யும்பெரு யூகமும் மாய்ந்திட வவுணன்
சிந்தைகலங்கிய் கோரவ லந்தலை சிவணிடவேயலறிப் [மிகச்
புந்திதெ ருண்டுயி ருக்குயிர் தீர்ப்பலெ னக்கணை புட்கரமுங்
குந்தமு டன்வெகு கோடிப ரிக்கரி கொண்டலின் மொய்த்
தனனே.

பொழிப்புரை.

தன் குமாரரும், மந்திரிகளும், பெரிதான சைன்யங்களும் இறந்துவிடப்பதைக்கண்டு பண்டாசுரன் மனதுகலங்கி கொடூரமான வியசனத்தையடைந்து ஓ! வென்று கதறிக்கொஞ்சம் மனது தெளிந்தவனாகி இவர்களைக் கொன்றகொலைக்குக் கொலைவாங்குவேனென்று பாணங்கள், வாட்கள், வேலாயுதங்களோடும் அநேகம் குதிரை, அநேகம் யானைகளைத் துணைக்கொண்டு நீருண்டமேகம்போல் வந்து மூடிக்கொண்டான் - என்றவாறு. (௪௨)

அம்பிகை தண்டம டங்கந டுங்கிட வந்தர வீதியினில்
வெம்பியெ திர்ந்துவி டுங்கணை தைத்திட மெல்லியுள் பின்று
டரா
நம்பினெ னம்பினெ னென்றவர் தங்களை நாடியி ராசேசை
நமபுரா யுஙகவ ளேர்ந்துற வெண்ணிட நண்ணிய தவ்வணமே.

பொ + உரை.

வாலாம்பிகையினது சேனைகளெல்லாம் பயங்கொள்ளும்படி ஆகாச வீதியிலே ஆங்காரத்துடனே சென்று வில்லேறிட்டுத்தொடுத்து விடுக்கின்ற பாணங்களானது. தைத்திடவும், பராசத்தியைப்பின்னே தொடர்ந்துபோய், அடைக்கலம் அடைக்கலமென்று சரண்புகுந்த அம்பிகையின் பக்கலில் வந்து. பராசத்தியும் நமது பட்டணத்தைச்சுற்றி அக்கினிகோட்டையாகுகவென்றெண்ணிய மாத்திரத்தில் அந்த விதமே அக்கினி வளைத்துகொண்டது - என்றவாறு. (௪௩)

வேறு.

அங்கியெயி னடுவிருந் தவுணர்படை யொழிவுறவு
மதிமோக ஞத்திரம்விட்
டங்கிருந் தவர்மாட றேர்ந்துபண் டாசுரனு
மவதியேய்ந் தப்புரிசையுஞ்
சங்கரிய னீகமும் மாய்விக்கி னப்படை
தனைப்பெயவு நிருவிக்கினப்
புங்கமெய மங்குனிக ரங்கன்மாய்ந் திடவெயில்
போக்கிப்பகன் று மெழுவான்.

பொ + ரை.

அந்த அக்கினிக்கோட்டையின் நடுவில் நின்று. அசுரன்சேனைகளெல்லாம் மடிந்து போகும்படி. மிகுதியான மோகஞஸ்திரத்தை விடுத்தகாலத்தில் அங்கிருந்த அசுரர் சேனைகள் இறந்தது தெரிந்து பண்டாசுரன். ஆபத்தையடைந்து. கோபங்கொண்டு அந்த அக்கினிக்கோட்டையும் அம்பிகையின் சேனைகளும் மடியும்படிக்காகிய விக்கினஞ்செய்கின்ற மந்திராஸ்திரம் வருஷிக்கவும் அதைக்கண்ட அம்பிகையும்; நிருவிக்கினஞ்செய்கின்ற மந்திராஸ்திரத்தை வருஷித்து மாய்த்தும் மேகம்போலும் தேகத்தையுடைய அசுரன்மாயும்படி. சத்தியாயுதத்தை விடுத்துஅவன்தேகத்தைப்பிளந்தும், உயிர்பெற்றெழுந்து உத்தஞ்செய்யப்புறப்பட்டான் - என்றவாறு. (௪௪)

சோதிமறைகளைவாரி வாரியிலொளித்திடு
சோமுகாசுரன் மானவே
கோதில்பரைமீதமர் தொடுக்கவவள் கரகங்
கொட்டவுஞ் சகுலியுருவாப்

பீதிகொள வலவவுணனுவியைச் செற்றிடப்
　　பின்புனற் பிரளையம்போற்
சேதம்புரிந்திடலும் மற்றுகிர் தெறிக்கவஞ்
　　சிதவாமை யட்டும் வருவான்.

பொ + ரை.

சோதிசுரூபமாகிய வேதபுஸ்தகங்களை யெடுத்து சமுத்திரத்தில் ஒளித்த சோமுகாசுரனைப் போலே வந்து யுத்தஞ் செய்யவும்; தேவியும் தன்கைகள்; விரலைத்தெறிக்கவும், அதிலிருந்து தோன்றிய மச்சவுருவஞ்சென்று கொல்லவும் பின்னரும் பிரளையம் போலே வந்துசண்டைசெய்யவும், தேவிதனது மற்றொருவிரலைத்தெறிக்கவும், அதிலிருந்துண்டாகியகூர்மவடிவம் சென்றுவதைக்கவும், பின்னரும் யுத்தஞ்செய்ய உயிர்பெற்றெழுந்து வருகின்றான் - என்றவாறு.　(௫௫)

தடம்புவியடங்கலும் பாய்போற் சுருட்செய்தே
　　சாகரத் துட்கரந்த
விடம்புரை யுடற்கண்ண னெனவமர் பொரக்கையின்
　　விரலெறீஇ மோழ லுருவாய்ச்
சடம்படு மவன்றனுயிர் வீட்டமற்றவனெழூஉத்
　　தமனியாசுரனை யொப்பா
யடர்ந்திடப்பின்னரும் மங்குலியி னரியுதித்
　　தடலும்மா வலியி னுறுமால்.

பொ + ரை.

விசாலமாகிய பூமியைப்பாயலாகச்சுருட்டிப்பாதாளலோகத்தில் ஒளிக்கின்ற விஷம்போன்ற இரண்யாட்சனைப்போலத்தோன்றி யுத்தஞ்செய்யவும். பின்னும், தேவிதன் விரல்நகத்தைத்தெறிக்கவும், அதிலிருந்து வராகரூபந்தோன்றி யுத்தஞ்செய்து மாயையாகத்தோன்றிய சரீரத்தைகொல்லுதலும், பின்னும், உயிர்பெற்று இரணியாசுரனைப்போல் நின்றுயுத்தஞ்செய்யவும், தேவிபின்னும், விரல்நகந்தெறிக்கவும், அதில்நின்றும், நாசிம்மரூபமாய்த்தோன்றிச்சண்டைசெய்து மாய்த்திடவும், பின்னும், உயிர்பெற்று மகாபலிபோல்வந்துநின்று சண்டைசெய்தான் - என்றவாறு.　(௫௬)

கற்பமுடி வெனவடர்தல் கண்டுமுன் னெனநகங்
　　கற்பித்த வாமன னெனும்
மற்பவுரு விற்பொருஉத் திரிவிக்கி ரமனு
　　யரைத்திடக் குருகுலத்தோ

தேவியார் மகிமைதெரித்த வத்தியாயம். (௱௫௭)

ரெற்படுபெ தாதியொடு மலைதலி னெதிர்த்தலும்
மிறையுகிர்த் தோற்றி முசலி
பிற்கண்ண னுயட விலங்கேச னிற்சமர்
பிடித்திடப் பரையு மெதிர்வாள்.

பொழி + ரை.

பிரளையகாலம்போலேவந்து யுத்தஞ்செய்வதுகண்டு தேவிபின்னரும், விரல்நகந்தெறிக்கவும், அதிலசின்று வாமனவடிவுண்டாகி யுத்தஞ்செய்து சிற்றுருவாய்சின்ற வாமனன் திரிவிக்கிரமனுய்த் தோன்றித்தன் அடிகளாற் றேய்த்து விடுதலும், பின்னும், உயிர்பெற்றுக்குருகுலத்தரசர் காந்தியுடைய சேனைகளுடன் வந்துசண்டைசெய்தல்போலே யெதிர்க்கவும், தேவிபின்னும், தன்நகத்தைத்தெறிக்க வதில்சின்றும் எழுந்த பலராமகிருஷ்ணர்கள் சென்று யுத்தஞ்செய்து மாய்த்திடவும், பின்னரும் உயிர்பெற்று இராவண ன்போலே யுத்தஞ்செய்யத்தேவியும், எதிர்த்து யுத்தஞ்செய்தாள் எ+று, (௪௭)

கணைகளொடு கணையிழைந் திருவிசும் பெங்கணுங்
கண்டவண் டங்களுருவி
யணையில்வட வையையணுக வவ்வடவை யெவ்விடம்
மாற்றுவோ மென்றோடவும்
மிணையிலமர் முயலுறும் போதுகிர் தெறித்திடலு
மெழிலிரா கவனி னந்திப்
பிணிதவர் வளைத்திருத் திடவமணர் போல்வரப்
பின்னுமயமாக் கொல்லுமே.

பொழி + ரை.

மாயாராவணுசுரனும், தானும் யுத்தஞ்செய்கின்றதில் ஒவ்வொரு பாணங்களுந்தாக்கிப்பெரிய ஆகாசமெங்கணும் கண்டங்களாகிய அண்டங்களிலும், போயுருவித்தடையில்லாமல் வடவாக்கினியையும், துரத்த அவ்வடவை இந்தப்பாணங்களின் விஷஜ்வாலைகளைச்சகிக்காமல் ஓடவும் ஒப்பில்லாமல் யுத்தஞ்செய்யும் போது, தேவிதனது கைநகத்தைத்தெறிக்கவும்; இராமன் போலுதித்து நாணேறிட்டவில்லை வளைத்து பாணவருஷத்தால் கொல்லவும், பின்னும், உயிர்பெற்று சமணர்களைப்போலே யுத்தஞ்செய்யப் பின்னரும் நகந்தெறிக்கக்கற்கியாய் வதஞ்செய்து கொன்றுவிட்டாள் - என்றவாறு, (௪௮)

பின்னரும் வெகுமாய வடிவெடுத்தமர்செயப்
பெலமெலா மழிக வொல்லைத்
தன்னுரு வடைந்துயுத்தம்புரிய நாரணன்
சரம்விடுத்தவனை மாய்த்தாண்
மின்னடற் பேரிகை முழங்கவசுரன்குருதி
வீரையி னலைக்க வலகை
மன்னிரத மம்பியாத் தசைநுகர்ந் திடவமரர்
மலர்மழை பொழிந்தனரரோ.

பொ + ரை.

இறந்தும், பிறகும், அநேகமாயாசொரூபங்கொண்டு யுத்தஞ்செய்யவும் அந்தந்தவுருவங்களை வதஞ்செய்யவும் பின்னும் தன்பழயவுருவாகிய பண்டாசுரனுகவே வந்து யுத்தஞ்செய்யவும்; நாராயணுஸ்திரம் தொடுக்கவே அவனும் மாய்ந்துவிடவும் வீரசத்திகள் செயபேரி முழக்கவும், அசுரன் தேகத்திலிருந்துண்டாகிய ரக்தக்கடல் அலைக்கவும், அவனிரதத்தைப்பிசாசுகள் தோணியாகச்செலுத்தி யிறைச்சிகளைத்தின்று கொக்கரிக்கவும்; தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள் - என்றவாறு. (சக)

வேறு.

அனைய மாலய னரன்புரந் தரனொடு மண்டர்
சினவர் நீங்கின ரென்றவர் தங்களிற் றெரித்து
மனகை முன்னவர்வந் தருவெரு வந்தீர்ந் தனம்யா
மெனவு மவ்வவர் வினைவிடை பெற்றுமீண் டிழைத்தார்.

பொழி + ரை.

அவ்விதமாகிய மஹாவிஷ்ணு, பிர்ம்மா, உருத்திரன், இந்திரன், இன்னமும் சகல தேவர்களும், ஒருவருக்கொருவர் நமது பகைவன் தீர்ந்துவிட்டானென்று சந்தோஷ வார்த்தைகளைப் பாராட்டிக்கொண்டு அயலையாகிய பராசத்தியின்றிருமுன்னர் வந்து எங்கள் பயங்கரத்தையின்று விட்டொழிந்தோம் என்று புகழ்ந்துரைத்தலும், தேவியார் அவர் தங்கள் தங்கள் இருத்தியங்களைக்கொடுத்து உத்திரவுங்கொடுக்கவே முன்போலே தங்கள் இருப்பிடஞ்சென்று அந்தந்தத் தொழிலைச்செய்திருந்தனர் - என்றவாறு. (இ௰)

அத்திறம் படைப்பதற்கெலா மாதியாம் மூல
சத்தியாகுமுன் றன்னுருவானவா னந்தச்
சித்துருச்சின் மயஞ் சிறந்திடு மிந்தமா தானம்
மித்தன் மண்ணினிற் குங்குமாம் பிகையென நிகழ்த்தும்.

பொழி + ரை.

அந்த விதம் உலகம் சிருட்டிப்பதற்கெல்லாம் ஆதிகாரணமாகியும், மூலபிரகிருதியாகியும்முள்ள நின்றன் வடிவமாகிய சச்சிதானந்தமேயாகுகின்ற அந்தத்திருத்தலையூரென்னுந்தலமாகும். அதில் வசிக்கின்ற நின்னையிந்தலோகம் குங்குமாம்பிகையென்று தோத்திரஞ்செய்யுமென்று சிவபெருமான்றிருவாய் மலர்ந்தருளினர் - என்றவாறு. (௱௩)

பாசிழைப் பரை தனக்கருள் செய்துமே பரமன்
மாசிலத்தல முணர்ந்தவர் கேட்டவர் வரைந்தோர்
தேசு சேர்வர்தீ வினைதெற வெட்டெனுஞ் செல்வ
வாச மார்குவ ரெனவதன் றகைவழங்கினனே.

பொ + ரை.

பசியபொன்னுபரணம் அணிந்த பார்வதி தேவியாருக்குச்சொல்லிப் பரசிவனுகிய நாம் வசிக்கின்ற குற்றமில்லாத இந்தஸ்தலத்தைத் தெரிந்தவரும், கேட்டவரும், எழுதினவரும், தேஜசையடைவார். அதுவன்றிப் பழவினையை நீங்குவார்கள், அதுவல்லாமல் அஷ்டைசுவரியமும் தங்களிடம் தங்கியிருப்பார்கள் என்று சொன்னர் - என்றவாறு. (௱௪)

ஆதி சேடனன் றமரர்கட் குரைத்திடும் விதமும்
சோதி நாதனு ருமைக்கிசைத் தருள்சுயா மளையும்
சூத மாமுனி யோதுசங் கிதையினும் பின்னும்
வேத நான்கிடை யுரைத்தவத் தலவளம் மிகுமே.

பொ + ரை.

ஆதிசேடன் பூர்வம் தேவாகளுக்குச்சொன்னவிதமும், ஸ்வயம் பிரகாசராகிச் சிவபெருமான் பார்வதிக்குச் சொல்லிய ருத்திரயாமளையமும், வேதமத்தியிலும், சொல்லுகின்ற வத்தலம் மிகுந்த பெருமையுடையதாகும் என்றவாறு. (௱௫)

மாம றைகளுஞ் சைவவ கமங்கள்வாய் மலர்ந்த
சோம சேகரன் றிருத்தலை யூர்த்துதி மாண்பைச்
சேம மோடுபொண் டவர்களுஞ் சிரவணித் துவந்து
சாமி தாற்பிய மாமுனி சரண்பணிந் தனரால்.

பொழி + ரை.

மகத்தாகிய வேதங்களும்; சைவாகமங்களும், திருவாய் மலர்ந்தருளிய சந்திரசூடராகிய ஸப்தரிஷீசுவரா வஸிக்கின்ற 'திருத்தலையூர் ஸ்தலமான்மியத்தை. மங்களகரமாகத் பாண்டவர்களும், கேட்டு மனமகிழ்ந்து-குருவடிவாகிய தால்ப்பியமகாமுனிவர் திருவடியின்கண் நமஸ்கரித்தார்கள் - என்றவாறு. (௩௪)

அளித்தி டுஞ்சது முகனிரண் டாம்பரார்த் தத்திற்
களித்த வெள்ளரிக் கற்பவை வச்சுத மனுவி
னுளத்தி லம்பர வொலிதழைத் தோங்கவே யுவந்து
தளித் திருத்தலைத் தலவள முரைத்தன னின்றே.

பொ + ரை.

உலகத்தைச்சிருஷ்டிக்கும் பிர்மதேவர் இரண்டாவது பரார்த்தத்தில் மகிழ்கின்ற சுவேதவராக கற்பத்தில்- வைவஸ்வதமன் வந்தரத்தில் இருதயாகாசத்தில் ஒலிக்கின்ற நடநகுஞ்சிதபாதம் தழைத்தோங்கும்படித் திருக்கோயிலையுடைய திருத்தலையூர்த்தலமான்மியத்தை யான் சொன்னேனென்றார் நூலாசிரியர் - என்றவாறு. (௩௫)

பாண்டு மைந்தர்கள் பலனுற வுரைத்தவா ரியச்சொ
லீண்டு தென்மொழிச் செய்யுளா னூற்றொடு மொன்பா
னூண்டு செல்கலி யுகமதற் கெழுபதற் கெழுபான்
பூண்ட நான்மொழிந் தனன்புவிச் சுரர்குலத் தவனே

பொ + ரை.

பாண்டவர்கள் காரியசித்தி பெறச்சொல்லிய வடமொழியை இப்பொழுது. தென்மொழியில் நானூற்றொன்பது செய்யுளாகச் செல்லாநின்ற கலியுகாதிவருஷம். நாலாயிரத்துத்தொளாயிரம் சேர்ந்ததினத்தில் பிராம்மணகுலத்திற்பிறந்த நான் சொல்லி முடித்தேன். தற்சிறப்புப்பாயிரம் - என்றவாறு. (௩௬)

வேறு.

அஞ்சவன்னம் வாழிதே சகோரமூர்த்தி வாழிதண்
மஞ்சுபெற்ற வானம்வாழி வையம்வாழி மகவழ
லஞ்சும்வாழி யையர்மன்ன ராதியோர்கள் வாழியே
தஞ்சநல்கு நீறும்வாழி தானதன்மம் வாழ்கவே.

பொ + உரை.

பஞ்சாட்சரமும் வாழக்கடவது. தேஜோன்மயமாகிய அகோரமூர்த்தியாகிய ஸப்தரிஷீசரும் வாழக்கடவது. நீருண்டமேகஞ்சூழ்ந்த ஆகாசமும் வாழக்கடவது. பூலோகமும் வாழக்கடவது. யாகாக்கினியையுடைய பஞ்சஎக்ஞமும் வாழக்கடவது. பிராம்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களென்னும் நாற்சாதியர்களும் வாழக்கடவது. மேன்மைதருகின்ற விபூதியும்வாழக்கடவது. தானமும, வாழக்கடவது. தருமமும் வாழக்கடவது - என்றவாறு. (௫௭)

சோதிஞானம் வாழ்கநான்கு சுருதிவாழ்க கைலையான்
பாதிகுங்கு மாம்பிகைப் பதங்கள் வாழ்க நூலெலா
மோதிநின்ற முனிவர்வாழ்க வுத்தியெண்மர் வாழிய
பூதிசேர்தி ருத்தலைப்பு ரிப்புராணம் வாழ்கவே.

பொழி + ரை.

ஸ்வயம்பிரகாசமாகிய ஞானமும் வாழி வேதம்நாலும் வாழி கயிலாசபதியாகிய ஸப்தரிஷீசுவரர் பாதியாகிய குங்குமாம்பிகையார் திருவடிகள்வாழி சதுஷஷ்டிகலைகளைக்கற்றுணர்ந்த முனிவர்கள் வாழி அஷ்டலக்ஷ்மிகளும் வாழி செல்வம்நிறைந்த திருத்தலையூர் ஸ்தலமும் வாழி அதன்புராணமும் வாழக்கடவது என்றவாறு. (௫௮)

தேவியார் மகிமைதேரித்த வத்தியாயம்
முற்றிற்று.

---

திருத்தலையூர் ஸ்தலபுராணம் மூலமும் பொழிப்புரையும்
முற்றுப்பெற்றது.



ஆ அத்தியாயம் கக-க்கு திருவிருத்தம் ௬௱௯௰.

---



### நடேசர்.

மறையவன்கஞ்சந்தட்ட மகதியாழ்முனிவன்மீட்ட
அரியுந்தண்ணுமைமுழக்க வமரர்பல்லாண்டிசைப்ப
வரிபுலிப்பாதன்பாம்பும் வணங்கவம்பலத்துணட்டம்
புரிசிலம்பொலித்தாளிந்தம் போற்றியேதொழுதல்செய்

### பொ + ரை.

தாமரைப்பூவையுடைய பிரமதேவன் தாளம்போடவும் நாரதமுனிவர் மகதிவீணையை வாசிக்கவும் விஷ்ணுமூர்த்தி மத்தளமடிக்கவும் தேவர்கள் வாழ்த்தித் துதிக்கவும் வியாக்கிரபாதமுனி பதஞ்சலிமுனிவரும் வணங்கிநிற்கவும் சிற்சபையின்கண் நடித்தருள்கின்ற நூபுரநாதத்தையுடைய திருவடியை நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்வோம்.என்றவாறு. (சு)

### மகேசுவரர் - வேறு.

திருத்தலையூர்த்தலைமாண்பு சேடன்பன்னுவாலு
முரைத்திடவடங்காத வுண்மைதிகழ்புராணத்தின்
பொருட்களையான்சிலதறிந்த புன்மொழியினாற்புகல
வரிக்குமனத்தெட்டாத வரனடியைத்தொழுதிருப்பாம்.

### பொழி + ரை.

திருத்தலையூரின் பெருமையை ஆதிசேஷன் ஆயிரம் நாவினாலும் சொல்லிமுடியாத மெய்ம்மை விளங்கிய புராணத்தினுள்ளிருக்கும் பொருள்களிற்சிலதை யான் தெரிந்துகொண்ட அற்பமாகிய தமிழ் மொழியினாற்சொல்வதற்கு விஷ்ணுமூர்த்தி மனத்திற்குமெட்டாத பரஞ்சோதியின் திருவடிகளை வணங்கியிருப்போம்-என்றவாறு. (எ)

### சிற்சத்தி - வேறு.

அண்டமகிலம்புவனமனையசரா சரங்கள்வயின்
முண்டகத்திலமைத்தீன்ற முக்கணுமைதிருமுன்னர்
அண்டரயனரிகுலிச னணிமகுடமோடிழையத்
தெண்டனிடுமலர்ப்பதங்க டேடிமனத்தினிற்சேர்ப்பாம்.

# சோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கக | கஎ | ங | ஞானி | ஞாளி |
| கஉ | உய | ங | கொடை | குடை |
| கங | க | க | முலைத்ழு | முலைத்தழு |
| உச | ஙய | ரு | கழணி | கழனி |
| ஙச | ருச | உ | வங்கம | வங்கம் |
| ஙசா | சாய | 0 | பாடல் | வேறு |
| சக | எஉ | ச | ளாமல் | ளாமால் |
| சங | உ | உ | சேப்பி | செப்பி |
| கூச | ரு | உ | போற்றி | போற்றி |
| ருங | எ | உ | சிவணிட | சிவணிட |
| ருசா | கசா | க | தாப்பியர் | தாற்பியர் |
| ருஅ | உய | ங | வரன் | வர |
| சாக | எ | உ | ச்கிரங் | ச்சிரங் |
| சாரு | கஅ | ச | பிசசுர | பிச்சுர |
| சாரு | ககூ | ச | விணையம் | வினையம் |
| சாஎ | உச | ங | குப்புனல் | குடப்புனல் |
| சாஅ | உஅ | க | வருத்திட | வகுத்திட |
| அக | கக | க | விண்ணுணே | வின்னுணே |
| அசா | உச | உ | கன் | கண் |
| அஎ | உஎ | உ | பட்டெருவி | பட்டுருவி |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௮௯ | ௩௩ | ௨ | மருவிலென் | மருவிலேன் |
| ௯௰ | ௩௬ | ௨ | யென்ன | யென்னக் |
| ௯௰ | ௩௬ | ௩ | டணைய | டணைய |
| ௯௧ | ௩௮ | ௧ | வளிய | வலிய |
| ௯௨ | ௪௧ | ௪ | ற்றேன்வாயி | ற்றேன்போலாயி |
| ௯௪ | ௪௭ | ௪ | பரலை | பாலை |
| ௯௬ | ௫௧ | ௩ | றிறை | றிரை |
| ௯௮ | ௫௫ | ௩ | பருதிலா | பழுதிலா |
| ௧00 | ௬௧ | ௪ | னம்மர் | னம்மா |
| ௧௨௰ | ௩௫ | ௧ | ளேடு | ளொடு |
| ௧௨௰ | ௩௫ | ௨ | குளவோ | குதளவோ |
| ௧௨௩ | ௪௧ | ௫ | யின்னுவு | யினுவு |
| ௧௨௪ | ௪௩ | ௧ | ளேடு | ளொடு |
| ௧௨௬ | ௪௬ | ௨ | சோடி | கோடி |
| ௧௩௩ | ௧௪ | ௨ | மைந்திலீ | மந்திலீ |
| ௧௩௬ | ௭ | ௩ | ரங்கிரு | ரக்கிரு |
| ௧௩௯ | ௧ | ௩ | வீச | வீசி |
| ௧௪௨ | ௰ | ௨ | யின்மை | யினமை |
| ௧௪௪ | ௧௯ | 0 | பாடல் | வேறு |
| ௧௪௫ | ௧௭ | ௨ | பதுமணை | பதுமன்றணை |
| ௧௫௰ | ௩௧ | ௧ | நிமுரு | நிமிரு |

சிவமயம்.

# அத்தியாய அட்டவணை.

